# பிரசாந்தியில் அம்ருதவர்ஷிணி

## பாகம் - II

**Published by**

Sri Sathya Sai Trust (Tamil Nadu)
7, Pugh's Road
Madras 600 028

# முன்னுரை

பிரசாந்தி நிலயத்தில் புதிய மாணவர்களும், பழைய மாணவர்களும் நிறைந்த அவையில் 1996ம் ஆண்டு ஜூன் மாதம் 16ம் தேதியிலிருந்து பகவானின் அமுத மொழிகள், அருளுரைகளாக, அம்ருத வர்ஷமாக, அமுத மழையாகத் தொடர்ந்து பொழிந்தன.

தினந்தோறும், அவரது அருளுரைகள் இடம் பெற்றன. அவை அனைத்தையும் ஒருசேரத் திரட்டித் தர எண்ணம் கொண்டு, முயன்றோம். எண்ணிக்கையில் பல பக்கங்கள் வரும் என்பதால், தொடர்ச்சி விடாது அனைவரும் படித்துப் பயன்பெற வேண்டும் என்ற உந்துதலால், பகுதி, பகுதிகளா கப் பிரித்து வெளியிட தெய்வீக சங்கல்பத்தின் துணை வேண்டி முயல்கிறோம்.

முதல் இரண்டு பகுதிகள் தற்போது வெளியாகின்றன. பகவானின் அருளால் அவற்றைப் படித்து, அவர் பாதம் பணிந்து பயன்பெற வேண்டுகிறோம்.

ஜெய் சாயிராம்!

என்றும் தங்களுடன்
சாயிசேவையில்
T.G. கிருஷ்ணமூர்த்தி
மாநிலத் தலைவர்
ஸ்ரீ சத்யசாயி சேவை நிறுவனங்கள்
தமிழ்நாடு

# பொருளடக்கம்

# 1. பயனுள்ள நிலம்

மிகுந்த கல்வியும் மிகுந்த அறிவும் கைவரப்பெற்றாலும், சீலம் (character) இல்லாவிடில் என்ன பயன்? பயனற்ற பல ஏக்கர் நிலமிருந்து என்ன பயன்? பயனுள்ள சிறிது நிலம் இருந்தாலே போதுமே?

தற்கால மாணவர்கள் மிகுந்த நேர்மையுடனும் ஆர்வத்துடனும் உலகியல் கல்வியில் கவனம் செலுத்துகிறார்கள். ஆனால் ஆத்ம சம்பந்தத்தைப்பற்றியோ, தூய்மையைப் பற்றியோ நினைப்பதில்லை.

## ஞானம் தரும் கல்வி தேவை

கருமேகங்களை நாம் காணும்போது, அத்துடன் கூட மின்னல் கீற்றையும் காண்கிறோம். அதுபோல இத்தகைய கல்விக்கும், அறிவுக்கும் இடையில் ஞானம் ஒளியூட்ட வேண்டும். தற்காலக் கல்வியின் பேரால், உலகியல் ஆசைகள் பெருகிவிட்டன. பிராந்தியப்பிரிவு மனப்பான்மை அதிகரித்து விட்டது. சாதி, கொள்கைப்பிரிவுகள் பலவாயின. மனிதத்தன்மையை இழந்து வருகிறோம். நூல்அறிவைத் தவிர நாம் வேறெதுவும் கற்கவில்லை. பணம் சம்பாதிக்கக் கற்கிறோமே தவிர, நற்குணம் சம்பாதிக்கக் கற்றுக்கொள்வதில்லை. கல்வி தவறானதல்ல, செல்வமும் தவறானதல்ல. ஆனால் நற்குணங்கள் கற்கப்பட வேண்டும். நல்ல எண்ணங்களால் மனம் நிரம்பும்போது, கல்வியறிவும் செல்வமும் நன்மைக்குப் பயன்படும். ஆனால் கெட்ட எண்ணங்கள், கெட்ட உணர்ச்சிகள், கெட்ட இயல்புகள் இவற்றால் மனம் நிரம்பினால், கல்வியறிவும் செல்வமும் தவறான வழியில் செலவழியும். நல்ல வழியிலோ கெட்ட வழியிலோ செல்வதற்கு மனமே காரணமே தவிர,

பணமோ, கல்வியோ அல்ல. ஒரு நல்ல உதாரணம். தூய நீரை, சிவப்பு பாட்டிலில் நிரப்பினால், அதன் நிறம் சிவப்பாக இருக்கும். அதே போல, நீல பாட்டிலில் நிரப்பினால், நீரின் வண்ணமும் நீலமாகத் தோன்றும். அதுபோல கல்வியும், செல்வமும் சிவப்புபாட்டிலில் நிரப்பப்பட்டால், உணர்ச்சியுடன் சம்பந்தப்பட்டால், அவை ராஜஸிக குணமாகின்றன. உடல்தான் பாட்டில். உடலின் தன்மையைப் பொருத்து கல்வியும், செல்வமும், அதற்குத் தகுந்த மதிப்பைப் பெறுகின்றன. ராஜஸ குணமுள்ளவன், உணர்ச்சி மிகுந்தவன், கல்வியையும் செல்வத்தையும் ராஜஸிக வழியிலேயே பயன்படுத்துவான். இவையிரண்டும் சத்வ இதயத்துடன் சேரும்போது, சாத்வீக வழியிலேயே பயன்படும். மனிதனின் அடிப்படை குணங்களே, நற்பய னுக்கோ, தீய விளைவுக்கோ காரணமே தவிர கல்வியும் தனமும் காரணமல்ல. மனிதசமுதாயம் சிறந்த ஆற்றல் பெற்றிருக்கலாம். ஆனால் சீலமில்லாது போனால், கல்வி யும் செல்வமும் வீணாகின்றன. சிவாஜிக்கு கல்வியறிவு குறைவு. ஆனால் நற்குண சீலன். தைரியத்திலும் வீரத்திலும் சிறந்து விளங்கினான். நீதி நெறியிலும், தர்மத்திலும் சிறந்து விளங்கினான். ''நீதி நெறிமிகுந்த சிவாஜி, நாட்டில் தர்மத்தை நிலைநாட்ட விரும்பினான். புனிதத்தன்மையை நாட்டில் பரவச்செய்ய விரும்பினான். அதற்காகப் போரிட வும் துணிந்தான். உயர்ந்த குணமுள்ள, சிவாஜி நாட்டை வென்று, நாட்டை மக்கள் நலனுக்கு அர்ப்பணித்தான். அவன் மகன் சம்பு, வீரமிகுந்தவன்; ஆனால் அவன் போன்ற அத்தகைய குணசீலன் அல்ல. ஆகவே சிவாஜி பெற்ற பேரும் புகழும், சம்பு (சாம்பாஜி) பெறவில்லை.

### சீலத்துக்கே உயர்ந்த மதிப்பு

பழங்காலந்தொட்டு, நம்நாட்டில் சீலத்துக்கு (Character) உயர்ந்த மதிப்பு அளிக்கப்பட்டு வந்தது. விதுரனும் அவனது

சிறந்த குணங்களுக்காகப் போற்றப்பட்டான். விதுரன் எத்தகைய அதர்மத்தையும், அநீதியையும் ஒருபொழுதும் ஆதரித்ததில்லை. அவன் திருதாஷ்டிரனைப் பலவிதங்களில் எதிர்த்தான். கெட்ட வழியில் செல்வதற்குப் பதிலாக, மகன்கள் இறப்பதே மேல் என்று வெளிப்படையாக திருதராஷ்டிரனிடம் கூறினான்.

திருதராஷ்டிரனுக்கு 100 புதல்வர்கள் இருந்தார்கள். அவர்களால் அவன் கண்ட சுகம் என்ன? சுகருக்கு புதல்வர் யாருமில்லை. அவரது ஆனந்தத்துக்கு என்ன குறைவு? குடும்பத்துக்கு நற்பெயர் சம்பாதிக்க ஒரு மகன் போதும். எத்தனை புதல்வர்கள் குடும்பத்துக்கு நாசம் விளைவிக்கின் றார்கள்?

இவ்வாறு விதுரன், திருதராஷ்டிரனுக்கு உபதேசம் செய்தான். சபையிலே ஊரறிய திரௌபதி அவமானப்படுத் தப்பட்டபோது பெரும் ஞானியான பீஷ்மர், துரோணர், கிருபர் அனைவரும் ஆசாரியர்கள், அசுவத்தாமன் எல்லோ ரும் இருந்தனர். அவள் ஒரே ஒரு கேள்வி கேட்டாள். ''பெரியோரே, சான்றோரே, தருமர் தன்னை முதலில் இழந்து பிறகு என்னை இழந்தாரா, என்னை இழந்துபின் தன்னை இழந்தாரா? தன்னை இழந்தபின் என்னைப் பணயம் வைக்க அவருக்கு யாதொரு உரிமையும் இல்லை. நான் பாஞ்சாலி. ஐந்து கணவர்களை உடையவள். ஐந்து கணவர்கள் அவர் பணயம் வைத்ததை முழுவதும் ஏற்றுக் கொள்ள வேண்டாமா. சூதாடி என்னைப் பணயம் வைக்கத் தனிஉரிமை உண்டா?'' ஒருவரும் இக்கேள்விக்கு விடை கூற வாய்திறக்கவில்லை. விதுரன் அன்று அஸ்தினாபுரத்தை விட்டு விலக, காட்டுக்குச் செல்ல முடிவு செய்தார். உயர்ந்த குணமுள்ள சான்றோர் பாரத நாட்டில் மாணிக்கம் போன்று ஒளிவீசித் திகழ்ந்தனர். சமுதாயத்துக்குச் சேவை செய்ய தம் வாழ்க்கையை அர்ப்பணித்தனர். அவசியம் நேரிட்டால்,

குருவின் ஆணையை மீறி, இறைவன் திருவுள்ளத்துக்கு கீழ்ப்படியத் தயாராக இருந்தனர். தாய், தந்தை, குரு, கடவுள். இந்நால்வரை போற்றி வணங்க வேண்டும். இறைவன் வாக்கை நிறைவேற்றுதற்கு தாய், தந்தை, குரு ஆகியோரின் சொல்லை மீறத்தயாராக இருந்தனர்.

## தருமமூர்த்தி இராமன்

கைகேயி இராமனைக் காட்டுக்கு அனுப்பியது சரியா, தர்மமா? ''ராமோ விக்ரஹவான் தர்மஹ'' - இராமன் தருமத்தின் திருவடிவம். சிறிதும் கருணையின்றி, தயாதாட்ச ணியம் இன்றி, இராமனைக்காட்டுக்கு அனுப்பியது எவ்வ ளவு குரூரமான செய்கை? இத்தகைய செயலுக்கு தாய் காரணமாக இருந்ததால் தாயின் முகத்தைக்கூட பரதன் காண விரும்பவில்லை. உலகியலுக்காக அவன் அவ்வாறு செய்ய வில்லை. சுயநலத்துக்காக அவ்வாறு செய்யவில்லை. தெய்வத்துக்காக அவ்வாறு நடந்து கொண்டான். இராமன் சாட்சாத் நாராயணன். அவரை முன்னிட்டு இவ்வாறு நடந்துகொண்டான். தருமமூர்த்தியான இராமன் தன் தந்தை யின் ஆணையைச் சிரமேற்கொண்டு காட்டுக்குச் சென்றார். பரதன் தாயின் ஆணையை மீறினான்.

## பிரகலாதன்

பிரகலாதன் ஹரிநாமத்தை கூறுமாறு உபதேசம் பெற் றான். அதன்பின் அவன் ஹரிநாமத்தைக் கைவிடவே இல்லை. நான் ஹரிநாமம் கூறுவதை நிறுத்தப்போவ தில்லை. அதற்காக உயிர்துறக்கச் சித்தமாக இருக்கிறேன் என்றான் அவன்.

“தாய்க்கு மகன் பட்ட துன்பம் பொறுக்கவில்லை. அவன் கைகளைப் பற்றிக்கொண்டு கூறினாள். ஹரிநா

மம் ஏன் கூறுகிறாய்? தந்தையை விட்டு விலகத்தயார். தாயை விட்டு விலகத்தயார். ஹரிநாமத்தை மட்டும் விட்டு விலகத்தயாரில்லை. தந்தையின் ஆணையை ஏற்கவில்லை. தந்தையின் ஆணையை மீறியே ஹரிநாமம் உச்சரித்தான்.

பிரகலாதன் ஹரியை (விஷ்ணுவை) நேசித்தான். இரண்யகசிபு, அவன் தந்தை, ஹரியை வெறுத்தான். இத்தகைய மாறாட்டத்தில் பிரகலாதன் தந்தையை இழக்கத் துணிந்தான். ஹரியை இழக்கத் துணியவில்லை.

### பலியின் தியாகம்

பலிச்சக்கரவர்த்தியின் குரு சுக்ராசாரியார். ''மஹாப்ரபு, இங்கு வந்தவர் சாதாரண ஆசாமியல்லர். உயரம் குறைவாக இருக்கிறார். ஆனால் மூவுலகங்களையும் அடைத்துக்கொள்ளும் ஆற்றல் பெற்றவர். இவர் வெறும் சாதாரண பிராமணன் என்று நினைக்காதீர்கள். சாட்சாத் விஷ்ணுவே இவர். இப்போது அவர் தன் கையை உன் முன் நீட்டுகிறார். உன்நிலையை மறக்காதே, இந்த உண்மையை மறக்காதே. ஏமாந்து போகாதே. கவனமாக இரு''. ''எத்தகைய மஹாவாக்கியம் நீர் கூறியது? பரந்தாமனே என்முன் வந்து 'தா' என்று கேட்கையிலே, என்னை விட பாக்கியசீலர் யாவர் உளர்? பேரண்டநாயகனான பெருமான், கொடு என்று கேட்கையிலே, யான் பெறும் பெரும் பேறு யார் பெறுவார்?''

''அண்டமெங்கும் பரந்துவிரிந்த இறைவனை,
எவ்வாறு கோவிலுக்குள் அடைப்பீர்?
நீரினுள் நீக்கமற நிறைந்திருக்கும் இறைவனை,
நீராடச் செய்திடுதல் எவ்விதத்தில் சாத்தியம்?

அண்டமுழுதும் வயிற்றில் கொண்ட தாமோதரனை
வயிறு நிறைய உண்ணச்செய்தல் எங்ஙனம்?
அத்தகைய இறைவனின் கரதலம் தாழ்ந்திருக்க,
என்னுடைய கைகளே மேலோங்கி கொடுக்க நிற்க,
இத்தகைய புண்ணியத்தைக் கைவிடுதல்
சாத்தியமோ?''

இது என்னுடைய அதிருஷ்டம். நான் இதைத் தடுக்க மாட்டேன். என் உயிரையும் இதற்காக அளிப்பேன்.

குருவின் ஆணையை மீறி கேட்டதைக் கொடுக்கத் தயாராக இருந்தான் பலி.

மூவரும் ஏன் இவ்வாறு இருந்தனர்? இவர்களுக்கு சுயலாபம் எதுவுமில்லை. இறைவனுக்காகத் தியாகம் செய்தார்கள். பரதன், இறைவன் இராமனுக்காக, தாய் சொல்லை மீறினான். பிரகலாதன் இறைவன் ஹரிக்காக தந்தை சொல்லை மீறினான். தனக்காக அல்ல. அவனுக்கு வேண்டியது இறைவனே. இறைவன் மட்டுமே. பலிச்சக்கர வர்த்தி. இறைவன் வாமனருக்காக குருவின் ஆணையை மீறினான்.

பசுவைக் கொடுத்தல், பூமியைக் கொடுத்தல், வஸ்துவைக் கொடுத்தல், தங்கத்தைக் கொடுத்தல், அன்னம் அளித்தல், கல்வி கற்பித்தல் இவையெல்லாம் தானமென்று கூறுவர் மேலோர். பலிச்சக்கரவர்த்தி அனைவரினும் உயர்ந்து நின்றான். அவன் தன்னையே தானமாகக் கொடுத்தான்.

## எது தானம்? எது தியாகம்?

பழங்காலத்தில் இந்நாட்டில் தியாக சீலர்களும், தர்ம சீலர்களும் இருந்தனர். தானத்துக்கும், தியாகத்துக்கும் உள்ள

வேறுபாடு மிகப்பெரிது. தானமும் தியாகமும் ஒன்றென இக்காலத்தில் கருதுகின்றனர். உம்மிடமுள்ளதில் ஒரு சிறிது பிறருக்குக் கொடுத்து உதவலாம். அது தானம். உன்னிடம் உள்ளதை நீ கொடுக்கிறாய். உனக்காக நீ வைத்துக்கொள்ள லாம். ஆகவே இதில் சுயநலமும், சுயலாபமும் கலந்துள் ளன. தியாகம் அவ்வாறல்ல. உனக்கு எது அதிக விருப் பமோ அதைக்கொடுத்தல் தியாகம். உனக்கு மிகப்பிடித்தது எது? நமது உயிர்தான் நமக்கு மிகப்பிடித்தமானது. தனது உயிரைக் கொடுக்கத் தயாராக இருத்தல் தியாகம். தானத்துக் கும், தியாகத்துக்கும் இத்தகைய வேறுபாடு உள்ளது. ம்க்கள், நான் தியாகம் செய்திருக்கிறேன் என்று கூறுகிறார் கள். பழங்காலத்தில்

> நகர்மணா, நப்ரஜயா, தனேன த்யாகேனைகே
> அம்ருதத்வ மானஸு

தியாகம் அமரத்துவத்துக்கு இட்டுச் செல்கிறது. அதற்கு விஞ்சியது வேறொன்றுமில்லை. "அம்ருதஸ்ய புத்ரஹ": நீங்கள் அழியாத்தன்மையின் புதல்வர்கள். உடல் அழிவது நிச்சயம். அது எரிக்கப்பட வேண்டும். ஆனால் ஆத்மா அழியக்கூடியதல்ல. ஆத்ம தத்துவமே அமரத்துவம் கொண் டது. தியாகம் அமரத்தன்மை வாய்ந்தது. அன்றிலிருந்து இன்றுவரை தியாகசீலர்கள் வாழ்ந்திருக்கிறார்கள். அதன் காரணமாகவே அவதார புருஷர்களும் ஞானிகளும், சாதுக்க ளும் இந்நாட்டில் தோன்றியுள்ளனர்.

### சிபி

பலிச்சக்கரவர்த்தி மட்டுமல்ல, சிபிச்சக்கரவர்த்தியும் ததீசியும் எத்தனை தியாகம் செய்திருக்கிறார்கள். ஒரு பறவை சிபிச்சக்கரவர்த்தியின் மடியில் வந்து வீழ்ந்தது. 'அரசே என்னைக் காப்பாற்றுங்கள்,' என்று வேண்டியது,

இது சிபிச் சக்கரவர்த்தியைச் சோதிக்க இந்திரன் நடத்திய நாடகம். 'நான் காப்பாற்றுகிறேன்' என்று அபயம் அளித்தார் சிபி. கருடன் வந்தது. 'அரசே, நான் இதைத் துரத்திக் கொண்டு வருகையில் நீங்கள் எப்படி இதை ஏற்கலாம்? என்னிடமிருந்து தப்பிக்கவே உம்மிடம் வந்தது. அரசராகிய நீர் தருமத்தையறிந்தவர். தருமசாத்திரங்களின்படி நடக்க வேண்டியவர்'. 'நான் தருமம் அறிந்தவன். என்னைப் புகலிடம் தேடிய இதனைக்காப்பாற்றுவது என் கடமை. அது எத்தகைய பறவை என்று விசாரிப்பது தருமமல்ல. அதனைக் காப்பாற்றுவது என் கடமை.'

## இலட்சுமணன்

இதேபோல இலட்சுமணன் இராமனிடம் ஒருமுறை கூறினான். இராமன் மரவுரி தரித்து 14 வருடங்கள் காட்டில் கழிக்கச் சென்றான். இராமனிடம் கொண்ட மரியாதை, கௌரவம், பக்தி, சரணாகதி காரணமாக இலட்சுமணனும் மரவுரி தரித்தான். இராமன் வேண்டாம் என்று கூறியபின் னும், இலட்சுமணன் கூறினான்.

> இராமா, முன்பு நான் ஆதிசேடன். நீ என்மேல் படுத்து துயின்றாய்.
> அன்று நான் உன்னிடம் பணிந்தேன். இன்றும் நான் பணிகிறேன்.
> இன்றும் நான் இலட்சுமணன் என்ற ஆதிசேடன்.
> இன்றும் நீ எவ்விதமும் ஆணையிடலாம். உனது சுமை யெல்லாம் நான் தாங்குவேன். எனக்கு சர்வமும் நீயே.

## சிபியின் தியாகம்

சிபிச்சக்கரவர்த்தி பறவையிடம் கூறினார், ''பறவையே, நான் சொன்ன வாக்கை மீற மாட்டேன். இந்தப்பறவையின் எடைக்குத் தகுந்த மாமிசத்தை என் உடலிலிருந்து உனக்குக்

கொடுக்கிறேன்''. தராசு கொண்டு வரப்பட்டது. உடலிலி ருந்து மாமிசம் வெட்டப்பட்டு ஒரு பக்கம் தராசில் வைக்கப்பட்டது. தராசின் முள் பறவைக்கு எதிர்ப்புறம் வரவில்லை. பல அங்கங்கள் அறுக்கப்பட்டன. பிறகும் தராசு முள்சாயவில்லை. சிபிச்சக்கரவர்த்தி தன் உடல் முழுவதும் தியாகம் செய்யத் தயாராக இருந்தார். தன் தலையையும் வெட்டிக் கொடுக்கத் துணிந்தார். இந்திரன் அவர்முன் தோன்றினார். 'சிபி, உன்னைப் பரிசோதிக்கவே நான் இவ்வாறு செய்தேன்.' நான் நடத்திய நாடகம் இது. நான் கருடன் அல்ல. நான் இந்திரன். உன் தியாகத்தைக் கண்டு நான் மகிழ்ச்சியடைகிறேன். தன் உயிருக்கு மேல் தியாகம் செய்ய வேறென்ன இருக்கிறது.

இத்தகைய அரசர்களும், ஞானிகளும் தியாகசீலர்களாக இந்நாட்டில் வாழ்ந்தனர். பலிச்சக்கரவர்த்தியும் இத்தகைய அரசர். மூன்றடி மண் கேட்டு தானம் பெற்ற வாமனர், முதல் அடியால் உலகம் முழுவதையும் அளந்தார். இரண்டா வது அடியால் சுவர்க்கம் உள்ளிட்ட மற்ற இடங்கள் அனைத்தையும் அளந்தார். மூன்றாவது அடி வைக்க இடமில்லை. 'இவ்வடி எடுத்து வைக்க இடத்தைக் காண்பி' என்று பலியிடம் கேட்டார். என் தலை மேல் வையுங்கள் என்று கூறினான் பலி. தேவர்களும் அசுரர்களும் பயத்தால் நடுங்கினர். இறைவன் கல்நெஞ்சம் படைத்தவர் என்று எண்ணினார்.

மாமனென்று பாராமல் கம்ஸனையும் கொன்றான்.
பெண்ணென்று பாராமல் தாடகையைக் கொன்றான்.
தா என்று கேட்டபோது வழங்கினான் பலியரசன்,
பாதாள உலகத்துக்குத் தள்ளப்பட்டான்.
கருணை இல்லா இறைவனை என்ன சொல்லி அழைக்க?

இல்லை. பக்தனைப் பரிசோதிக்கும் செயல் இது. இந்தச்சோ தனையில் பக்தன் தேற வேண்டும். அப்போது அவனுக்கு சில இடைஞ்சல்கள் வரும்.

## துன்பமும் ஒருவகையில் உதவியே

அப்பென்டிஸைடிஸ் (குடல்வால் வலி) வலியால் துன்பப்படுகிறான் ஒருவன். அவ்வலியைப் போக்க டாக்டர் கொடுக்கும் வலியை ஏற்றுக்கொள்ள வேண்டும். மருத்துவர் இரக்கமில்லாமல் அவ்விடத்தை வெட்டுகிறார். மருத்துவ ருக்குக் கருணை இல்லையா? அவர் கருணை மிகுந்தவர். அறுவை சிகிச்சை செய்யாவிடில், அவ்வலிக்கு நிவாரணம் இல்லை. உடலில் உள்ள வலியைப் போக்க, மருத்துவர் கொடுக்கும் வலியை ஏற்க வேண்டும். முற்பிறவியின் பயனாக மனிதன் துன்பம் அனுபவிக்கிறான். இறைவன் கொடுக்கும் துன்பத்தையும் மனிதன் அனுபவிக்கிறான். ஆனால் இறைவன் நமக்கு என்ன அளித்தாலும் அது நமக்கு உதவியே தவிர, கெடுதி அல்ல. கடவுள் சுயநலமற்றவர். அவருக்கு சுயநலமோ, சுயலாபமோ இல்லை. அவை என்னவென்றே அவருக்குத் தெரியாது. சுயநலமென்றால் என்ன என்று தெரியாது. சுயலாபம் என்றால் என்ன என்று தெரியாது. ஆனால் கடவுளுக்கு சுயநலம் உண்டு. சுயலாபம் உண்டு என்று நினைக்கிறான். அதற்கு அவனது கற்ப னையே, கற்பனையால் உதித்த பிரமையே காரணம். பிரமை. இருக்கும்வரையில் பிரம்மனை அறிய இயலாது. பிரமை நீங்கிய பின்னரே, பிரம்மனை அறிய இயலும். இதயத்தில் இறைவன் குடிகொண்டுள்ளார். அங்கு இருப்பது ஒரே நாற்காலிதான். 'Double sofa இல்லை. Musical chair இல்லை. பிரமை நீங்கினாலே ஒழிய, பிரம்மன் இதயத்திலுள்ள நாற்காலியில் அமருவதில்லை. பிரமையும் பிரம்மனும் ஒரே இடத்தில் உட்கார இயலாது. கலிகாலத்தில் நாம் இருவரை

யும் ஒரே இடத்தில் உட்கார வைக்க முயற்சி செய்கிறோம். நாம் முயற்சி செய்யலாம். ஆனால் பிரம்மன் வரப்போவ தில்லை. ஏன்? பிரமை உட்கார்ந்திருக்கும் வரையில், அந்த நாற்காலி அதனுடையது. பிறருடைய நாற்காலியில் கடவுள் உட்காருவதில்லை. இது ஒருவகையான தெய்வ நீதி. இறைவன் நீதி நெறிமை ஒழுங்காகப் பின்பற்றுகிறார்.

## சற்குணந்தான் முக்கியம்

பழங்காலந்தொட்டு, நாம் கற்றுக்கொள்வது குறைவாக இருந்தாலும், நம்மிடம் சற்குணம் இருக்க வேண்டும். சீலம் நிரம்பப் பெற்றிருந்தால், படிப்பறிவில்லா விடிலும் பாதக மில்லை. பத்து ஏக்கர் தரிசு நிலம் வேண்டாம். பத்து கஜ சதுரத்தில் விளைநிலம் போதும். ஒரு நல்ல குணம் இருந்தாலே போதும். அது என்ன? இறைவனை மகிழ்விப்ப தற்காக நடந்து கொள்ளும் தன்மையே அது. உலகம் முழுவதுமே உன்னைப் போற்றும். உலகமுழுதும், உன்னி டம் தெய்வீக குணங்கள் உள்ளன என்று போற்றும். எல்லோருக்கும் உதவி செய்துகொண்டு, இறைவன் நாமத் தையே உச்சரித்துக்கொண்டு, நற்கருமங்களையே செய்து கொண்டு, நல்ல பாவனைகளையே ஏற்றுக்கொண்டு, நல்லெண்ணங்களிலேயே ஈடுபட்டு, வாழ்ந்தால் உன்னை தெய்வீகமானவன் என்று உலகம் கூறும்.

## தியாகம் தெய்வ சொரூபம்

தியாகம், தெய்வ சொரூபமாகும். நாம் தியாகம் செய்யத்தயாராக இருக்க வேண்டும். எத்தகைய தியாகம்? சுயநலமற்றிருத்தல். அதுவே தியாகம். மாணவர்களிடையே இத்தகைய தியாகம் வேண்டும். சமுதாயத்தில் உள்ள உனது பதவிக்குத் தகுந்தவாறு, சமுதாய நலனுக்காக நீ சேவை

செய்யத் தயாராக இருக்க வேண்டும். சமுதாயத்துக்கு உதவாத உன் படிப்பினால் என்ன பயன்?

## His-Story (இறைவன் வரலாறு)

இராவணன் நன்கு கற்றவன். 64 கலைகளையும் கற்றுத்தேர்ந்த இராவணன், சிறிதளவும் மகிழ்ச்சி அனுப விக்க இயலவில்லை. இராமன் 36 கலைகள் மட்டுமே கற்றவர். இராவணனோ 64 கலைகளும் கற்றவர். அவன் கற்றுக்கொண்டதை அவன் சீரணிக்கவில்லை. அவன் வாழ்க்கை துன்பத்தில் முடிந்தது. கற்றதனைத்தையும் வாழ்க்கையில் கடைபிடித்திருந்தால், அவனுக்கு சீரணக்கோ ளாறு ஏற்பட்டிராது. இராமன் கற்றதனைத்தையும் வாழ்க்கை யில் பயன்படுத்தினான். ஆரோக்யந்தான் செல்வம். அதுவே இலட்சிய வாழ்வு. இராமன் சமூக நலனுக்கு தனது ஆற்றல் அனைத்தையும் தியாகம் செய்தான். இராவணன் தான் கற்றதனைத்தையும் சுயநலத்துக்காகப் பயன்படுத்தினான். ஒன்று தன்னலமற்றது. மற்றது சுயநலம் மிகுந்தது. பரார்த் தம், யதார்த்தமாகும். தன்னலமற்றதே உண்மையான வாழ்க்கை. ஸ்வார்த்தம், அனர்த்தம். சுயநலம் விபரீதத்தில் முடியும். இராவணனின் வாழ்க்கை அபாயத்தைக் கொண்டு வந்தது. இராமனின் அறிவு உண்மையான வாழ்க்கையை உருவாக்கியது. அன்றும் இன்றும் இராமனின் பெயர் சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது. இராமாயணம், அன்றும் இன்றும் என்றும், உயிரூட்டம் நிறைந்தது. வரலாற்றுப் புனிதம் கொண்டது மட்டுமல்ல, மனிதரின் இதயத்திலும் பொறிக்கப்பட்டுள்ளது. History என்பது என்ன? His-Story என்பதே History. இறைவனின் கதையே வரலாறாகும். இராமாயணம் இராமனின் History.

கல்விமான்கள் தமது கல்வியறிவை சமூக நலனுக்காகப் பயன்படுத்த வேண்டும். மக்களை நல்வழியில் திருப்ப தம்மாலான முயற்சி செய்ய வேண்டும். 'சர்வே லோகஹிதே ரதஹ' உலகத்தின் நன்மைக்காக முயற்சி செய்ய வேண்டும். அனைத்து ஞானத்தையும் பெற்றிருக்க வேண்டும். 'சர்வே ஞானேஸம்பன்னஹ'. 'ஸர்வே ஸமதிதா குணைஹி'. அனைத்து நற்குணங்களையும் வளர்த்துக்கொள்ள வேண்டும்.

## சீலமற்ற கல்வியால் பயனொன்றுமில்லை

இவை இல்லாது போனால், கல்வியினால் என்ன பயன்? படிக்க வேண்டியது அவசியம். குடும்பம் நடத்த சம்பாதிப்பது அவசியம். முடிந்த அளவில் சமூகத்துக்கு உதவி செய்ய வேண்டும். கல்வியறிவை விட, சீலம் (Character) மிகவும் முக்கியம். நாம் செல்வத்துக்காக கல்வியை விற்கிறோம். கல்வி முழுவதும் வியாபாரப் பொருளாகி விட்டது. நாம் கல்வியை விற்றுக் கொண்டிருக் கிறோம். கல்வி விற்பதற்காக அல்ல. கல்வியறிவு அதிகரிக்கி றது. சீலம் சிறிதும் இல்லாமல், கல்வி அறிவு அதிகம் பெற்றால் அதனால் என்ன பயன்?

## மனசாட்சியின்படி நடப்பதே உண்மையான சேவை

மாணவர்கள் படித்து, வேலையில் அமர்வதில் தவ றொன்றும் இல்லை. ஆனால் சமூகத்தை மனதில் கொள்ள வேண்டும். சமூகத்துக்கு சேவை புரிய வேண்டும். சமூக சேவை என்றால் என்ன? நான் நன்கு படித்திருக்கிறேன். நல்ல உடை அணிந்திருக்கிறேன். நடுத்தெருவில் நின்று கொண்டு என்ன சேவை செய்ய முடியும் என்று நினைக்கலா காது. தெருவைப்பெருக்குதல் போன்ற தொழில் மட்டுமே

சேவை என்பதல்ல. நீ ஒரு தொழில் செய்கிறாய். உன் மனசாட்சிக்குத் தகுந்தவாறு நீ தொழில் புரிய வேண்டும். அதுவே சேவை. நீ வியாபாரம் செய்கிறாய். அநியாயம், அக்கிரமம் இவை இல்லாமல், நேர்வழியில், யாருக்கும் எவ்விதக் கெடுதியும் இல்லாத வகையில் மனசாட்சியின்படி வியாபாரம் செய்தால் அதுவே சேவை. பக்தி என்ற பேரால் கடமையைக் கைவிடமுடியாது.

இது மட்டுமல்ல உலக சேவை, நற்குணங்கள் தவிர மூன்றாவதும் உண்டு. பாரதநாட்டின் தற்கால நிலைக்கு இதுவே காரணம். யாரும் தனது கடமையை செய்வ தில்லை. பக்தியினால் என்ன பயன்? பக்தி, பக்தி என்று கூறினால் என்ன பயன்? மருத்துவரோ, வழக்கறிஞரோ அவரவர் கடமையைச் செய்ய வேண்டாமா? நோயாளி ஆஸ்பத்திரியில் துன்பப்படும்போது, ஆரத்தியைக்காண இங்கு வந்தால், அது என்ன பக்தி? பக்தியல்ல. பித்து. நோயாளியின் வலியைப் போக்க முயற்சி செய். அதுவே சேவை. நோயாளியைத் தவிக்க விட்டு இங்கு ஆரத்தி காண வந்தால், அது பைத்தியக்காரத்தனம். அறிவிலித்தனம். எத்தனை முறைகள் உபதேசங்கள் கேட்டாலும், அவர்கள் பக்தியில் திடமோ, நிதானமோ இல்லை. ஓட்டைகள் உள்ள பாத்திரத்தில் பாயஸம் வைத்தாலும் ஒழுகிவிடும். இதயம், சுயலாபம், சுயநலம் போன்ற ஓட்டைகள் நிறைந்தது. பக்தியால் அதை நிரப்பினாலும், அது வெளியே வந்து விடும். ஒவ்வொருவரும் தமது கடமையை நிறைவேற்ற வேண்டும்.

### சம்பளத்துக்கு நிறைவாக கடமை புரிய வேண்டும்

முக்கியமான இன்னொன்றும் உண்டு. வாங்கும் சம்ப ளத்துக்குத் தகுந்த அளவு கடமையைச் செய்ய வேண்டும்.

அதுவே நாட்டுக்குச் செய்யும் சேவையாகும். அதிகச்சம்ப ளம் வாங்கிக்கொண்டு, குறைந்த வேலை செய்தால், நீ தேசத்துரோகி. சம்பளத்தை வாங்கும்போது, இவ்வளவு சம்பளத்துக்குத் தகுந்த வேலை செய்கிறேனா என்று யோசித்துப்பார். அதுவே சிறந்த சேவை. கொடுக்கும் சம்பளத்துக்குத் தக்கபடி வேலை செய்தால், நாடு இந்த கீழ் நிலையில் இராது. உங்களுக்குச் சம்பளம் கொடுப்பதற் காக, குடியரசுத்தலைவரும், பிரதம மந்திரியும் வெளிநாட் டுக்குச் சென்று கடன் வாங்குகிறார்கள். ஏன் கடன் வாங்குகிறார்கள்? உங்களுக்காகத்தான் கடன் வாங்குகிறார் கள். உண்மையாக உழைத்தால் நஷ்டம் என்பது ஏற்படாது. ரூபாய் அளவுக்கு சம்பளம் வாங்குகிறீர்கள். நயாபைசா அளவுக்கு வேலை செய்வதில்லை. இது நியாயமா? இது தர்மமல்ல, தியாகமும் அல்ல. வாங்கும் சம்பளத்துக்குத் தகுந்தவாறு வேலை செய்ய வேண்டும். நமது மனசாட்சி நிறைவடையும் அளவுக்கு வேலை செய்ய வேண்டும். அப்போது உங்களுக்கு அமைதி ஏற்படும்.

அமைதியை எவ்வாறு எதிர்பார்க்கிறீர்கள்? ஆதி பௌ திகம், ஆதி தெய்வீகம், அத்யாத்மிகம் ஆகிய மூன்றிலும் அமைதி நிலவ வேண்டும். ஆகவேதான் சாந்தி, சாந்தி, சாந்தி என்ற மூன்று முறை கூறுகிறோம். உடலளவில் சாந்தியும், மனத்தளவில் சாந்தியும், ஆத்ம அளவில் சாந்தியும் நிலவ வேண்டும். பழங்கால வரலாற்றில் ஒவ்வொன்றிலும் ஆன்மீக உணர்வு பிரிய இயலாது ஒன்றுகலந்து போதிக்கப்பட்டது. இத்தகைய புனிதம் வேறு எந்த நாட்டிலும் இல்லை. தெய்வத்துவம், பாரதநாட்டுக் கலாசாரத்தில் ஊறியிருக்கிறது.

## வேதத்தின் பொருள் உணர்ந்து கூறவேண்டும்

சிறுவர்கள் "ஸஹனாவவது... என்ற பிரார்த்தனையை, பாவம், முழுமையாகச் சொல்லவில்லை. அதுவே வேதங்களின் முதன்மையான பாடம். அனைவரும் இதன்படி நடந்து கொள்ள வேண்டும். ஒன்றிணைந்து சமமாகப் பகிர்ந்து வேலை செய்ய வேண்டும். இது பங்குதாரரின் வியாபாரமல்ல. இது சமமான பகிர்மானம். உனக்கு உள்ளது எனக்கு. எனக்குள்ளது உனக்கு. கஷ்டமோ, சுகமோ, லாபமோ, நஷ்டமோ, சமமாகப் பகிர்ந்து கொள்வோம் என்ற இத்தகைய உணர்வுதான் வேதங்களால் போதிக்கப்பட்டது. அறிஞர்கள், தமது சொந்த விமரிசனங்களை வெளியிடுகிறார்கள். அதன் உண்மைத்தத்துவத்தை உரைப்பதில்லை. அது அவர்கள் தவறல்ல. வேதத்தை உச்சரிக்கிறார்கள். அதன் பொருள் தெரிந்து கொள்ளவில்லை. அர்த்தந் தெரியாமல் கூறுவதால் பயனில்லை. பொருள் தெரியாமல் வெறுமே கூறுகிறார்கள்.

முன்பு கான கோகிலா என்ற பாடகி இருந்தார். அவள் தியாகராஜர் பாடல்கள் பாடுவதில் விருப்பமுள்ளவர். ஆனால் தெலுங்கு தெரியாது. தியாகராஜர் பாடல்கள் எல்லாம் எழுதப்பட்டிருந்தன. அவளுக்குத் தெலுங்கு தெரியாது.

நீபோ கடகுண்டே நிகேமி ராமா
நேபோ கடகுண்டே நிகேமி ராமா...

நான் உன்னைப் புகழாவிட்டால் உனக்கென்ன நஷ்டம்.

நீ பகோடா திண்டே... என்று பாடினாள். நான் பகோடா தின்னாவிட்டால் உனக்கென்ன நஷ்டம் என்று பொருளாகிறது (சிரிப்பு) தமிழில் 'க', 'ச' போன்ற எழுத்துக்களும் ஒரேவகை ஒலிக்கான எழுத்துதான் உள்ளது.

தெலுங்கிலோ உச்சரிப்புக்கு ஏற்றவாறு அமைய நால்வகை எழுத்துக்கள் உள்ளன. ஆகையால் பொருளறியாமல், உச்சரிப்பும் தெரியாமல் பாடியதன் பலன் 'நான் பாடாவிட்டால் உனக்கென்ன நஷ்டம் இராமா' என்பது 'நான் பகோடா தின்னாவிட்டால் உனக்கென்ன நஷ்டம் ராமா' என்றாயிற்று. பாட்டின் இசை மிக இனிமையாக அற்புதமாக இருந்தது. சொற்கட்டும், பொருளுமோ விபரீதமாக இருந்தன.

வேதத்தின் பொருள் தெரியாது உச்சரிக்கும்போது செவிக்கு ஆனந்தமாக இருக்கிறது. பொருள் தெரியாததால், மனதுக்கு ஆனந்தமில்லை. மனதிற்கு ஆனந்தம் வேண்டும். ஆகவே வேதத்தின் பொருள் தெரிந்து கொள்ள முயற்சி செய்யுங்கள்.

இன்றைய மாணவர்கள், நாளை நாட்டின் குடிமக்கள். ஆன்மிகத்துறையில் எந்த சிறு செயலானாலும் பொருள் உணர்ந்து செய்ய வேண்டும்.

—பாபா

(கோவிந்த ஹரே... என்ற பாடலுடன் பகவான் தன் அருளுரையினை நிறைவு செய்தார்.)

*28.6.96*

# 2. திரிவேணி சங்கமம்

கர்ம மார்க்கத்தில் ஒருவன் பாதசாரி போல நடந்து செல்ல வேண்டும். பக்திமார்க்கம் எளிது. மாட்டு வண்டியில் செல்லும் பயணம் போன்றது. ஞானமார்க்கம், விமானப்பயணம் போன்றது.

## திரிவேணி சங்கமம்

மாணவர்களே!

பழங்காலந்தொட்டு, மக்கள் கர்ம மார்க்கம், பக்திமார்க்கம், ஞான மார்க்கம் இவற்றுள் எது சிறந்தது என்று தமக்குள் வாதித்தனர். அவர்களுக்கு முடிவுக்கு வர முடியவில்லை. விசால இதயம் படைத்தவர். இவைபற்றி ஆராய்ந்து இலட்சியம் ஒன்றே. வழிகள்தான் வேறு என்ற முடிவுக்கு வந்தனர். இவற்றின் பேரும், வடிவங்களும் வேறு வேறானாலும், செல்லுமிடம் ஒன்றே. இவை மூன்றும் திரிவேணி சங்கமம் என்று கருதினார். பக்தி என்பது யமுனை நதி, தூயது. களங்கமற்றது. தன்னலமற்றது. கர்மமார்க்கம் கங்காநதி 'சரீர மாத்யம் கலுதர்ம ஸாதகம்' உடலால் செய்யும் கர்மங்கள் அனைத்தும் புனிதமாக இருக்க வேண்டும். கர்மமார்க்கம், ஞானத்துக்கு இட்டுச்செல்லும். யமுனையும், கங்கையும் கர்மத்தையும் பக்தியையும் குறிப்பன. வெளிப்படையாகத் தெரிபவை. அவற்றின் பயிற்சிகளும், முயற்சிகளும் வெளிப்படையாக இருப்பவை. ஞானமார்க்கம், உள்முகமானது சரஸ்வதி நதி போன்று கண்ணுக்குத் தெரியாதது. ஞானத்துக்கு உருவமில்லை. மரபின்படி உள்ள பழக்கவழக்கங்களுள் ஊறியுள்ளது. அது உள்ளுணர்வில் இருப்பது. வெளிப்படையாகத்

தெரிவது அல்ல. செயல்கள் அனைத்தும் ஞானத்தை நோக்கியே வருகின்றன.

செயல் மலரைப்போன்றது. உபாஸனை (பக்தி) என்பது காய். ஞானம், பழுத்த பழம். மலரில்லாது காயில்லை. காயில்லாது பழம் இல்லை. இவை மூன்றும் உயர்மாற்றங்களான மூன்று படித்தரங்களாக இருப்பினும், இவற்றின் முடிவு ஒன்றே, லட்சியம் ஒன்றே. கர்மமில்லாத பக்தியில்லை, பக்தியில்லாத ஞானம் இல்லை. லட்சியம் இல்லை.

### சித்தசுத்தி தருவது கர்மம்

கர்மம், சித்தசுத்தியைத் தருவது. இதயத்தூய்மைக்காக கருமம் தேவைப்படுகிறது. உடல்மூலம் செயற்படுவது கர்மமார்க்கம் எனவும், உணர்ச்சிபூர்வமாக இருப்பது பக்தி மார்க்கம் எனவும் தூய்மையான மனம் ஞானம் பெற உதவி செய்கிறது என்றும் வேதாந்தம் கூறுகிறது. இது திரிகரண சுத்தி எனப்படும். மனிதனின் எண்ணம் சொல் செயல் இவை ஒன்றிணைவதே திரிகரணசுத்தி.

Proper Study of mankind is man. மனிதனே, மனித சமுதாயத்தை அறிவதற்கான ஆய்வுக்கூடம்.

செயலே கர்மமார்க்கம், சொல், பக்தி மார்க்கம்; எண்ணம் - ஞானமார்க்கம். எண்ணத்தைத் தொடர்ந்து சொல்கிறோம். சொல்லைத் தொடர்ந்து செய்கிறோம். இவற்றின் உண்மைப்பொருளை அறிவதே மனிதத்தன்மை. இதையறியாது வீணாக கர்மமார்க்கம், பக்திமார்க்கம், ஞானமார்க்கம் பற்றிய சர்ச்சையில் மனிதர்கள் ஈடுபடுகிறார்கள்.

அறியாமையால் பாவத்தைக் கண்டஞ்சுவதில்லை
அறியாமையினால் இறையன்பு கொள்வதில்லை.
மனிதத்தன்மை இழந்ததன் காரணம் இதுவே.
இதுவே சாயி கூறும் இரகசியம்.

## கவனித்துப்பேச வேண்டும்

தற்கால மனிதனுக்கு தான் என்ன நினைக்கிறோம் என்றே புரிவதில்லை. பாபபீதியா, தெய்வப்ரீதியா, சங்க நீதியா, எது சரி என்று அவனுக்குப் புரியவில்லை. கூறும் ஒவ்வொரு சொல்லிலும் உண்மை நிரம்பியிருக்க வேண்டும்.

நாக்கே, நீயே சத்யம் நிறைந்தவன் ஆகவே இனிமையா
கப் பேசுகிறாய்
நீயே சாந்தம் நிறைந்தவன், உன் மூலமாக இறைவனை
அறிய முடிகிறது.
அநுத்வேக கரம் வாக்யம் சத்யம் ப்ரிய ஹிதம் சத்.

கொந்தளிப்புள்ள எந்தச் சொல்லையும் நாம் கூறலாகாது. உண்மையே பேச வேண்டும். இனிமையாக, இதந்தரும் சொற்களையே பேச வேண்டும். யாரையும் புண்படுத்தலா காது. யாருக்கும் அதிருப்தி தரலாகாது. அதுவே சத்யம். உண்மையே பேசு. ஏற்றுக்கொள்ள மாட்டார்கள் என்பதற்கா கப் பொய் கூறாதே. உண்மை கூற இயலாதபோது, உண்மைக்கும் பொய்க்கும் வேறுபாடு தெரியாதபோது, மௌனமாக இருத்தலே முறை.

## ஒரே இலட்சியம் மூன்று வழிகள்

மூன்று மார்க்கங்களுக்கும் (வழிகளுக்கும்) உள்ள இலட்சியம் ஒன்றே. தெய்வத்துவம், புனிதத்தன்மை அடை

வதற்கு விவேகமான படித்தரங்கள் இவை. கர்ம வழியில், தருமத்தின் பாற்பட்ட பல்வேறு செயல்களை மேற்கொள்கி றோம். அவற்றின் முடிவான இலட்சியத்தைப்பற்றி அப் போது அறிய இயலவில்லை.

பழங்காலத்தில் முதல்வகுப்பு, இரண்டாம் வகுப்பு, மூன்றாம் வகுப்பு வண்டிகள் ரயிலில் உண்டு. 70 வயதாகியும் ஸ்வாமிக்கு இதுவரை ரயில் பிரயாண அனுபவம் ஏற்பட்டதில்லை. ஸ்வாமிக்கு, ரயில் எவ்வாறு தண்டவாளத்தில் அசைந்து செல்கிறது என்று அறிய ஆவல் (சிரிப்பு) இன்னும் காலம் இருக்கிறது. அதில் மூன்றாம் வகுப்பு வண்டி உண்டு. அதில் கூட்டம் அதிகம். நெருக்கம் அதிகம். சங்கடங்கள் அதிகம். இரண்டாம் வகுப்பில் உட்கார வசதி உண்டு. தூங்க வசதி இல்லை. முதலாம் வகுப்பில் உன் விருப்பப்படி புரண்டு உறங்கலாம். இம்மூன்று பெட்டிகளும் ஒரே இடத்துக்குத்தான் செல்கின் றன.

வேறொரு உதாரணம் உண்டு. சாதாரண (Passenger) ரயிலில் பிரயாணம் செய்வது ஒருவகை. தர்மாவரத்தில் ஏறிக்கொண்டு ஐதராபாத் செல்ல விரும்புகிறீர்கள். துரோ ணாசலத்தில் நீங்கள் தடம் மாற வேண்டும். இரண்டாவது வகை நேராக செல்லும் Carriage. நீங்கள் மாறவேண்டாம். அந்த Carriage மட்டும், ரயில் மாறி இணைக்கப்படும். மூன்றாவது வகை Through train நேராகச் செல்வது. Through train ஞானம் Through Compartment - பக்தி. பாஸன்ஜர் வண்டி - கர்மம்:

### 'கர்மமே உன்னை வணங்குகிறேன்'

கர்மமார்க்கம் சிரமம் மிகுந்தது. உபாஸனை (பக்தி) மார்க்கத்தில் சுகமும் உண்டு, கஷ்டமும் உண்டு. ஞானமார்க்

கத்தில் பிரச்னைகள் எதுவுமில்லை. காரணம் என்ன? அது 'ஒன்றே' பற்றியது. 'அத்வைத தர்ஸனம் ஞானம்' - இரண்டற்றதே, ஞானம். துவைதம் (இரட்டை நிலை)யுள் ளது பக்தி (உபாஸனை). பல்வகைப்பட்டது கர்மம். பலவற்றில் ஒருமை காண்பது ஞானம். ஒன்றில் பலவற் றைக் காண்பது பக்தி. ஒன்று வேறு, பல்வகை வேறு என்று காண்பது கர்மம். கர்மம் மிக முக்கியம். செயல்மூல மாகவே பக்தியைப் பெற முடியும். இம்மூன்றிலும் கர்மம் மிக முக்கியம். செயல் இல்லாது வழிபாடு இயலாது. வழிபாடு இல்லாத ஞானம் பெற இயலாது. இம்மூன்றிலும் ஊடுருவி இருக்கும் ஒருமைத்தன்மையே, ஆத்ம தத்துவம். கர்மம் வேறு, பக்தி வேறு, ஞானம் வேறு என்று கருதிக்கொண்டு நம்மை நாம் குழப்பிக் கொள்ளலாகாது. உடல் செயலால் கட்டுப்பட்டது. கர்மம் புரிவதற்குத்தான் பிறவியெடுக்கப்பட்டது. கர்மத்தை நாம் வணங்க வேண் டும். இது உபநிடத போதனை. **'தஸ்மை நம: கர்மணே'** 'கர்மமே, உன்னை வணங்குகிறேன்' ஏன்? இவ்வுடலை நற்செயலில் ஈடுபடுத்த வேண்டுமென்று கர்மமே உன்னை வணங்குகின்றேன். **'கர்மானுபந்தீனி மனுஷ்ய லோகே''** மனித சமுதாயம் முழுவதும் செயலில் கட்டுப்பட்டது.

## கர்மம் என்பது என்ன?

கர்மம் என்பது என்ன? கைகளால் செய்யும் வேலையை கர்மம் என்கிறோம். அல்ல. மூச்சை உள்ளி ழுத்து வெளிவிடுதலும் கர்மமே. இடைவிடாது அதைச்செய் கிறாய். தூங்கும்போதும் மூச்சுவிடுகிறாய். மூச்சு விடுவதற்கு முயற்சி எடுத்துக்கொள்வதில்லை. இதயத்துடிப்பும் கர்மம். அதற்கு நீ முயற்சி எடுத்துக்கொள்வதில்லை. மனித முயற்சி இல்லாமலேயே இதயத்துடிப்பு இயல்பாக நடக்கிறது. முயற்சியில்லாமல் செய்யப்படும் அனைத்தும் கர்ம உபா

ஸனை. உயிர்மூச்சு இல்லாமல் ஒரு கணமும் இருக்க இயலாது. இதயத்துடிப்பு இல்லாமல் ஒரு கணமும் இருக்க இயலாது. இரத்த ஓட்டம் இல்லாமல் உயிர்வாழ இயலாது. அனைத்தும் கர்மத்தினால்தான் நிலை பெறுகின்றன. கர்மந் தான் உன்னைக் காப்பாற்றுகிறது. ஆகவே கர்மத்தை முக்கியமான முதற்படியாகக் கொள்ள வேண்டும்.

கர்மவழி அற்பமென்றோ, சிறியது என்றோ தாழ்ந்தது என்றோ எண்ணலாகாது. கர்மம் உன்னதமானது. அதுவே மூலகாரணம். அதுவே மூலாதாரம். அடிப்படையானது. மூலாதாரத்திலிருந்து ஸஹஸ்ராரம் செல்லும்வரை கர்மத் துக்கு அதிகாரம் உண்டு.

ஸஹஸ்ராரத்திலிருந்து வெளிவருவதே ப்ரக்ஞானம். அதுவே Constant Integrated awareness. (இடையறாது ஒன்றிணைந்த விழிப்புணர்வு). இத்தகைய ப்ரக்ஞானம் மூலந்தான் அனைத்தும் நிகழ்கின்றன. ''ப்ரக்ஞானம் ப்ரம் மா' என்று வேதம் கூறுகிறது.

**ப்ரம்மன் என்பது என்ன?**

ப்ரம்மன் என்பது என்ன? யாராலும் படைக்கப்படா தது. யாராலும் கொண்டு செலுத்த இயலாதது. இயல்பாக நிகழ்வது அதற்கு யாரும் இடைஞ்சல் விளைவிக்க இயலாது. அது ஸ்வபாவமானது (தன்னிலை) பெற்றது. நித்யமானது, சத்யம் அதுவே ஒப்பிட இபலாதது. இதன் இயல்பு ப்ரக்ஞானம். ஆகவே ப்ரக்ஞானம் ப்ரம்மா.

நாம் Integrated Awareness பற்றிக் கூறுகிறோம். Constant Integrated awareness பற்றி கூறுவதில்லை. மாணவர்கள் Integrated Rural, Development பற்றி படிக்கின்றனர். அதற்கு என்ன பொருள். Rural Development என்பது கிராமப்புற முன்னேற்றம் என்று பொருள் Village என்ற கிராமம் எங்கோ

இருப்பதல்ல. ஒவ்வொரு உடலும் ஒரு விதமான கிராமம். அங்கு கண், காது, மூக்கு போன்றவை வீடுகள். இவற்றின் சமத்துவத்தை உணர்ந்திருப்பதே Integrated Awareness. மனம் முடிவெடுத்ததும் கால்கள் நகருகின்றன. கைகள் வேலை செய்கின்றன. மனம் பார்க்க வேண்டுமென்று நினைத்ததும், கண்கள் பார்க்கின்றன. மனம் விருப்பங் கொண்டதால், காதுகள் கேட்கின்றன. ஆகவே மனம் புலன்களுக்கு அதிபதி. ஆகவே உடல், அதற்கு மேற்பட்டது. புலன்கள், அவற்றிற்கு மேல் மனம், மனத்திற்கு மேல் புத்தி, புத்திக்கு மேல் ஆத்மா. ஆத்மாவுக்கு மிக அருகில் உள்ளது புத்தி. 'புத்தி க்ராஹ்யம் அதீந்த்ரியம்''. அது புலன்களுக்கு அப்பாற்பட்டது.

**அநித்யம்; அசுகம்; லோகம்;**

> ''மனமேவ மனுஷ்யாணாம் காரணம் பந்த மோக்ஷயோ''
> மனமே தளைப்படுவதற்கும், மோட்சத்துக்கும் மூல காரணம்.

உடல் செயல்படக் காரணமாக இருப்பது மனமே. நற்செயல் செய்து ஆனந்தப்படுவது மனமே. கெட்ட செயலைச் செய்து துன்பப்படுவது மனமே. ஜீவிக்கும் (ஆத்மா) இதற்கும் தொடர்பு எதுவுமில்லை. ஆகவே என்ன செயல் செய்தாலும் அது உடல் சம்பந்தப்பட்டதாகிறது. கர்மம் அநித்யம். பக்தி அநித்யம் (தற்காலிகம்). ஞானம் அநித்யம். உடலால் தேடும் எதுவும் அநித்யம். ''அநித்யம் அசுகம் லோகம்''. இவ்வுலகம் நிலையற்றது, மகிழ்ச்சியில் லாதது'. நிரந்தர உண்மையறிந்து கொள்ள வழிபாடு செய். கர்மந்தான் உனக்குச் செல்ல வேண்டிய வழியைக் காண்பிக் கிறது. கர்மத்தை அடிப்படையாகக்கொண்டு, பக்தி வளர்கி றது. பக்தி, முதிர்ச்சியடையும்போது, ஞானம் வெளிப்படுகி

றது. பிறக்கும்போது குழந்தை; 10-வது வயதில் சிறுவன்; 30-வது வயதில் மனிதன். 75-வது வயதில் தாத்தா; (பாட்டனார்) குழந்தை, மனிதன், பாட்டன் அனைத்தும் ஒரே மனிதன்.

## ஆத்மாவின் குடும்பம்

ஆத்மாவிலிருந்து வந்தது அஹம்; அஹத்திலிருந்து மனம் வந்தது, மனத்திலிருந்து வாக்கு (சொல்) பிறந்தது. ஆகவே அஹம், ஆத்மாவின் மகன். 'நான்' 'நான்'என்னும் அஹம் ஆத்மாவின் மகன். ஆகவே அஹம் என்பது இறைவனின் முதற்பெயர். இறைவனுக்கு வேறு பெயர் இல்லை. அஹத்திலிருந்து வந்தது மனம். இது ஆத்மாவின் பேரன். வாக்கு, ஆத்மாவின் கொள்ளுப்பேரன். வாக்கு (சொல்). மனம், அஹம், ஆத்மா இவை ஒரே குடும்பம். ஆகவே மனதில் ஆத்ம உணர்வுகள் இருக்க வேண்டும். வாக்கிலிருந்தும் ஆத்ம பாவங்கள் வெளிவர வேண்டும். நான் அஹம் என்பதில் ஆத்மா ஒளிர்கிறது. ஆத்மா இவற்றுடன் சம்பந்தம் கொள்கிறது. குடும்பத்தைத் துண்டா டலாகாது. இது மாறான செயல். கலிகாலத்தின் தவறு இது. குடும்பத்தினுள் ஒற்றுமை நிலவ வேண்டும். குடும்பம் சின்னாபின்னமானபின் அதன் பலம் குறைகிறது. குடும்பம் பல நூலிழைகளால் பின்னப்பட்டது. அந்நிலை யில் அது வலுவாக இருக்கிறது. நூலிழைகள் பிரிந்து விட்டால், ஒவ்வொரு நூலையும் விரலால் அறுத்து விடலாம். கூட்டுக்குடும்பம் பல குடும்பங்களாகப்பிரிந்து விட்டது. ஆகவே நாம் பலவீனர்களாக இருக்கிறோம்.

ஆகவே, ஆத்மா, அஹம், மனம், வாக்கு இவை ஒரு குடும்பம். இவற்றிற்கு பொதுவான சொத்து இருக்கி றது. அந்த சொத்து Constant Integrated awareness. 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' 'ப்ரக்ஞானம் ப்ரஹ்மா', 'அயம் ஆத்மா

ப்ரஹ்மா'. நான் பிரம்மன். பிரக்ஞானமே பிரம்மன், ஆத்மாவே பிரம்மா. Iam atma and Brahma. நானே ஆத்மாவும், பிரம்மனும். இவை அனைத்தும் ஏகதத்துவத் தையே (ஒருமைத்தன்மையையே) கற்பிக்கின்றன.

## ஏகாத்ம பாவனையே சிறந்தது

இக்காலத்தில் Brother hood of man என்று கூறுவதை நம்மால் நம்ப இயலவில்லை. அனைவரும் சகோதரர் என்ற உணர்வைக் கூறுகின்றனர். அவ்வாறிருந்தால் உச்சநீதி மன்றம் வரையில் சென்று வழக்காட வேண்டும். சகோதரர்க ளுக்கிடையே வெறுப்பும், வேறுபாட்டு மனப்பான்மையும் மலிந்துள்ளன. அனைவரும் சகோதரர் என்ற உணர்வுக்கப் பால் உள்ள ஏகாத்ம பாவனையே (அனைவரும் ஒருமையே என்ற தன்மை) உயர்ந்தது, சாலச்சிறந்தது. ஆத்மா ஒன்றே என்ற உணர்வு வலுப்படும்போது, வெறுப்புணர்வு இராது. அது போல இது மாயை என்று கூறிக்கொள்கிறோமே, இந்த மாயை என்பதே ஒரு பிரமை, கற்பனை. மாயை என்பதில்லை. உன்னிடமே உனக்கு திடநம்பிக்கை இல்லை. உனது சுயநம்பிக்கையை இழந்து விட்டாய். ஆகவே அவநம்பிக்கை மேலிடுகிறது.

உடற்பற்று நம்மிடம் மேலோங்கியிருக்கிறது. என் தந்தை, என் தாய், என் சகோதரன் என்று கூறுகிறோம். யசோதை கிருஷ்ணனிடம், 'நீ மண்ணைத் தின்றாயா? வாயைத்திற' என்றாள். அவன் வாயைத்திறந்தான். 14 உலகங்களும் உள்ளே தெரிந்தன. அறிவற்ற அந்தத்தாய் அக்காட்சியை நம்பவில்லை.

"கனவோ, விஷ்ணுவின் மாயையோ, நான் யசோதை தானோ, இது வேறிடமோ" என்று தான் கண்டதையே நம்பவில்லை.

## சுயநம்பிக்கையின் அவசியம்

உன்னிடம் உனக்கு நம்பிக்கை இல்லாதபோது, எவ்வாறு மற்றவரை நம்புவாய். எவ்வாறு இறைவனிடம் நம்பிக்கை கொள்வாய்? ஆகவே நாம் சுயநம்பிக்கையை வளர்க்க வேண்டும். செயல் புரிவதுதான் சுயநம்பிக்கையை வளர்க்கும். சுயநம்பிக்கைக்கு ஒரு பிரதிச்செயல் விளையும். ஒவ்வொரு செயலுக்கும் ஒரு பிரதிச்செயல் உண்டு. ஒவ்வொரு ஒலிக்கும் ஒரு எதிரொலி உண்டு. Reaction, Resound, Reflection இவை Reality (உண்மை இருப்பு) சம்பந்தப்பட்டவை. நிஜம் இல்லாவிடில் Reaction ஏது, Resound எது, Reflection எது. ஒலி இல்லாவிடில் எதிரொலி இல்லை. உண்மை இருப்பை மாற்ற இயலாது. அதுவே நிஜமான தெய்வதத்துவம். அதுவே ப்ரக்ஞானம்.

## பக்திவழி

இந்த ப்ரக்ஞானத்தை, பக்தி வழியில் அடையலாம். இதற்கு பல வகைகள் உண்டு.

ச்ரவணம் (கேட்டல்) கீர்த்தனம் (பாடுதல்) விஷ்ணுஸ்மரணம் (நாமத்தை உச்சரித்தல்) பாதசேவனம் (சேவை), வந்தனம் (வணங்குதல்) அர்ச்சனம் (வழிபாடு) தாஸ்யம் (சேவகம்), சாக்யம் (நட்பு) ஆத்ம நிவேதனம் (சரணாகதி, தன்னையே வழங்குதல்) எந்த வழியிலும் இறைவனை அடையலாம். இவற்றில் மிக முக்கியமானது நட்பு.

உண்மையான நண்பன், தன்னலமற்ற நண்பன் கடவுளேயாவர். தாய் சுயநலத்துடன் நேசிக்கிறாள். தந்தை சுயநலத்துடன் நேசிக்கிறார். மனைவி சுயநலத்துடன் நேசிக்கிறாள். இறைவனுக்கு எந்த சுயநலமும் இல்லை, சுயலாபமும் இல்லை. எல்லா சமயங்களிலும் கொடுத்துக்கொண்டே

இருக்கிறார். கடவுள் ஒருவர்தான் உண்மையான நண்பர். நாம் இறைவனுடன் நட்பை வளர்த்துக்கொள்ள வேண்டும். இந்த நட்புக்குப்பின் ஆத்ம நிவேதனம் (சரணாகதி) பின் தொடர்கிறது. சரணாகதிக்கு முன்னர், நட்பு தேவை. இராமனும் சுக்ரீவனும் மிக நெருங்கிய நண்பர்கள். அதன் பயனாக, சீதையை மீட்கும் பணி வெற்றிகரமாக நிறைவேறி யது. அத்தகைய ஆழ்ந்த நட்பு இல்லாவிடில், சுக்ரீவன் அத்தகைய பணியை மேற்கொண்டிரான். பணி முடிந்ததும் இராமன் சுக்ரீவனிடம் ''நாங்கள் நால்வர்தான் சோதரர்கள் என்று நினைத்தோம். இல்லை நாம் ஆறு சகோதரர்கள்'' என்றான். ராமலட்சுமணன் பரத சத்ருக்கனன் ஆகிய நாலு சகோதரர் கூட கிஷ்கிந்தையிலுள்ள சுக்ரீவன், இலங்கையி லுள்ள விபீஷணன் ஆக ஆறு பேர். பஞ்சப்ராணன்கள் என்று நினைத்திருந்தோம். நாம் ஆறு பிராணன்கள். சுக்ரீவன் இல்லாமல் சீதையைத் தேடிக்கண்டு பிடித்தல் இயலாத காரியம். விபீஷணன் இல்லாது, இராவணனைக் கொல்வதும் இயலாதது. ஒவ்வொன்றிலும் அளவற்ற ஆற்றல் உள்ளது. அனைத்தும் இறைவனது ஆற்றல்களே.

சிறுபுல்லும் பல் குத்த உதவும். ஆக, சிறுபுல்லைக் கூட கேலி செய்தல் தகுமா? அத்வேஷ்டா ஸர்வ பூதானாம். எவரையும் வெறுக்கலாகாது. மனிதருக்குள் வேறுபாடு காட்டலாகாது. அவர்களை ஒற்றுமைப்படுத்த வேண்டும். ஏகத்துவத்தில்தான் (ஒருமைத்தன்மை)யில்தான் அனைத்து வல்லமையும், புனிதமும் அடங்கியுள்ளன. ஆகவேதான் பகவான் அடிக்கடி "Unity in Diversity - பல்வகையினூடே உள்ள ஒருமைத்தன்மை'' என்று கூறுவதுண்டு.

Beings are many, breath is one
Nations are many, earth is one
Jewels are many, Gold is one
Stars are many, Sky is one.

உயிர்கள் பலவாயினும் மூச்சு ஒன்றே
நாடுகள் பலவாயினும், பூமி ஒன்றே
நகைகள் பலவாயினும் தங்கம் ஒன்றே
விண்மீன்கள் பலவாயினும், ஆகாயம் ஒன்றே.

மனிதர்கள் ஒருமைப்பட்டு இருந்தால், தெய்வீகம் ஒருமை யானது என்று அறிவார்கள்.

## இறைவன் கூறியபடி நடத்தல் வேண்டும்

தெய்வத்துவத்தை உணர இம்மூன்று வழிகளைப் பின்பற்ற வேண்டும். நாம் பாடும் பஜனைகளும், நாம் புரியும் ஜபமும், பக்திக்கான அடையாளங்களேயாகும். ஆயினும் நமது இலட்சியத்தை ஆத்ம சாட்சாத்காரத்தை அடைய முடியவில்லை! ஏன்? பக்தியினால் கூறும் சொற்கள் எதையும், நாம் அன்றாட வாழ்க்கையில் பயிலுவ தில்லை. நாம் இராம பக்தர்கள் என்று நினைத்துக்கொள்கி றோம். இராமர் தந்தையின் ஆணையைப் பின்பற்றினாரே. நாம் செய்கிறோமா. அவர் நான்கு சோதரரின் ஒற்றுமையை யும் நிலை நாட்டினார். நாம் அவற்றை செய்கிறோமா. வாக்குறுதியை நிறைவேற்ற நாட்டைத்துறந்து தந்தை வாக்கைக் காப்பாற்ற காட்டுக்குச் சென்றாரே. நாம் அவ்வாறு செய்வோமா? சத்தியத்தை கடைபிடிக்கிறோமா? கூறிய வாக்கை நிறைவேற்றுகிறோமா, இல்லை இராம பக்தர்கள் என்று எவ்வாறு கூறிக்கொள்ளுதல் சரியாகும்? பெயரளவில்தான் நாம் இராம பக்தர்கள். இராமனுக்குப் பங்காளிகள் அல்ல. அவரது ஆணைப்படி நாம் நடந்தால், அவரிடம் பங்கு கேட்க நமக்கு உரிமையும் அதிகாரமும் உண்டு.

கிருஷ்ணபக்தர் என்று கூறிக்கொள்கிறோமே, கிருஷ் ணன் போல நடந்து கொள்கிறோமா? அவரது ஆணைக

ளைப் பின்பற்றுகிறோமா? இல்லை. கிருஷ்ணபக்தர் என்று எவ்வாறு கூறிக்கொள்ள இயலும்.

சாயிபக்தர் என்று கூறிக்கொள்கிறோம். சாயிகூறுவதின் படி, யார் கேட்கிறார்கள். ஆண்டுதோறும் நீங்கள் இங்கே இருக்கிறீர்கள். அவரது அறிவுரைகள் பல கேட்கிறீர்கள். இங்கு நிரந்தரமான வீடுகளில் பலர் இருக்கின்றார். நாலில் ஒரு பங்கு கூட பின்பற்றுவதில்லை. கேட்பது முக்கிய மல்ல. பேசுவது முக்கியமல்ல. கூறிய அறிவுரைகள் படி வாழ்க்கை நடத்துவதே மிக முக்கியம்.

''ஒளியைப்பற்றிய செய்திகேட்டதும், இருள் விலகு மா?'' விளக்கு ஏற்றாமல், இருள் எவ்வாறு விலகும்?

பொருளாதாரத்தைப் பற்றியும், செல்வத்தைப் பற்றியும் கேட்பதால் மட்டும் வறுமை விலகிவிடுமா?

கொடிய பசி, அறுசுவை உண்டி பற்றி கேட்டதும் விலகுமா?
மருந்தின் மகிமையைக் கேட்டதுமே வியாதி விலகி விடுமா?

இல்லை. இல்லை. அது போல இராமாயணம் படிக்கிறார் கள், மகாபாரதம் படிக்கிறார்கள், பாகவதம் படிக்கிறார்கள். பாராயணம் செய்கிறார்கள். என்ன செய்தும் விளைவு என்ன? இன்னமும் இராமாயணம் கேட்கிறார்கள். பகவத் கீதை பாராயணம் செய்கிறார்கள். சஹஸ்ர நாமமும் படிக்கிறார்கள். இவை அனைத்தும் நூலறிவுகள்தானே வேறொன்றுமில்லை. உங்களுக்கு Practical Knowledge தேவை.

## ஒரு அறிவுரையை பின்பற்றுவதே போதுமானது

ஒரு அறிவுரையைப் பின்பற்றினாலே போதுமானது. நம்மை பக்தர்கள் என்று கூறிக்கொள்வது அவமானகரமா னது. நாம் வெகு அருகில் இருக்கிறோம். நாம் மலர் அருகில் உள்ள தவளை போல இருக்கிறோம். ஆனால் தேனீக்கள் வெகு தொலைவிலிருந்து வந்து தேனைப் பருகுகின்றன. Near (அருகிலிருப்பது) முக்கியமல்ல. Dear-தான் (அன்புக்குரியதாக) இருப்பதுதான் அவசியம். Near and Dear இரண்டும் அவசியமே. அவற்றில் ஏதாவது ஒன்றினையாவது நீங்கள் பெற வேண்டும். அருளுரைகளை வெறுமே கேட்பது ஒலிநாடாவை (Tape Recorder)ப் போன்றது. ஒலி நாடாவையே பார்த்துக்கொண்டிருந்தால், ஒன்றும் செவியில் விழாது. அதைப்பல துண்டுகளாக வெட்டினாலும் அவற்றிலிருந்து ஒலி வெளிவராது. ஒலிநா டாவை மின்சாரத்துடன் இணைத்தால், ஒலிவெளிவரக் கேட்கலாம். அதுபோல இதயத்தில் உள்ள உங்கள் உணர்ச்சி கள் அனைத்தையும் இறைவனுடன் இணைத்துக்கொள்ள வேண்டும். அப்போதுதான் இதயத்தில் உள்ள உணர்வுகள் அனைத்தும் வெளிவரும். ஆகவே கடவுளுடன் இணைத்துக் கொள்ளுதல் மிக அவசியம். சேகரித்த பொருள் அனைத் தும், இறைவனுடன் இணைப்பதில் முடிவுற வேண்டும். பிறகுதான் தேர்ந்தெடுத்தல் (Selection) நடைபெறும். நீர் தேர்ந்தெடுக்கப்படுவீர்கள். அதுவே வாழ்க்கையில் ஆர்வத் தைக் கொடுப்பது. அத்தகைய ஆர்வமே இச்சாசக்தி. இச்சாசக்தியே கிரியா சக்தியாக மாறுகிறது. கிரியாசக்தியே ஞான சக்தியாக வடிவமெடுக்கிறது. இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி இவற்றின் வடிவமே கர்மம், உபாஸனை (பக்தி) ஞானம் எனப்படுபவை.

ஒவ்வொரு கர்மத்தையும் இதயத்தூய்மை செய்வதற்கா கச் செய்ய வேண்டும். ஒவ்வொரு செயலையும் இறைவனுக் காகச் செய்ய வேண்டும். 'ஸர்வகர்மம் பகவத் ப்ரீத்யார்த்தம்' - அனைத்துக் கருமங்களும் இறைவனைத் திருப்தி செய் யவே என்று செய்தால், அவை இறைவனைப் போய்ச்சேரும்.

கர்மம், பக்தி ஞானம் இவை மூன்றும் வேறானவை அல்ல. அனைத்தும் ஒன்றேதான். இவற்றிற்குள் வேறுபாடு இல்லை. பேரும் வடிவங்களும் வேறு. ஆத்மதத்துவம் ஒன்றே. ஏகாத்ம பாவனையில் முழுநம்பிக்கை கொண்டு, தெய்வீக மார்க்கத்தில் நடந்து, தெய்வீகத்தை உணர்ந்து அனுபவிக்க மனிதனுக்கு உரிமையும் அதிகாரமும் உண்டு.

*—பாபா*

*(கோவிந்த ஹரே... என்ற பாடலுடன் பகவான் தன் அருளுரையை நிறைவு செய்தார்.)*

*29.6.96*

# 3. நல்லதைச் செய் நல்லதை அறுவடை செய்

கெட்டதைச் செய்து, நல்ல பலன் எதிர்பாராதே
நல்லதைச் செய்து, கெட்ட விளைவை எதிர்பாராதே
எலுமிச்சை நட்டால், மாமரமா வளரும்?
மாஞ்செடி நட்டால், எலுமிச்சையா வளரும்?

## செயலுக்குத் தகுந்த விளைவு

*மாணவர்களே!*

விதைப்பது எதுவோ அதுவே விளையும். என்ன விதைக்கிறாயோ, அதற்குரிய செடியாக மாறி, மரமாக வளரும். இதுவே இயற்கையின் இயல்பு. இதுவே இயற்கை யின் இரகசியம். யார் இதை ஏற்றாலும், மறுத்தாலும் இவ்வுண்மை மாறாதது.

மனிதன் செய்யும் ஒவ்வொரு செயலுக்கும் ஒரு விளைவு உண்டு. செயலுக்குத் தகுந்த விளைவு. விதைக்குத் தகுந்த செடி. விதையொன்று போட, தரையொன்று முளைக்குமா? மனிதன் தனது செயலுக்கேற்ற எதிர்ச்செய லையும் விளைவையும் பெறுகிறான். ஒவ்வொருவரும், நல்ல பலனைப்பெற, நல்லதைச் செய்ய வேண்டும். மனிதன் நற்செயல்களுக்குரிய பலன்களை விரும்புகிறான். ஆனால் நற்செயல்கள் செய்வதில்லை. அவன் பாவச்செயல் களுக்குரிய பலனை விரும்புவதில்லை. ஆனால் பாவச்செ யல்கள் புரிகின்றான். இதுவே மனித்னிடம் உள்ள அறி யாமை? இது மனிதப்பண்பின் இயல்பல்ல. அவனை வழிநடத்திச்செல்லும் இயற்கையுணர்வுகளின் இயல்பு. மனி தர்கள் ''கடவுளே, எனக்கு ஏன் இத்தனை துன்பங்களையும்,

இடைஞ்சல்களையும், கவலைகளையும் கொடுத்து என்னை சோதிக்கிறாய்? கடவுள் நமக்கு துன்பமோ, இன்பமோ எதுவும் கொடுப்பதில்லை. அனுபவிக்கும் இன்பதுன்பங்கள், உன்னால் விளைந்தவையே. கடவுள் சாட்சிபூதம். இறைவன் தபால்காரர். உங்கள் விலாசம் எழுதப்பட்ட கவர், கார்டு இவற்றைக் கொடுக்கிறார். உங்களுக்கு மணிஆர்டர் வந்தால், பணம் கொடுக்கிறார். கவரினுள் உள்ள கடிதம் உன்னைப்பற்றியதாக இருக்குமேதவிர, அது தபால்காரர் சம்பந்தப்பட்டதல்ல. உனது அனுபவங்கள், உனது செயல்களின் விளைவே தவிர, இறைவனால் கொடுக்கப்பட்டவையல்ல. ஆயினும், இறைவனது விசேட அருளாசி கிடைக்க வாய்ப்புண்டு. பவித்ரமான பாவனையுடன், தூய மனதுடன் சுயநலமற்று இறைவனைப் பிரார்த்தனை செய்தால் கடவுள் விசேட அருளாசியுடன் உனக்கு உதவி செய்வார்.

### சுகதுக்கங்களுக்கு அடிப்படை

சுகதுக்கங்களுக்கு அடிப்படை ஒன்று வேண்டும். அது அடிப்படையானது. இப்பிறவியிலோ, இதற்கு முற்பிறவிகளிலோ, நாம் செய்த செயல்களுக்குத்தக்கவாறு, பலன்களை கடவுள் அளிக்கிறார். சில நிமிடங்களுக்கு முன் 12-ம் வகுப்புப்பையன் ஒருவன் கூறினான்: "துரியோதனன் திரௌபதியை பொதுஅரங்கத்தில் அவமானப்படுத்த முடிவு செய்தான். எத்தகைய உதவியை திரௌபதி நாடினாள்?

கேசவா மாதவா வாசுதேவா மதுசூதனா என்று பிரார்த்தித்தாள். கா+அ+ஈசா - கா - பிர்மா; அ - விஷ்ணு: ஈசா. மஹேஸ்வரா. திருமூர்த்தி வடிவினனே கேசவன். பராசரர் வேறுவிதமாகக் கூறுகிறார். கேச+வா- கறுத்த சுருண்ட குழலுடையவர் கேசவர். அவள் பிரார்த்தனைக்கு எவ்வாறு

அருள் செய்வது? என்று யோசனை செய்தார் கிருஷ்ணன். முன்பு ஏதாவது உதவி செய்திருந்தாளா? திரௌபதியின் முந்தைய காலத்தைப்பற்றி நினைத்தார். சங்கராந்தி தினம். அனைவரும் கரும்பு தின்றனர். அன்று மாலை கிருஷ்ணனுடன் கூட சத்திய பாமா, ருக்மணி, ஜாம்பவதி, திரௌபதி, கோபியர் அனைவரும் ஆனந்தமாக நேரத்தைக் கழித்தனர். அவர்களைச் சோதிக்க எண்ணி, கிருஷ்ணன் தன் விரல் வெட்டுப்பட்டது போல துடித்தார். பக்தர்களைப் பரிசோதிப்பது இறைவனின் இயல்பு. இவ்வாறு சோதிப்பதை இறைவன் மிகவும் விரும்புகிறார். பக்தன் வெற்றி பெற்றால் இறைவனது அருளாசி அவனுக்குண்டு. தொடக்கப்பள்ளியில் சேர்வதற்கு முன் ஒரு தேர்வு உண்டு. பள்ளியில் சேரத் தகுதி உண்டா இல்லையா என்று அது தீர்மானிக்கிறது. பகைமையினாலோ வெறுப்பினாலோ இச்சோதனை நிகழ்வதில்லை. அளவற்ற அன்புடனும் கருணையுடனும் இறைவன் சோதனையை நடத்தி, பின் அருளாசியை வழங்கத் தீர்மானிக்கிறார்.

கிருஷ்ணன் விரலிலிருந்து இரத்தம் வழிவதை ருக்மணி, சத்தியபாமா, ஜாம்பவதி போன்றோர் கண்டனர். அவர்கள் அருகிலும் இருந்து, அன்புக்குப்பாத்திரமாகவும், இருந்ததால் இதைக் கண்டனர். சத்தியபாமா பணிப்பெண்களை அழைத்து, கட்டுப்போட துணி கொண்டு வரும்படி பணித்தாள். ருக்மணி துணியைக் கொண்டுவரத் தானே ஓடினாள். திரௌபதி பார்த்தாள். அவள் தனது புடவையின் ஒரு ஓரத்தைக்கிழித்து அந்தத்துண்டால் விரலுக்குக் கட்டுப் போட்டாள். இதைக்கண்ட ருக்மணிக்கும், சத்யபாமாவுக்கும் வெட்கத்தால் முகம் சிவந்தது. நமக்கு கிருஷ்ணனிடம் அத்தகைய அன்பு இல்லை. நாம் உடல் உணர்வுடனேயே இருக்கிறோம். சூழ்நிலைக்குத் தகுந்தவாறு மனம் மாறவில்லை. திரௌபதியின் பக்தி இந்த அளவுக்கு ஆழமானது. அவர்கள் மனம் வருந்தி வெட்கப்பட்டார்கள்.

முன்பு நடந்ததை இவ்வாறு நினைத்து அறிந்த கிருஷ்ணன் திரௌபதி அன்று காட்டிய அன்புக்கு இன்று பிரதிபலன் தரவேண்டும் என்று விரும்பினார். இவ்வுலகத்தில் ஏதாவது ஒன்று கொடுத்தாலேயல்லாது, நமக்கு விருப்பமான ஒன்றைப்பெற இயலாது. ஒரு கைக்குட்டை வேண்டுமென்று, 10 ரூ கொடுத்து அதைப்பெற்றுக்கொள்ள வேண்டும். இறைவனுக்கும் பக்தனுக்கும் உள்ள உறவு இத்தகையதல்ல. நீ தினையளவு கொடுத்தாலும் இறைவன் அதை ஏற்று உனக்கு மலையளவு வழங்குவார். குசேலர் கிருஷ்ணனுக்கு ஒருகைப்பிடியளவு அவல் கொடுத்தார். அதற்கு பதிலாக அளவற்ற செல்வத்தைப் பெற்றார். சத்தியபாமா கிருஷ்ணனை விற்க ஏற்பாடு செய்தபோது ஒரே ஒரு துளசி இலை மட்டுமே கொடுத்தாள்.

## முழுமையான அர்ப்பணம்

பத்ரம். இலை. இவ்வுடல் இலை போன்றது. இவ்வுடல் மூன்று குணங்களைக் கொண்டது. தமஸ், ரஜஸ், சத்வம் என்ற முக்குணங்களைக் கொண்ட இலை, இவ்வுடல். மலர் என்பது இதயமலர். அது புனிதமானது. நறுமணம் வீசுவது 'ஃபலம்' - பழம். இது மனதில் விளைந்த பழம். பழத்தினுள் இனிய சாறு இருக்கிறது. அந்த சாற்றினது சுவையை மனம் அறியாது. ரஸத்தின் சுவையை பழம் அறியாது. கொடி தன்னிடம் உள்ள மலரில் உள்ள தேனின் சுவை அறியாது. புனித நூல்களில் கூறப்பட்ட புனித விவரங்களை உலகியல் மக்கள் அறியார்கள். ருக்மணி துளசி இலையை அர்ப்பணித்தாள். முழுமையான பக்தியுடன் ஒரு துளசி இலையை அளித்ததால், அது கிருஷ்ணனின் முழு எடைக்குச் சமமுள்ளதாயிற்று. தனக்கென்று ஒரு கோரிக்கையும் இல்லாது, ருக்மணியால் அவ்வாறு கொடுக்க முடிந்தது. திரௌபதி இவ்வாறு

கோரிக்கை எதுவுமில்லாமல், முழுமனதுடனும் இறைவனுக்கு உதவி செய்தாள்.

''கேசவா, மாதவா, தேவா மதுசூதனா'' என்று திரௌபதி பிரார்த்தித்தாள். அவள் கணவர்கள் பெரும் வீரர்கள். பலமும், தைரியமும் அறிவும் நிரம்பப் பெற்றிருந்தனர். அவர்கள் யாவராலும் இந்த அவல நிலையைத் தடுக்க இயலவில்லை. கிருஷ்ணன் மட்டுந்தான் தன்னைக் காப்பாற்ற இயலும், மற்ற யாராலும் இயலாது என்று பிரார்த்தித்தாள். முன்பு அவள் செய்த தியாகத்துக்கு இப்போது பெரும் பலன் கிடைத்தது. அவள் அளித்தது சிறு துண்டுத்துணி. இப்போது அது அளவற்ற புடவைகளாக மாறியது. நாம் கொடுப்பது சிறியதாயினும், அதற்கு ஈடாக, அளவற்றதை அளிப்பார் இறைவன். கர்மத்தின் பலனில் இருந்து நாம் தப்பவே இயலாது. ஆனால் தெய்வீக அருளின் பயனாக, செயல்களின் விளைவுகளில் இருந்து தப்பிக்க முடியும். இறைவனது கட்டளையாக இத்தகைய விதிமுறை வகுக்கப்பட்டுள்ளது. செயல் அதுவோ அதற்குத்தகுந்த பலனை அநுபவித்தேயாக வேண்டும்.

**கர்ணன்**

ஓ மனிதா, ஊழ்வினையிலிருந்து விலகியோட முடியுமா
சிறந்த நூல்களைப்படித்து அறியலாம்.
தெய்வங்களை பலவழிகளில் போற்றி வணங்கலாம்.
அடர்ந்த வனத்தில் சென்று தங்கலாம்
ஊழ்வினையிலிருந்து மட்டும் தப்ப இயலாது.
ஏரியில் முகக்கலாம், ஆழ்கடலில் முகக்கலாம்
அளவுக்கு மிஞ்சியநீர் பாத்திரத்தில் சேராது
இறைவனின் அருளாசி பெற்றால் பாத்திரம் பெரிய
தாகலாம்

இறைவனின் திருவருள் இல்லாது, பலனொன்றும் கிட்டாது
உடல் பலம் இருந்தாலும், புத்தியின் பலம் இருந்தாலும்
தர்மபலத்தின் உதவியும் இறைவனின் உதவியும் இல்லாது
பலனொன்றும் கிட்டாது
மாவீரன் கர்ணனுக்கு நேர்ந்த கதி என்ன?
இந்த நல்வாக்கை என்றும் மறவாதீர்.

கர்ணனிடம் உடல் பலம் இருந்தது. புத்தி பலம் இருந்தது. அஸ்திர சஸ்திரங்களின் ஆயுத பலமும் இருந்தது. இறைவனின் திருவருள் இல்லை? காரணம் என்ன? கெட்டவர்களுடன் சேர்ந்து, கெட்ட எண்ணங்களை வளர்த்துக்கொண்டு, நான்கு கெட்ட மனிதர்களில் ஒருவனாக மாறினான் கர்ணன். துரியோதனன், துச்சாதனன், சகுனி இவர்களுடன் நான்காவதாக இவனும் இடம் பெற்றான். கெட்டவர்களுடன் ஒரு பொழுதும் சேராதே. கெட்டவர்களுடன் சேர்ந்திருந்தால், கெட்ட எண்ணங்கள் உன்னிடம் அதிகரிக்கும். அவற்றின் விளைவாக கெட்ட செயல்களில் ஈடுபடுவாய். சேர்க்கை மிக முக்கியமானது.

Tell me Your Company, I shall tell you what you are .

உன்னுடன் சேர்ந்தவர் யார் என்று கூறு; நீ யாரென்று நான் கூறுகிறேன்.

உண்மையில் கர்ணன் தருமப்பிரபு. கர்ணனின் உணர்வுகளை நாம் புரிந்துகொள்ள வேண்டும். போர்க்களத்தில் கர்ணன் கீழே வீழ்ந்தான். கர்ணனின் வீரத்தையும் ஆற்றலையும் அர்ஜுனனுக்குத் தெரிவிக்க வேண்டும் என்று கிருஷ்ணன் திருவுள்ளங் கொண்டார். ஏனெனில் அர்ஜுனனுக்கு

அகங்காரம் மிகுந்திருந்தது. தன்னைவிடச் சிறந்தவர் யாரு மில்லை என்று அகந்தையுடன் இருந்தான். ''கிருஷ்ணன் எனது நண்பன். எனது மைத்துனன். நான் கூறியதை மறுக்க மாட்டான். கிருஷ்ணன் என் விருப்பங்களை நிறைவேற்று வான்'' என்ற கர்வத்துடன் இருந்தான். இனிய மிருதுவான பாணியில் அர்ஜுனனைத் திருத்த வேண்டுமென்று கிருஷ் ணன் நினைத்தார்.

கிருஷ்ணன் பிராமண வடிவத்தில் கர்ணனிடம் வந்தார். கர்ணன் கீழே வீழ்ந்து, துன்பத்தால் தவித்துக் கொண்டிருந் தான். கர்ணன் அருகில் சென்று கர்ணா, நீ தானகர்ணன் என்ற பெயர் பெற்றவன். வீட்டில் ஒரு காரியத்தை நிறைவேற்ற நினைத்திருந்தேன். நீர் இருக்கும் நிலையில் உம்மைக் கேட்பது தகாது. உம்மிடமிருந்து ஏதாவது வாங்க வேண்டுமென்று வந்திருக்கிறேன். அந்த நிலையிலும் கர்ணன் ''தங்களுக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்டான். பிராமணன் தங்கம் வேண்டுமென்று கேட்டார். சென்று என் மனைவியிடம் கேளுங்கள். உங்களுக்குத் தேவையான தங்கம் அவள் தருவாள் என்றான். நான் வெறும் பொருளுக் காக மட்டும் இங்கு வரவில்லை. உன்னை நேரே கேட்க வேண்டுமென்றுதான் வந்தேன். என்னால் வியாபாரம் செய்ய இயலாது. உன்னுடைய மாமனார், மாமியார், மைத்துனர்களிடமெல்லாம் கேட்க இயலாது. கர்ணன் யோசித்தான். ''போர்க்களத்தில் தங்கத்தை எங்கே தேடு வேன்''? பற்களில் தங்கத்தகடுகள் பதித்திருந்தான். அக்கா லத்தில் பற்கோளாறுகள் இருந்தபோது, தங்கத்தைப் பதிப் பது வழக்கமாக இருந்தது. கர்ணன் கூறினான். ''பிராமணரே இந்த இண்டு தங்கப்பற்களையும் கொண்டு செல்லுங்கள்'' 'இது என்ன? உன்னைத் துன்புறுத்தி நான் தங்கத்தைக் கொண்டு போக வேண்டுமா? நீ இதைத் தானம் என்கி றாயா? இதை தானம் என்று எவ்வாறு கூறுவாய்? இது

தானம் இல்லை. உன் பற்களை நான் தொட மாட்டேன்''. கர்ணன் இரண்டு கற்களை எடுத்தான். பற்களை தட்டி எடுத்துக்கொடுத்தான். ''நான் பிராமணன். எவ்வாறு இரத்தத் தைத் தொடுவேன். நீ க்ஷத்திரியன். உனக்குச் சொந்தமா னதை நான் எவ்வாறு தொடுவேன்? இது எனது நெறிமு றைக்கு விரோதமானது''. கர்ணன் வில்லெடுத்து, பூமியை நோக்கி அம்பெய்தான். நிலத்திலிருந்து கங்கை நீர் பெருகி வந்தது. கங்கை நீரில் பற்களைக் கழுவி பிராமணனிடம் கொடுத்தான். கிருஷ்ணன் அர்ஜுனனை நோக்கினான். அர்ஜுனன் தலைகுனிந்து கொண்டான். 'இத்தகைய தியா கம், இத்தகைய பக்தி இவற்றை எங்கும் கண்டதில்லை. கிருஷ்ணா, என்னை மன்னியுங்கள்' என்றான் அர்ஜுனன். அப்போது கிருஷ்ணன் கூறினான். ''கர்ணன் யாரென்று தெரியுமா. உனது மூத்த சகோதரன். தர்மபுத்திரருக்கு மூத்தவன் கர்ணன்''. அருச்சுனன் மனம் மிக நொந்தான். ''இதை முன்பே நீர் ஏன் என்னிடம் கூறவில்லை'' அவர் என் அண்ணன். இருந்தாலும் நான் துன்பம் விளைவித்தே ஆக வேண்டும். கர்ணன், தர்மபுத்திரரை விட மேலானவர்''.

## செயல் புரிவது எப்படி?

அக்காலத்தில் மக்கள் தர்மத்தைப் பின்பற்றினர். கடவு ளுக்கு எதையும் அர்ப்பணிக்கச் சித்தமாக இருந்தனர். நாம் புனிதமாக செயல்களை மேற்கொள்ள வேண்டும். செயலுக் குத் தகுந்த விளைவுகள் ஏற்படுகின்றன. செயல்களை மகிழ்ச்சியுடன் செய்கிறோம். துன்பப்படும்போது கண்ணீர் விடுகிறோம். செயல்புரிவதற்கு முன் எது நல்ல செயல், எது கெட்ட செயல் என்பதைத் தீர்மானித்து பிறகு செயல்புரிய வேண்டும். இக்காலத்தில் முன்யோசனை செய்து, செயல்புரிவதில்லை. முன்யோசனை செய்து பேசுவ தில்லை. யோசிக்காமலேயே செயலில் ஈடுபடுகிறார்கள்.

பிற்காலத்தில் துன்பமடைந்து, நிராசையடைகிறார்கள். இயற்கையின் ஒவ்வொரு செயலும் இயல்பான செயல். மழை பெய்கிறது. இது எல்லாருக்குமாகப் பெய்கிறது. எல்லாருக்கும் சுகம் தருகிறது. எல்லார் தாகத்தையும் தீர்க்கிறது. காற்று வீசுகிறது. அது ஒரு மனிதனுக்காக வீசவில்லை. எல்லாருக்காகவும் வீசுகிறது. அனைவருக்கும் மூச்சாக இருக்கிறது. பஞ்ச பூதங்களும் எல்லாரையும் போஷிக்க வளர்க்க உதவுகின்றன. குறிப்பிட்ட மனிதரின் பயனுக்காக, அவை தொழில் புரிவதில்லை. எல்லாருக்குமா கத் தொழில் புரிகின்றன. இறைவனும் அவை போன்றே. இறைவனும் குறிப்பிட்ட சாதிக்காகவோ, குறிப்பிட்ட மனிதருக்காகவோ அவதாரம் எடுக்கவில்லை. மனித சமுதாயத்தில் விடுதலைக்காக அவதரிக்கிறார். செயலின் விளைவுகளுக்குப் பயந்துகொண்டு ஓடலாகாது என்பதை இறைவன் கற்பிக்கிறார். வேலையைத் தொடங்குமுன் சிறிது நேரம் சிந்தித்து, பிறகு நல்லவிதமாகத் தொடங்கவேண்டும். செயல்மூலமாக யாருக்கும் எந்த இடையூறும் வராமல் பார்த்துக்கொள்ள வேண்டும். இவ்வுலகில் அது இயலாத காரியம். உடல் உணர்வுடனும், உடற்பற்றுடனும் இருக்கும் வரை, கூறியவாறு இருக்க இயலாது. 'நான் உடலே' என்றில்லாதவனே இவ்வாறிருக்க இயலும்.

### உடலுணர்வை விடு

உலகியல் தன்மையுடன் இருக்கும்போதுதான், துன்பமும் வந்தடைகின்றது. இவ்வுலகு, நமது கண்ணோட்டத்தை, நமது பார்வையைப் பொருத்தது. நமது உணர்வு உடலைச்சார்ந்திருக்கும்வரை, உலகியல் பாவனைகள் இருக்கும். அத்தகைய பாவனைகள் இருக்கும்வரை துன்பமும் உண்டு. உடலைச்சார்ந்த உணர்வு விலகும்போது, உலகியல் பாவனையும் விலகும். உலகியல் பாவனை விலகும்போது

துக்கமும் இராது. ஜாக்ரத அவஸ்தையில் (விழிப்பு நிலையில்) உடலைச்சார்ந்த உணர்வு உள்ளது. சுகமும் துக்கமும் கூடவே உள்ளன. சுஷுப்தி அவஸ்தையில் (ஆழ்ந்த தூக்க நிலையில்) நமக்கு உடல் உணர்வு இல்லை. இயற்கையும் தென்படவில்லை. இயற்கையில்லாதபோது துன்பமேது. ஆழ்ந்த உறக்கத்தின்போதுதான், இன்பதுன்பங் களைக் கடந்து இருக்கிறாய். இடைவிடாது கடவுளை நினைப்பதன்மூலம், உடல் சம்பந்தமான உணர்வுகளைக் குறைக்க வேண்டும். உலகியல் எண்ணங்களும் குறைந்துவி டும். உலகியல் பற்றுதலும் குறையும். துக்கமும் குறையும். வலியையும் இன்பத்தையும் வரவேற்கலாகாது.

அது ஒரு நெருப்பு; காட்டுத்தீ
மாமரங்களையும் எரிக்கவல்லது.
காட்டைச்சுற்றி அனைத்தையும் எரிக்கவல்லது.

உடல் சம்பந்தமான உணர்வை விடும்போது, இன்பமும் துன்பமும் உனக்கிராது.

'கனவில் காணும் மாளிகையெல்லாம் நனவில் இருப்பது இல்லையே'

உபநிடதத்தில்,

'உத்திஷ்டத: ஜாக்ரத ப்ராப்ய வராம்ய போதக'.

மனிதா, அஞ்ஞானம் என்ற அறியாமை இருளிலிருந்து எழுந்திரு. ஞானம் என்ற வெளிச்சத்தில் உலவு. உண்மை யைத் தெரிந்து கொள். நீயே சத்தியவடிவினளாக இருக்கும் போதும், உண்மையைத்தேடி அலைகின்றாய். உனது அனுப வங்களில் காணப்படுவதில்லை. நீயே, சத்-சித்-ஆனந்தம்.

**உறக்கநிலை**

பிரதம மந்திரி இருக்கிறார். குடியரசுத்தலைவர் இருக்கிறார். அரசர் இருக்கிறார். அவர்கள் ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கும்போது நான் பிரதம மந்திரி, நான் குடியரசுத்தலைவர், நான் அரசன் என்ற உணர்வு இராது. கண்விழித்ததும், நான் பிரதம மந்திரி, நான் குடியரசுத்தலைவர், நான் அரசன் என்றா கூறுவார்கள். அதேபோல, அறியாமை என்ற ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கும்போது, நான் சத்-சித்-ஆனந்தம் என்ற உணர்வு இராது. விழித்துக்கொள். ஞானம் என்ற விழிப்பு நிலையைப்பெறு. அப்போது, நீயே சத்-சித்-ஆனந்தம் என்ற உணர்வை அடைவாய்.

ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கும்போது நீ யாரென்றே உனக்கு நினைவிராது. விழித்துக்கொண்டபின் உனது பேர், ஊர், உனது உருவம் இவையெல்லாம் அறிவாய். இப்போது நாம் எங்கிருக்கிறோம். இயற்கை என்ற உறக்கத்தில் இருக்கிறோம். உலகியல் என்ற உறக்கத்தில் இருக்கிறோம். உடல் என்ற உறக்கத்தில் இருக்கிறோம். அறியாமை என்ற உறக்கத்தில் இருக்கிறோம். ஆகவே நாம் சத்-சித்-ஆனந்தம் என்பதை அறிந்து கொள்ள இயலவில்லை.

தூக்கத்திலிருந்து எழுந்திரு. விழிப்புணர்வு பெறு. கனவுலகத்தில் உன்னைப்பாம்பு கடிக்கிறது. நீ சத்தமிடுகிறாய். கண்விழித்ததும், கனவில் பெற்ற பாம்புக்கடிக்கு மருந்திடுவதில்லை. எழுப்பி, எழுந்ததும் அவ்வலி மறைந்து விடுகிறது. தூக்க நிலையில் பாம்பைப்பற்றிய பயம் கூடவே இருக்கும். கண் விழித்ததும், பாம்பு இருக்கும் அடையாளமே தென்படாது. பாம்பும் இராது.

## உலகப் பற்றுதல் என்ற உறக்கம்

தற்கால வாழ்க்கையில் நாம் தூங்கிக் கொண்டிருக்கிறோம். உலகப்பற்றுதல் என்ற தூக்கத்தில் இருக்கிறோம்.

'அநித்யம் அசுகம் லோகம்'

இவ்வுலகம் அநித்தியமானது, சுகம் இல்லாதது. இது ஒரு தூக்கநிலை. தூக்க நிலையில் எவ்வளவோ துன்பங்களை அனுபவிக்கிறோம். இதற்கு என்ன மருந்து தேவை? எத்தகைய அருள் தேவை? எத்தகைய பரிகாரம் தேவை? அறியாமை என்ற உறக்கத்திலிருந்து எழுந்தால் அதுவே பரிகாரம். பிரச்சினையும் தீரும். தேகாபிமானம் இருப்பதால் இவையனைத்தும் நம்மைப்பின் தொடர்கின்றன. சிறிது சிறிதாக உடற்பற்றுதல் உணர்வை விலக்கிக்கொண்டே வரவேண்டும். ஆனந்தம் அதிகரித்துக்கொண்டே வரும். உடற்பற்றுதல் குறைய அதற்குத்தகுந்தவாறு ஆனந்தம் அதிகரிக்கும். ஆனந்தநிலையை அடைய விரும்பும் ஒவ்வொருவரும், உடற்பற்றுதலைக் குறைக்கவேண்டும். உடற்பற்றுதலுடன் கூடவே அகங்காரமும் வளர்கிறது. பதவி, செல்வம், உடல்வலிமை, ஜனங்கள் இவை இருப்பதால் உள்ள அகங்காரம் அதிகரிக்கிறது. வாழ்க்கையில் உயர உயர அகங்காரமும் வளர்ந்துகொண்டே வருகிறது.

## ஆத்ம விசுவாசம் சுயநம்பிக்கை

மேகங்கள் நீர் நிறைந்துள்ளன. கனத்து இருப்பதால், கீழிறங்குகின்றன. கனிகள் நிறைந்த மரக்கிளை தாழ இருக்கிறது. மனிதன் எதைச்சார்ந்து இருக்கிறான்? இதை தீர விசாரிக்க வேண்டும். ஒரு சிறு பறவை. இளங்கிளையின்மேல் உட்கார்ந்திருக்கிறது. கிளை அங்குமிங்கும் அசையும்போது, பறவை அஞ்சுவதில்லை. காரணம் என்ன?

அது தன் இறக்கைகளின் மேல் நம்பிக்கை கொண்டுள்ளது. பறவைக்கு அதன் இறக்கைகள் மேல் இருக்கும் நம்பிக்கை, மனிதனுக்குத் தன்னிடம் இல்லை. சிறிது சங்கடம் வந்தாலும் உடனே அஞ்சுகிறான். காரணம்என்ன? ஆத்ம விசுவாசம், சுயநம்பிக்கை இல்லை. பிரச்னை சிறிதளவு இருந்தாலும் அவன் மனத்தளர்ச்சி அடைகிறான். சிறிதளவு துன்பங்கூட அவனால் சகித்துக்கொள்ள முடியவில்லை.

பறவைகளும் விலங்குகளும் வாழ்க்கையை இயற்கை யான முறையில் நடத்துகின்றன. மனிதன் தன் அறிவை நம்புகிறான், உடல் வலிமையை நம்புகிறான், செல்வத்தை நம்புகிறான், தன்னை நம்புவதில்லை. சுயநம்பிக்கை மட் டும் இருந்தால் அனைத்தையும் சாதிக்க இயலும். செல்வம் வரும், போகும். ஓடும் மேகங்கள் போன்றது. மக்கள் துணை, இது எவ்வளவு நாள் நீடிக்கும். பதவியும் பணமும் இருக்கும்வரை எல்லோரும் கூட இருப்பர். பிறகு கௌர வம் உமக்கு எப்போது கிட்டும்? ஆத்மபலம் உமக்கு இருந்தால், மற்ற வல்லமையெல்லாம் உமக்கு தானாகவே வந்து சேரும். ஆத்ம பலத்தையும், (சுயபலத்தையும்) தெய்வ பலத்தையும் நம்பி வாழக்கற்றுக்கொள்ள வேண்டும்.

முழு நம்பிக்கையுடன் செயல்களில் ஈடுபட வேண்டும். செயலுக்குத் தகுந்த விளைவுதான் ஏற்படும். மாவுக்குத்த குந்த பணியாரம். ஒவ்வொருவரும் நற்செயலில் ஈடுபட வேண்டும். என்றும் ஆனந்தத்தை அனுபவிக்க வேண்டும். நல்ல உலகத்தை பெற வேண்டும். இதுவே மனிதனின் முக்கிய இலட்சியம். கெட்டதைச் செய்துவிட்டு நல்ல பலனை எதிர்பார்க்கலாகாது.

தனக்கு களைப்பு தீர்ந்து விட்டதாக எண்ணுகிறார்கள். இது உயர்ந்தவழியா அல்லது அழிவுக்கான பாதையா? இது படித்தவனின் இலட்சணமா அல்லது படிக்காதவனின் செய்கையா? குடிபோதை தலைக்கேறுவதால் அமைதி ஏற்படுகிறது என்று நீயாகவே பிரமை கொள்கிறாய். இது மிகவும் அபாயகரமானது. உனது உடலைக் கெடுத்துக் கொள்வது மட்டுமல்லாமல், சமூகத்துக்கும் தீங்கு விளை வித்து, குடும்பத்துக்கும் துன்பம் விளைவிக்கிறாய். இத்த கைய கெட்ட பழக்கங்களை ஏற்படுத்திக் கொள்ளலாகாது. வீட்டுப்பணிகளில் ஈடுபடலாம் அல்லது சமூக சேவையில் ஈடுபடலாம்.

**பழக்கம்**

இந்தக் கெட்ட பழக்கம் எந்த அளவுக்குக் கொண்டு செல்கிறது என்றால் First Man drinks the wine, next the wine drinks the wine, Last the wine drinks the man. முதலில் மனிதன் மது அருந்துகிறான். பிறகு மதுவே (மதுப்பழக்கமே) மதுவை அருந்துகிறது. முடிவில் மதுவே, மனிதனைப் பருகுகிறது. முடிவில் மது மனிதனை விழுங்குகிறது. இந்த உண்மையையும், நிகழ்வையும் புரிந்து கொள்ளாது, தம்மை மதிக்கூர்மை உள்ளவர்களாக நினைத் துக் கொள்கிறார்கள். இது நண்பர்களுக்கு ஒரு வகையான உதவி என்று நினைத்துக் கொள்கிறார்கள். எத்தகைய உதவி?

சீட்டு விளையாட வருபவர்களிடம் Thanks நன்றி என்று கூறுகிறார்கள். Cocktail bottle மதுப்புட்டி கொண்டு வருபவரிடம் நன்றி என்று கூறுகிறார்கள். புட்டியுடன் புட்டி மோத Cheers என்று கூறி நன்றி என்று கூறுகிறார்கள். இது எந்த நிலைக்குச் சேர்க்கும் என்பதை நீங்கள் புரிந்து கொள்ளலாம். இது கல்வியின் தரமல்ல, பண்பல்ல.

நன்றி

நாம் கிராமத்தில் இருக்கும்போது, யாராவது நமக்கு உதவி செய்யும்போது, யாருடனாவது பேசும்போது, உடல் நலமா? என்று கேட்டால் நன்றி என்கிறோம். உமது கைக்குட்டை கீழே விழ யாராவது எடுத்துக் கொடுத்தால், 'நன்றி' என்று கூறுகிறோம்.

மின் இணைப்பு அளித்து, மின் சக்தி கிடைத்தால் வரி கட்டுகிறோம். தண்ணீர் இணைப்பு கொடுத்தால், தண்ணீர் வரி கட்டுகிறோம். இதந்தரும் தென்றல் காற்றை இறைவன் நமக்கு அளித்திருக்கிறாரே அவருக்கு என்ன வரி கொடுக்கிறோம்? சூரியன் பிரகாசமாக ஒளிவீசுகிறதே என்ன வரி கட்டுகிறோம்? மழை மாரிப்பொழிவதால், ஏரிகளும், குளங்களும் நிரம்பி நமக்குத் தேவையான அளவு தண்ணீர் கிடைக்கிறதே, அதற்கு என்ன வரி கட்டுகிறோம்? சுய நலத்துக்கான செயல்கள் அனைத்துக்கும் வரி கட்டுகிறோம். இறைவனது வெகுமதிகள் அனைத்தும் இலவசமானவை. காற்று இலவசம் (Free) அனைத்தும் கடவுள் உனக்கு இலவசமாகத் தருகிறார்.

இந்த பூமி இறைவனின் பரிசில். இந்தப் பூமியில் ஏதாவது ஒரு எல்லைக்கோடு 45'X30' என்று வகுக்கும் போது, நீ வரிகட்டுகிறாய். இந்த பூமியை உனக்கு அளித்தது யார்? இறைவனே. பஞ்ச பூதங்களும் தெய்வீகமானவை. இவுற்றின் பயனையெல்லாம் நாம் அனுபவிக்கிறோம். இறைவனுக்கு என்ன வரி செலுத்துகிறோம்?

மனிதர்களும் படித்தவர்களும் இதைப்பற்றி ஆராய்ச்சி செய்திருக்கிறார்களா? அநித்தியமான, தற்காலிகமான பொருட்கள் கிடைத்ததற்கெல்லாம், நன்றி கூறி வரி கட்டுகிறோம். நித்யமான, சத்தியமான, சாஸ்வதமான

(என்றும் அழியாத உண்மையான) பொருட்களை இறைவன் நமக்கு அளிக்கிறார். நாமோ, இது தரவில்லை என்று கடவுளைக் குறை கூறுகிறோம். நாம் உதவியா செய்கி றோம்? கெடுதி விளைவிக்கிறோம். கிடைத்த பொருட்க ளுக்கு வரியும் கட்டவில்லை. நன்றியும் கூறவில்லை. இன்னும் வேண்டுமென்று ஆசைப்படுகிறீர்கள்.

### ஆசைகள்

இவ்வாசைகள் வெளிவருவதற்கு முன்னர், நம்மிடம் கெட்ட குணங்களும் மலிந்துள்ளன. கெட்ட குணங்கள் காரணமாக நம்மிடம் அகங்காரம் வளர்ந்துள்ளது. பேராசை, தீயகுணங்கள் அகங்காரம் இவையெல்லாம் மனிதத்தன்மை யல்ல. சாந்தம், சஹனம், (சகிப்புத்தன்மை) தன்னையறிதல் இவையே மனிதகுணங்கள்.

மனிதன் சுயநிறைவான வாழ்க்கையை நடத்த வேண் டும். மனித சமுதாயத்துக்கு இப்போது திருப்தியே (மன நிறைவே) இல்லை. ஒரு சமயம் ஒரு பக்தன் நாராயண னைத் தரிசித்தான். நீர் ஏன் இந்த மேரு மலையைப் படைத்தீர்?

இந்தப் பொன்மலையை நீங்கள் படைத்திருக்கிறீர்கள்.

ஓடும் நீரோடை, மலை, அனைத்தும் இரகசியமான, மர்மமான கல்விகள்.

அள்ளி வழங்கி யிருக்கிறீர்கள் இறைவா. சுற்றிலும் காடுகளைப் படைத்து எங்களுக்கு ஜீவ சக்தியும் வழங்கியி ருக்கிறீர்கள்.

நாம் வெளியே விடும் கரியமல வாயுவை, தாவரங்கள் உள்ளே இழுத்துக் கொள்கின்றன.

மலைகளைப் படைத்தீர்கள். ஓடும் மேகங்களைத் தடுத்து நிறுத்தி, மழைபொழியச் செய்கிறீர்கள்.

அழகிய இவ்வுலகை இன்னும் எழில் மிக்கதாகச் செய்கிறார் இறைவன்.

குளிர்ந்த கிரணங்கள் வீசும் சந்திரனை தலையில் அணிந்திருக்கிறார் இறைவன். எவ்வாறு? கலங்கரை விளக்குப்போல (Light House).....சுருண்ட மயிர்க்கற்றை அதைச்சூழ இருக்கிறது.

சுருண்ட மயிர்க்கற்றை சூழ இருக்க, மூன்றாவது கண் நெற்றியில் ஒளி வீசுகிறது.

குங்குமப்பொட்டினால் நெற்றி சிவந்திருக்க, மென்ற தாம்பூலத்தால் உதடுகள் சிவந்திருக்கின்றன.

இவ்வுலகம் இவ்வாறு எழிலுடன், அழகுடன் சோபையுடன் திகழும்போது, நீங்கள் ஏன் அழியும் பொருட்களால் கவரப்படுகிறீர்கள்?

பரிசு

இதயம் மனிதனுக்கு அளிக்கப்பட்ட பெரும் பரிசு. எத்தகைய இதயம்? கருணை நிரம்பிய இதயம், பரிசுத்த இதயம், பிரேமை மிகுந்த இதயம். அத்தகைய உயர்ந்த இதயத்தை இறைவன் அளித்திருக்கும்போது, அதைக் கெடுக்கிறீர்கள். மாசு படுத்துகிறீர்கள். அதைப்புனிதமற்றதாக மாற்றுகிறீர்கள். இது மனிதத்தன்மைக்கு ஒரு களங்கமாகும்.

இறைவனிடமிருந்து பெருங்கொடைகள் பெற்ற நாம், அவருக்கு வரி கட்ட வேண்டும்.

பழங்காலத்திலிருந்து முனிவர்கள் இதற்கு பலி என்று பெயரிட்டு அழைத்தார்கள். பலி என்றால் பிராணிகளைக் கொன்று பலியிடுதல் என்ற பொருள் மலிந்துள்ளது. அது தவறு. 'பலி' என்றால் 'வரி' என்று பொருள். இது போல, பல சொற்களுக்கு பல்வேறு விதங்களில் பொருள் கூறப்படு கிறது. இதற்கு ஒரு உதாரணம்.

சிகண்டி என்ற பெயரில் ஒருவன் இருந்தான். சிகண்டி என்றால் ஆணுமல்ல பெண்ணுமல்ல என்ற தவறான பொருள் கொள்கிறோம். நாராயணனுக்கு, கிருஷ்ணனுக்கு சிகண்டி என்ற பெயர் உண்டு. மயில் இறகுகளை அணிந்தவன் பெயர் சிகண்டி. கிருஷ்ணனுக்கு, அந்தப்பெயர் உண்டு, ஒரு சொல்லுக்கு உயர்ந்த பொருள் இருக்க, அதற்குத் திரிந்த பொருளை ஏற்று, தவறாகப் பொருள் கொள்கிறோம்.

### வரி

பலி 'யக்ஞத்தில் அளிப்பது' என்பதற்கு வரி என்பதே பொருள் அது என்ன வரி? நமது நன்றியைத் தெரிவிப்பதே 'வரி' எனப்படுகிறது. எவ்வாறு நன்றி கூறுகிறோம்? பிரார்த்தனை மூலமாக. உன் இதயத்தில் நிரம்பும் ஆனந்தம் அனைத்தும் பிரார்த்தனையில் சொற்களாக வடிவெடுக் கிறது. நீ பெறும் அனுபவத்தை உண்மையான சொற் களில் கூறு.

சத்தியமே கழுத்துக்கு அணிகலன். கைகள் இறைவனை வழிபடவே உள்ளன.

போதனா இவ்வாறு கூறுகிறார்: இரு கரங்களாலும் இறைவனைப்பற்றி வணங்குங்கள், இறைவனது புகழை தொண்டை நிரம்பப்பாடுங்கள். நான், எனது என்ற உணர்வு இல்லாமல், மற்றவர்கள் கூறுவதை இலட்சியம் செய்யா

மல், கடவுளை நினைந்து பாடுங்கள். நல்ல குரல் வளம் பெற்றவர்கள், நல்ல நாக்கு படைத்தவர், இறைவன் புகழைப் பாடுவதில்லை. இது அவர்கள் கர்ம வினையே. அவர்கள் நாக்கு, தவளையின் நாக்கைப் போன்றது. நாக்கு எதற்காகப் படைக்கப்பட்டது. இறைவன் புகழைப்பாடி இறைவனுக்கு வரி செலுத்து. இரு கரங்கள் கூடி இறைவனை பஜனை செய்யாவிடில் அவற்றால் என்ன பயன்? இருகரங்களையும் ஒன்றிணைத்து கை கூப்புதல், பத்து இந்திரியங்களையும் ஒன்று சேர்த்ததாகும்.

இத்தகைய முறையில் நாம் வரிசெலுத்த வேண்டும். வரி செலுத்தாமல் இருத்தல் அநியாயம். இவ்வாறிருந்தால், நீ கடவுளுக்கு எதிரானவன் என்று பொருள்.

''வசைகூறுதல் பாவம் செய்ததாகும்''.

பிறர் வேறல்லர் இறைவனே யாவர். நீ பிறரென்று காண்கிறாய். அவர்கள் உண்மையில் இறைவனே. யாரையும் குற்றங் கூறலாகாது. யாரையும் தூஷிக்கலாகாது. அனைவருக்கும் நன்றி கூறல் வேண்டும். இவ்வுலகில் யாரிடமிருந் தாவது, ஏதாவது ஒரு விதத்தில் உதவி பெற்றுக்கொண்டே இருக்கிறோம். இதற்குப் பிரதி செய்யும் பொறுப்புகளிலி ருந்து தப்பிக்க எல்லாவித உபாயங்களையும் கையாளுகி றோம்.

தற்காலக்கல்வி தவறான திசையில் செல்கிறது. அத னால் மனிதத்தன்மையே சுவடில்லாமல் அழிந்து விடுகிறது. Knacks (சாமர்த்தியம்), Cracks (ஊனங்கள்) இவற்றால் மனிதத்தன்மையே போய்விட்டது. இதற்கு ஒரு சிறுகதை யுண்டு (முன்பே கூறியது):

முதலை

ஒரு ஏரியில் முதலை வசித்து வந்தது. அதனருகில் ஒரு பெரிய மரம் இருந்தது. அம்மரத்தின் உச்சியில் ஒரு குரங்கு வசித்து வந்தது. அது ஒரு நாவற்பழ மரம். அது பழங்களையெல்லாம் தின்றபின் கீழே இறங்கிவிடும். கிடைத்த மீதிப்பழங்களை முதலை உண்டு சுகித்திருந்தது. நாட் செல்லச்செல்ல, முதலையும் கொழுத்தது, அதன் உடல் பருத்தது.

குரங்கும் முதலையும் சிறந்த நண்பர்கள். முதலை கூறியது. ''குரங்கு மைத்துனா, நீ அளித்த விருந்தை நான் தினமும் உண்டு மகிழ்ந்தேன். நீயும் எங்கள் வீட்டுக்கு வந்து, எங்கள் உபசரிப்பை ஏற்றுக்கொள். என்றது. குரங்குக்கு ஒரே அதிசயம். குரங்கு சிறிது நேரம் யோசித்தது. முதலைக்கு வீடு எங்கே இருக்கிறது? குரங்கு என்பது எது? மனிதனின் பூர்வீகமே குரங்கு. குரங்கு மிகுந்த புத்திக்கூர்மை உள்ளது. நாம் குரங்கைக் கேலி செய்கிறோம். ஆனால் குரங்குக்கு உள்ள புத்திக்கூர்மை நமக்கு இல்லை. ஆகவேதான் அநுமான் இராமனுக்கு தாசனாக மாறினான். அவன் எந்த காரியத்தையும் நிறைவேற்றினான்.

குரங்கு முதலை சொன்னதை ஏற்றுக் கொண்டது. ''அங்கு நான் எப்படி வருவேன்? என்னால் நீரில் வரஇயலாது. உனக்கோ கரைக்கு வர முடியாது. உன் வீட்டுக்கு நான் எப்படி வருவேன்'' என்றது குரங்கு. ''என் முதுகின் மேல் உட்கார். நான் கூட்டிச்செல்கிறேன்'' என்றது முதலை. குரங்கும் முதுகில் ஏறி உட்கார்ந்தது.

கரை நெருங்கிவரும் நேரத்தில் முதலை தன் இரகசியத்தைக் கூறியது. ''ஓ மைத்துனா, என் மனைவி உன் இதயத்தை உண்பதற்கு ஆசைப்படுகிறாள். என் மனைவியை நான் மகிழ்விக்க வேண்டும். நான் அதற்காக

உன்னைக் கூட்டிச்செல்கிறேன்'' என்றது. குரங்கு உடனே ''பித்துப்பிடித்தவனே! முன்னால் ஏன் இதைச்சொல்ல வில்லை. எனக்கும் உன் மனைவியைத் திருப்திப்படுத்த ஆசைதான்! ஆனால் நான் கிளைக்குக்கிளை தாவுகிறேன் அல்லவா? என் இதயம் கீழே விழுந்து உடைந்து விடும் என்று பயந்து, அதை மரத்தின் கிளையில் தொங்கவைத்தி ருக்கிறேன். இப்போது நாம் திரும்பச் செல்லலாம். நான் மரத்தின் மீதேறி, அந்த இதயத்தைக் கொண்டு வந்து விடுகிறேன் என்றது.

முதலைக்கு வலிமை அதிகம். ஆனால் புத்தி மிகவும் குறைவு. அது, தற்காலத்தில் படித்தவர்களைப் போன்று இருந்தது. முதலையும் திரும்பி வந்தது. குரங்கு முதலையி டம் நீ இங்கேயே இரு. நான் மேலே சென்று இதயத்தைக் கொண்டு வருகிறேன் என்று கூறி, மரத்தின் மேல் ஏறிக்கொண்டது.

பிறகு கூறியது. ''பித்துப் பிடித்த முதலையே, உடலிலி ருந்து இதயத்தை பிரிக்க முடியுமா. இத்தகைய நண்பன் இனி எனக்கு வேண்டாம். இத்தகைய அறிவாளியுடன் நட்பு எதற்கு? நண்பர்களென்றால் கஷ்டத்திலும் சுகத்திலும் எனது நன்மையைக் கோர வேண்டும்'' என்றது.

## இதயம்

ஆகவே இதயத்தின் மூலமாக, இறைவனுக்கு நன்றி கூறுதல் வேண்டும். இறைவனிடம் முழுமையாக சரணாகதி யடைய வேண்டும். இதுவே பலி.

''இறைவா, இதயத்தை எங்களுக்குக் கொடுத்தாய். இது எங்களுக்குச் சொந்தமல்ல. இது உன்னுடைய பரிசிலே.

உமக்கு நான் அதை அளிக்கிறேன், நீர் கொடுத்ததை திரும்பக் கொடுக்கிறேன்.

என்னிடம் ஒன்றுமில்லை; அனைத்தும் உம்முடையதே.

நான் ஒன்றுமில்லை; நீரே சகலமும்.

நீர் அளித்த அதே இதயத்தை நான் உமக்கு அளிக்கி றேன். தங்கள் மலர்ப்பாதங்களை நான் வழிபடுகிறேன். வேறென்ன நான் செய்யமுடியும். எனது பணிவையும், வணக்கங்களையும் தெரிவிக்கிறேன். நான் உங்கள் சொத்து. என்னிடம் வேறெதுவுமில்லை. எனக்கென்று வேறெதுவு மில்லை.

இலட்சுமணன் இராமனிடம் இவ்வாறு பிரார்த்தனை செய்தான். ''என்னிடம் ஒன்றுமே இல்லை, அனைத்தும் உன்னுடையதே''.

இதுவே நாம் கடவுளுக்கு அளிக்க வேண்டிய 'பலி' - வரி. இதை நாம் அளிக்காத வரையில் மறுபடி மறுபடி பிறக்க வேண்டும். எந்தவிதமாக நாம் இருந்தாலும் சரி, ஆஸ்திகனாக, நாஸ்திகனாக, ஆஸ்திக நாஸ்திகனாக, நாஸ் திக ஆஸ்திகனாக எவ்விதமிருந்தாலும் சரி செலுத்தியே ஆக வேண்டும். இத்தகைய வரியை நாம் அளிக்காதவரை யில், பக்தர்கள் என்று நாம் கூறிக்கொள்ள இயலாது.

## பட்டம்

ஒவ்வொருவரும் வேலை தேடும்போது, தனது பேரை யும் பட்டத்தையும் எழுதிக்கொள்கிறார்கள். உங்கள் பட்டத் தைக் கவனித்து அதற்குத்தகுந்த வேலை கொடுக்கிறார்கள். ஆனால் அட்சரங்களே என்னவென்று அறியாமல் வேலை கிடைக்காது. ராமைய்யா என்ற ஒருவன் தன் பெயரை எழுதி

அதன்பின் T.D. F.S. என்று எழுதினான். அவை என்ன என்று கேட்டதற்கு T.D. என்றால் Ten Daughters பத்து குமாரத்திகள் என்றும், F. S. என்றால் Five Sons, ஐந்து மகன்கள் என்றும் விளக்கம் தந்தான். குழந்தைகளையே பட்டம் என்று கருதும் நீ அமரத்துவத்தின் புத்திரன். அதுவே உனது உண்மையான பட்டம். நான் கடவுளின் தாசன், நான் கடவுளின் அம்சம்: நான் கடவுளின் சேஷம் (எஞ்சிய பகுதி) நான் கடவுளின் பிரதி பிம்பம் என்றறிய வேண்டும்.

மமைவாம்ஸோ ஜீவலோகே ஜீவ பூத: ஸநாதன: நீ என்னுடைய அம்சமே என்று கூறுகிறார் பகவான்.

''நூறாண்டுகள் அழுதாலும் திரும்ப இயுலாது. இளமைப் பருவத்திலோ, நடுத்தரவயதிலோ, முதிய பருவத்திலோ, மிக முதிர்ந்த நிலையிலா காட்டிலோ, நீரிலோ எங்கு மரணம் நிகழும் என்று கூற இயலாது. சாவது நிச்சயம். எப்போது! எங்கு, எவ்வாறு என்று கூற இயலாது. இது நிரந்தரமல்ல. ஆகவே இப்போதே என்னை அர்ப்பணிக்கிறேன்.

BODY IS LIKE WATER BUBBLE MIND IS LIKE A MAD MONKEY. FOLLOW THE CONSCIENCE.

### நீர்க்குமிழி

உடல் நீர்க்குமிழி போன்றது. மனம் குரங்கு போன்றது. ஆகவே Conscience (மனசாட்சி, ஜீவ சாட்சியை) பின்பற்று. இதுவே ஆத்ம தத்துவம். இதுவே ஹிருதயம். நமது இதயத்தை அர்ப்பணிக்கின்ற உண்மையான சாதகர்களாக நாம் இருக்க வேண்டும். உன்னுடன் இருக்கும் எதுவும் உனக்குச் சொந்தமல்ல. அனைத்தும் கடவுளுக்கே சொந்தம்.

நம்மிடம் என்ன உள்ளன என்று நமக்கே தெரியாது. மதிப்பு மிகுந்த நமது பொருள்கள் அனைத்தும் கடவுளுக்கே சொந்தம்.

நாம் வெறும் அழியக்கூடிய இலை, மலர், கனி, நீர் இவற்றை இறைவனுக்கு அர்ப்பணிக்கின்றோம். மாறாக, உடலே இலையாகும். இதயமே மலர், மனமே கனி, ஆனந்தமே நீர். துக்கக் கண்ணீரல்ல ஆனந்தக்கண்ணீரே அளிக்கப்பட வேண்டியது.

இறைவனுக்கு அர்ப்பணம் செய்ய வேண்டியன எவ்வ ளவோ? அவை போன்ற நிரந்தர உண்மையை அறிவதற்கு நாம் எந்த முயற்சியும் செய்வதில்லை. நாம் கண்ணால் காணக்கூடியவற்றை இறைவனுக்கு அர்ப்பணிக்கிறோம். இவ்வுலகில் இருக்கின்ற அனைத்தும் தற்காலிகமானவை.

சத்யம் என்பது ஒன்றே! வாழ்க்கையும் தெய்வத்துவ மும் சேர்ந்ததே மனிதன். ஆகவே நாம் கல்வியை நல்ல விதமாகப் பயன்படுத்த வேண்டும். சீட்டாடுவதிலோ, மதுவருந்துவதிலோ, உண்பதிலோ அமைதி கிட்டுவ தில்லை. அவ்வாறு அமைதி கிட்டினால் 24 மணி நேரமும் உண்டு கொண்டே இருக்கலாமே. இவை தவறான வழியில் உம்மை செலுத்தி, அசுரர்களாக மாற்றிவிடும்.

நாம் உண்பதற்காகப் பிறக்கவில்லை. உயிர் வாழவே உண்கிறோம். நாம் அடைந்த ஞானத்தின் அடிப்படையில் சமுதாயத்தில் உள்ள மற்ற மக்களுக்கு இலட்சிய முன்னுதார ணத்தை முன் நிறுத்த வேண்டும். யாருடன் தொடர்பு கொள்கிறோமோ, அவர்களிடம் எல்லாம் இலட்சியத்தைப் பற்றிக்கூற வேண்டும். நாமறிந்த நிரந்தர உண்மைகளை எல்லோருடனும் பகிர்ந்து கொள்ள வேண்டும்.

மாணவர்களே! நீங்கள் இங்கு என்ன கற்றுக்கொள்கிறீர்களோ அவற்றை சமுதாயத்தில் மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ளுங்கள். அவர்களுக்கு நேர்வழியைக் காண்பியுங்கள். கல்வி என்பது வெறும் ஜீவனத்துக்காக மட்டுமல்ல. அறிவை வளர்ப்பதே கல்வி. விவேகம் என்ற பிரித்துணரும் திறமையை வளர்ப்பதே கல்வி. நாடு முழுவதும் அமைதியற்ற நிலை இருப்பதைக் காண்கிறோம். இது எங்கிருந்து வந்தது? இதற்கான தீர்வு என்ன? வியாதிக்குத்தகுந்த மருந்தைக் கொடுக்க வேண்டும். வயிற்று வலிக்கு கண்மை தடவுவதில்லை. வலி ஓரிடத்தில் இருந்தால், மருந்தை வேறோர் இடத்தில் தடவுகிறோம். வியாதிக்கு ஒரு காரணம் மருந்து அளிப்பதற்குக் காரணமோ வேறு.

ஒரு மனிதனுக்கு ஒரே குமாரன் இருந்தான். அவன் பந்து விளையாடச்சென்றபோது, மூலையில் இருந்த தேள் அவனைக்கொட்டியது. தேள் கொட்டிவிட்டது என்று மகன் அழுது கொண்டு வந்தான். தந்தைக்கு மகனிடம் மிகுந்த அன்பு. உடனே வைத்தியரிடம் சென்றான். மருத்துவர், ஒரு களிம்பு கொடுத்து, தேள் கொட்டிய இடத்தில் இந்த மருந்தைத் தடவுங்கள் என்று கூறினார். தந்தை வேகமாக மகனிடம் சென்று, தேள் எந்த இடத்தில் கொட்டியது என்று கேட்டான். அப்பா தேள் அந்த மூலையில் கொட்டியது என்றான். களிம்பை, அறையின் மூலையில் தடவினான். மகனுக்கு வலியில் இருந்து நிவாரணம் கிடைக்கவில்லை.

அசாந்தி எங்கிருந்து வந்தது? அதற்குக் காரணம் என்ன என்று அறிந்து அதற்குத்தீர்வு காண முயல வேண்டும். நாம் இதன் உண்மையை அறிவதில்லை. வலி ஓரிடம், மருந்து தடவுவதோ வேறோரிடம்.

கடவுள் எங்கிருக்கிறார் என்று நாம் கிராமம், கிராம மாக, மலையுச்சிகளில், இமாலய மலையில் தேடுகிறோம். கடவுள் எங்கும் இருக்கிறார். நீயே கடவுள். கடவுள் உன் இதயத்தில் நிலைபெற்று இருக்கிறார். கடவுள் உனக்குள் ளும், வெளியிலும், பக்கத்திலும், கூடவும், மேலும், கீழும், சுற்றிலும் இருக்கிறார். கடவுள் எங்கேயென்று வேறெங்கு தேடுவாய். பார்வையை உள்நோக்கித் திருப்பித்தேடு.

கடவுள் இங்கிருக்கிறார் அங்கில்லை என்று கூறுபவன் சாதகனல்ல. கடவுள் எங்கும் இருக்கிறார். அவர் இரண் டல்ல ஒருவரே. உமது கடவுள், எமது கடவுள் என்று யாருமில்லை. அது வெறும் அறியாமை. இராமன் வேறு, கிருஷ்ணன் வேறு அல்ல. உருவங்களும் பெயர்களும் வேறு வேறானாலும் கடவுள் ஒருவரே என்பதில் பூரண நம்பிக்கை கொள்ள வேண்டும். சத்யம், பிரேமை இவற்றின் தத்துவங் களை வெளிப்பரப்ப சாயி அவதாரம் எடுத்துள்ளார். அவர் ஏன் இறங்கி வந்தார் என்று கேட்கலாம். யாராவது ஒருவர் எடுத்துச் சொல்ல வேண்டாமா?

விளக்கின் கொள்கலன், எண்ணெய், திரி உள்ளன. யாராவது விளக்கேற்ற வேண்டாமா? ஊசி, நூல், மலர்கள் மூன்றும் உள்ளன. மாலை உருவாகிவிடுமா. யாராவது ஒருவர் அதை மாலையாகத் தொடுக்க வேண்டும். வைரம், தங்கம் இவைகள் உள்ளன. இவற்றைக்கொண்டு நகை தயாரிக்க ஆசாரி வேண்டும். டிரெய்னில் வேகமாகச் செல்வதற்கு ஒரு டிரைவர் வேண்டும். தானியங்கி ஒளிக்கரு விக்கு ஒரு கட்டுப்பாடு வேண்டும். இந்த உலகிற்கு ஒரு படைத்தவர் வேண்டும்.

சாயி, கடவுள் எங்கும் இருக்கிறார் என்பதை எடுத்துக் கூற அவதாரம் எடுத்திருக்கிறார். வெளிச்சொல்ல மட்டு

மல்ல, தெய்வீக அன்பை எல்லோருடனும் பகிர்ந்து கொள்ளவும் அவதாரம் எடுத்துள்ளார். இதயம் எந்த அளவுக்கு விரிந்துள்ளதோ அந்த அளவுக்குச் சாயி கூறுவதை ஏற்றுக்கொள்ள இயலும். ஆகவே இதயத்தை முடிந்த அளவு விசாலமாக்கிக் கொள்ளுங்கள்.

*—பாபா*

(பவபய ஹரணா வந்தித சரணா... என்ற பஜனைப் பாடலுடன் அருளுரையை நிறைவு செய்தார்).

*(1.7.96)*

# 5. உண்மை வெல்லும்

அன்பின் வடிவங்களே!

**உலகியல் உண்மை**

மனித வாழ்க்கை, உலகியல் செயல்களாலும், உலகியல் மனோபாவங்களாலும் ஆக்கப்பட்டது என்று கருதுகின்றோம். இவையெல்லாம் உலகியலே தவிர ஆன்மீகமல்ல. நீ காண்பது, கேட்பது, வெளிக்கூறுவது, செயற்படுவது அனைத்தும் உலகியல் உண்மை. ஆன்மீக உண்மை என்பதொன்றுண்டு. அது இடம், காலம் இவற்றைக் கடந்தது. அது ஒரு பிராந்தியத்தையோ, ஒரு நாட்டையோ, ஒரு கால கட்டத்தையோ, ஒரு தனி மனிதனையோ சார்ந்ததல்ல. அது முக்குணங்களையும் கடந்த சத்தியம். சத்தியமே பிரத்யட்ச தெய்வம். சத்தியமே இறைவன். அனைத்தும் சத்தியத்திலிருந்துதான் வெளி வருகின்றன. முடிவில் சத்தியத்தில்தான் ஒடுங்குகின்றன. இந்த சத்தியத்தைப் பறைசாற்றாதது, இந்தப் பிரபஞ்சத்தில் எதுவுமே இல்லை.

பஞ்ச பூதங்களும் சத்யத்திலிருந்தே வெளிவந்தன. இந்த ஆன்மீக உண்மையை நாம் அறிந்து கொள்ளவில்லை. இவ்வுலகில் நடைபெறுகின்ற, காணுகின்ற நிலையில்லாத நிகழ்வுகளைக் கொண்டு சத்தியத்தை தீர்மானிக்கிறோம். இவ்வுலகியல் உண்மை கண்ணால் காணக்கூடியது. காதால் கேட்கக்கூடியது. மனதால் நினைக்கக்கூடியது. உணர்ச்சியால் தெரியப்படுவது, மறக்கப்படுவது. இதுவே உலகியல் சம்பந்தமான உண்மை. இவ்வுலகியல் உண்மை, மனதால் உணரப்படும்போது மட்டுமே உருவங்கொள்வது. அதன் உருவங்கள் பிறகு மாறுபடுகின்றன. ஆனால் ஆன்மீக உண்மை (சத்யம்) முக்காலமும் மாறாதது. அது முக்காலத்திலும் பிளவுபடாதது. இது படைப்புக்கே மூலாதாரம்.

சத்யம் என்றால் என்ன? ஸத் - பிராணன், இ - அன்னம் யம் - சூரியன். ஜீவனுக்கு பிராணன் (உயிர்) தலையாயது. உயிருக்கு அன்னமே (உணவே) ஆதாரம். உணவுக்கு சூரியனே ஆதாரம். ஆகவே ஸத்+இ+அம் = ஆகவே சத்யம் என்பது பிராணன் + அன்னம் + சூரியன்.

அனைத்தும் பிரம்மமே. பிராணன் ப்ரம்மா, அன்னம் ப்ரம்மா, சூரியன் ப்ரம்மா.

## நியமங்கள்

வேறுவிதமாக ஆராய்ச்சி செய்தால் ஸ + த + ய =ஸத்யம். எதிர்மறையாக எழுதினால் 'ய'காரம். 'த'காரம், 'ஸ'காரம் என்றாகும். ய = யம, நியமங்கள், (வெளிப்புற ஒழுக்கங்கள், உள்ளக ஒழுக்கங்கள்) - (அஷ்டாங்கயோகத் தில் விவரிக்கப்பட்வை) த - தபஸ், தவம், ஸ - ஸத்யம்; வெளிப்புற, உள்ளக ஒழுக்கங்களைக் கடைப்பிடித்து, தவம் செய்தால் - ஸத்யத்தைப் பெறலாம். வெளிப்புலன்கள், உட்புலன்களை வெற்றிகொள்தல் யமநியமங்கள். தபஸ் என்பது திரிகரண சுத்தி. தபஸ் என்பது உடலைத் தலைகீழாக வளைத்தல் அல்ல. திரிகரண சுத்தி என்பது, இதயத்தில் தோன்றியதை வாக்கினால் கூறி, வாக்கினால் கூறுவதையே கைகளால் செய்வது. இதுவே தபஸ். யம நியமங்களில் வெற்றிகண்டு தபஸ் செய்தபின், சத்தியத்தை அடைகிறோம்.

சத்யம், ஞானம், அனந்தம், ப்ரம்மா என்று கூறப்படுகி றது. சத்யமே ஞானம், ஞானமே அனந்தம், அனந்தமே ப்ரம்மா, ப்ரம்மா என்பது அளவற்ற வடிவு கொண்டது. ஆகவே சத்யம் என்பது பகவத் ஸ்வரூபம் - இறைவனின் வடிவம். மனிதன் உலகியல் நிகழ்வுகளை உண்மையெனக் கொண்டு, ஆன்மீக உண்மைகளை மறந்து, இருளில் மூழ்கித்தவிக்கிறான்.

## தர்மங்கள்

உலகியல் உண்மைகள் மாறிக்கொண்டே இருக்கும். பிரம்மசரியம், கிரகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் இவை ஆசிரம தர்மங்கள் (உலகியல் வாழ்க்கை நிலைகள்). இந்நான்கும் வாழ்க்கை முறையில் ஏற்படுகின்ற மாறுதல்கள். இவற்றினூடே மாறாத ஒன்று துலங்குவதை ஆன்மீக உண்மை தெரிவிக்கிறது. இந்நான்கு நிலைகள் உலகியலில் நிகழ்பவை - இவற்றை 'நிஜம்' (உலகியல் உண்மை) என்று கூறுகிறோம். உள்ளே இவற்றால் மாறாதநிலை ஒன்று உள்ளது அதை 'சத்யம்' (ஆன்மீக உண்மை)என்ற சொல்லால் குறிக்கிறோம். மாறாத இந்த சத்யமே ஆதாரம், அனைத்திற்கும் அடிப்படை.

''சத்யம் நாஸ்தி பரோதர்ம''. உலகியல் செயல்கள், தர்மங்கள் அனைத்தும் சத்யத்தின் அடிப்படையில் நிகழ்வன. சுவற்றின் மேல் எந்த நிறத்தையும் நீ வண்ணந்தீட்டலாம். அவற்றை அலங்கரிக்கலாம். அதற்கு எந்தப்பெயரும் இட்டு அழைக்கலாம். ஆனால் அடிப்படையான சுவற்றை மாற்ற இயலாது. அதுவே சத்யம்.

சத்யத்தை ஆதாரமாகக் கொண்டது தர்மம். 'தாரயிதி இதி தர்ம': தர்மத்தை அணிந்திருப்பதே தர்மம். சத்யத்தைப் பின்பற்றுவதே தர்மம். தர்மத்தை அணிந்திருப்பதே சத்யம். சத்யமே அனைத்திற்கும் மூலாதாரம்.

## விரதம்

இக்காலத்தில் நாம் சத்யத்தின் இயல்பை மறந்துவிட்டோம். பழங்காலந்தொட்டு முனிவர் கூறுவது 'சத்யம் வத; தர்மம் சர' - சத்யத்தைப்பேசு, தர்மத்தைச் செய். இக்காலத்தில் நூற்றில் ஒருவர்கூட, கோடியில் ஒருவர் கூட

சத்யத்தைப் பேசுவதில்லை. ஆண்டுக்கொரு முறை நாம் சத்யநாராயண விரதம் என்ற சடங்கை ஏற்றுச் செய்கிறோமே. ஒரே ஒரு முறைமட்டும் உண்மை பேசகிறோம். வாழ்க்கை முழுவதும் பொய் கூறுவதிலேயே கழிகிறது. இது மனித குணமல்ல. உண்மை பேசுதலே நிஜமான மனிதத்தன்மை. (மனித வாழ்க்கை). மனிதத்தன்மை என்பதென்ன? அறி யாமை இல்லாது வாழ்க்கை நடத்துதலே மனிதத்தன்மை. அறியாமையில் வாழ விரும்பாத மனிதன் சத்யத்தை ஆதாரமாகக் கொள்ள வேண்டும். ஆகவேதான் அவன் மானவன் எனப்படுகிறான். மா. ந-வ. மா என்றால் அஞ்ஞானம், அறியாமை; ந - என்றால் இல்லை, வ - என்றால் வர்த்தித்தல், பெருக்குதல், நடத்தல், அறியாமை இல்லாது வாழ்க்கை நடத்துபவன் மானவன் (மனிதன்)

மனிதன் இன்றோ அல்லது நேற்றோ இருந்தவன் அல்லன். மா = இல்லை. நவ = புதிது. நீ இன்றைய மனிதன் மட்டும் அல்ல. புராதனமானவன், சநாதனன், என்றுமுள்ளவன், அனைத்துப் பொருளும் இச்சொல்லில் அடங்கியிருக்கிறது. ஆகவே இவ்வாழ்க்கையை சத்தியத் துக்கு அர்ப்பணித்தல் வேண்டும். சத் என்றால் இருப்பு. சத் - சித் ஆனந்தம்; சத் - Being. நிரந்தர இருப்பு: சித் - Awareness - விழிப்புணர்வு. சத், சித் இரண்டும் ஒருங்கிணைந்து ஆனந்தம் கிடைக்கிறது. ஆனந்தத்துடன் இருக்கும் பேறு நமக்கு இல்லாததால், உலகம் முழவதிலும் ஆனந்தத்தைத் தேடுகிறோம்.

## ஆனந்தத்தின் வடிவம்

நீ ஆனந்தத்தின் வடிவம். ஆனால் உனது உண்மையான வடிவை நீயே புரிந்து கொள்ளவில்லை. தன்னைத்தானே தேடுகின்றவன் எத்தகைய அறிவிலியாக இருக்க வேண்டும்.

ஆனந்தத்தை உலகம் முழுவதும் தேடிக்கொண்டிருக்கி றோம். ஆனந்தம் வேண்டும் என்பதற்காக பொருட்களைத் தேடுகிறோம். ஆனந்தம் (மகிழ்ச்சி) பெறுவதற்காக பல மனிதர்களைச் சந்திக்கிறோம். மகிழ்ச்சியுடன் இருப்பதற்காக பல்வேறு செயல்களில் ஈடுபடுகிறோம். இவற்றால் நமக்கு மகிழ்ச்சி ஏற்படுவதில்லை. பொருட்களால் நமக்கு மகிழ்ச்சி இல்லை. மகிழ்ச்சி (ஆனந்தம்) உனக்குள்ளேயே இருக்கி றது. நீயே ஆனந்தத்தின் வடிவம். அவன் (அறிந்தவன்) தனது ஆனந்தத்திலேயே திளைக்கிறான்.

"நீர்க்குமிழி, நீரில் பிறக்கிறது, நீரில் வளர்கிறது. நீரில் லயமாகிறது. மனிதனே நீர்க்குமிழி. இறைவனே நீர். பாரத மக்களே, இதைக்கேளுங்கள்".

நாம் ஆனந்தத்தில் பிறக்கிறோம், ஆனந்தத்தில் வளர்கி றோம், ஆனந்தத்தில் லயமாகிறோம். பின், ஏன் நீ தேடுகிறாய்? எங்கே தேடுகிறாய்? தான் ஆனந்தத்தில் பிறக்கிறான், ஆனந்தத்தில் வளர்கிறான், ஆனந்தத்தில் ஐக்கியமாகிறான் என்பதை மனிதன் அறியாதவனாக, அறிவிலியாக இருக்கிறான். இதுவே மாயை (பிரமை)

வாழ்க்கை முழுவதுமே மாயை. பாசபந்தம், மாயை, குடும்பமும் மாயை, மரணமும் மாயை, மாயை நிரம்பிய இவ்வுலகத்தால் நீ மயக்கமுறுவதேன்?

மாயை நிரந்தரமானதல்ல. மாயை என்றால் இல்லை யென்று பொருள். இல்லாததை இருப்பதாகக் காட்டுவது மாயை. எங்கே உள்ளது மாயை? இருப்பதை இருக்கிறது என்று கூறலாம்.

நீ ஒரு கயிற்றைக் காண்கிறாய். அதைப் பாம்பென்று கூறுகிறாய். இந்த பிரமையினால் அதைக் கண்டு ஓடுகிறாய். Torch (ஒளிவிளக்கை) அதன்மேல் பாய்ச்சினால், அது கயிறு

என்று தெளிகிறாய். கயிறு என்று அறிந்து பயம் தெளிந்ததும் அதைத் தாண்டிச் செல்கிறாய். பாம்பு என்று நீ நினைத்தபோதும் அது கயிறுதான்; கயிறு என்று தெளிந்தபோதும் அது கயிறுதான். கயிறு என்றும் எப்போதும் மறைந்து திரும்பவில்லை.

## அறியாமை

அப்போதும் இப்போதும் நீ ஆனந்த வடிவினனே. அறியாமையினால் ஆனந்தம் இல்லாது விலகியிருப்பதாக நீ நினைக்கிறாய். விழிப்புணர்வு வந்ததும், நீ ஆனந்தமயமாக இருப்பதாக உணர்கிறாய்.

ஆனந்தமே தெய்வத்துவம். அது வருவதுமில்லை. போவதுமில்லை. உண்மையை உணர்ந்தபிறகே, மற்ற எல்லாவற்றையும் நீ அறிவாய். எந்த உண்மை? அது திரிகரணசுத்தி. எண்ணம், சொல், செயல் மூன்றும் ஒன்றுபடுதல். இதயத்திலிருந்து வெளிவருவதையே வாக்கில் கூற வேண்டும். வாக்கில் கூறுவதையே செயற்படுத்த வேண்டும். இம்மூன்றும் ஒன்றிணைதலே சத்யம்.

இவை மூன்றும் நெருங்கிய தொடர்புடையவை. ஆத்மாவிலிருந்து வெளிவருவது எது? அஹம், அஹம் ஆத்மாவிடமிருந்து வெளிவந்தது. ஆகவே அஹம் ஆத்மாவின் குமாரன். மனது அஹத்திலிருந்து பிறந்தது. ஆகவே மனது, ஆத்மாவின் பேரன், வாக்கு மனத்திலிருந்து பிறந்தது. ஆகவே வாக்கு ஆத்மாவின் கொள்ளுப்பேரன். ஆகவே ஆத்மா, அஹம், மனம், வாக்கு இவை எல்லாம் ஒரே குடும்பம்.

**வாக்கு**

அதேபோல இதயத்திலிருந்து வெளிவந்தது வாக்கு. வாக்கிலிருந்து வெளிவந்தது கிரியை (செயல்). இம்மூன்றின் இசைவுதான் சத்யமாகிறது. சத்யம் என்பது நீ கண்ணால் காண்பது, காதால் கேட்பது மட்டுமல்ல. நீ சத்தியத்தின் வடிவம். நீ இதை மறக்கும்படி செய்வது எது? உலகப்பொருட்களை நீங்கள் ஆராய்ச்சி செய்யத்தொடங்கினால், மாணவர்களே, நீங்கள் மிகுந்த அனுபவத்தைப் பெறுவீர்கள்.

ஒரு மனைவியைக் கொண்டுள்ள மனிதனுக்கே பல பிரச்சினைகளும், இடைஞ்சல்களும் இருக்கின்றன. குடும்ப வாழ்க்கையென்றால் மகிழ்ச்சி நிரம்பியது என்பதல்ல. சம்ஸாரம் என்பது Some ஸாரம் - சிறிது மகிழ்ச்சி, கொஞ்சம் ஆனந்தம். ஒரு மனைவி இருக்கும்போது வீட்டில் கொந்தளிப்பு ஏற்படுகிறது. இரு மனைவியர் இருந்தால்... கணக்கிடவே முடியாது. இரு மனைவிகள் கொண்ட ஒருவனுக்கு எல்லாத் துன்பங்களும் ஏற்படும். துருவனுக்கு ஏற்பட்ட துன்பங்கள் எல்லாம், அவன் தந்தைக்கு இரு மனைவியர் சுநீதி, சுருசி இரு பக்கங்களிலும் இருந்ததுதான். துருவனின் தந்தை, இரண்டாவது மனைவியின் மகனை, தன் மடியில் வைத்துக்கொள்ள ஆசைப்பட்டான். முதலாவது மனைவியின் மகனை அவ்வாறு விரும்பவில்லை. துருவனுக்கு இதனால் மனத்துயரம் தாங்கவில்லை. ஆகவே அவன் காட்டுக்குச் சென்றான்.

தசரதனுக்கு மூன்று மனைவியர், அவர்களில் மிக இளையவளிடமே அவன் மனதைப் பறிகொடுத்தான். இதனால் மூத்த மனைவியின் மகனான ஸ்ரீமந் நாராயணனையே காட்டுக்குத் துரத்திவிட்டான்.

## புலன்கள்

பத்து மனைவியர் கொண்ட மனிதனின் கதி என்னாவது? மனதுக்கு பத்துமனைவியர், அவை தசஇந்திரியங்கள் (பத்து புலன்கள்) இப்பத்து புலன்களுக்கும் மனதே கணவன். மனமே இப்புலன்களுக்கு அதிபதி. புலன்கள் மனதைத் துன்பங்களுக்கு ஆளாக்குகின்றன. கண் என்ற மனைவி, மனதை தொலைக்காட்சி காண வேண்டும். சினிமா பார்க்க வேண்டும். நாடகம் பார்க்க வேண்டும் என்று வற்புறுத்துவாள். நாக்கு என்ற மனைவி, மசால் தோசை போன்ற சுவையானவை வேண்டும் என்று விரட்டுவாள். மூக்கு என்ற மனைவி நறுமணமுள்ள மலர்கள் வேண்டும் என்று வருத்துவாள். காது என்ற மனைவி கேட்பதற்கு இனிமையாக எவ்வளவோ வேண்டும் என்று வதைப்பாள். பத்து இந்திரியங்களை எவ்வாறுதான் திருப்தி செய்விப்பது? ஒரு புலனைத் திருப்தி செய்விப்பதே பெருங்கடினம். அனைத்தையும் திருப்தி செய்விப்பது எவ்வாறு? மனம், இந்த பத்து மனைவிகளின் தொந்தரவால் கோரமான துன்பத்துக்கு ஆளாகிறது. அப்போது மனது 'கடவுளே, இந்த பத்து மனைவிகளும் எனக்கு வேண்டாம் எனக்கதறுகிறது. எனக்கு இந்தக் குடும்ப பாரமே வேண்டாம் என்று தீர்மானிக்கிறது. பிறகு அது புலன்களைக் கட்டுப்படுத்தத் தொடங்குகிறது. மனம் எவ்வாறு நினைக்கிறது.

## கவலை

''பிறப்பு என்பது ஒரு கவலை. பூமியில் வாழ்க்கை என்பது ஒரு கவலை. குடும்பம் என்பது ஒரு கவலை. சாவு என்பது ஒரு கவலை. வாழ்க்கையனைத்தும் கவலை. பாசம் ஒரு கவலை. மகிழ்ச்சியும் ஒரு கவலை. இனி

இந்தக்கவலையை என்னால் தாங்கிக்கொள்ள முடியாது. சர்வேஸ்வரா, இந்தக்கவலைகளிலிருந்து எனக்கு விடுதலை யளியுங்கள்''.

இவ்வாறு மனது எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்தனை செய்கிறது. அதுவரையிலும் அது இறைவ னைப்பற்றி நினைத்ததே இல்லை. ''சங்கடம் வருகையில் வெங்கடரமணா'' என்பது போல துன்பம் வருபோதுதான் நாம் கடவுளை நினைக்கிறோம். எப்போது இந்தக் கவலை கள் சூழ்கின்றன? சத்யத்தை மறக்கும்போது இக்கவலைகள் சூழ்கின்றன. சத்தியத்தை மறந்ததே இவற்றிற்கெல்லாம் மூல காரணம். சத்தியத்தைப் பின்பற்றி, தருமத்தின் வழியில் நடந்தால், ஒவ்வொரு துறையிலும் வெற்றி பெறுவது நிச்சயம். சத்ய சீலன் வெற்றி பெறுவான். உடல் வலிமை, செல்வத்தின் ஆற்றல், புத்தியின் வல்லமை போன்ற இவையெல்லாம் சத்தியத்தின் முன் நிற்காது. சத்தியமே முடிவில் வெல்லும். சத்தியத்தை வெல்லக்கூடியது எது வுமே இல்லை. சத்தியத்துக்கு அப்பாற்பட்டது வேறெது வுமே இல்லை.

## உண்மையே வெல்லும்

ஏகம் ஸத், விப்ரா பஹுதா வதந்தி. ஸத்யம் ஒன்றே; சான்றோர் அதைப் பலவிதங்களில் கூறுகிறார்கள். ஸத் யத்தை முறையாகக் கடைபிடித்தால் பின் ஸத்யமேவ ஜயதே உண்மையே வெல்லும் என்பது நிரூபணமாகும். பிரச்சனைகள் எவ்வளவு கடினமாக இருந்தாலும், ஸத்யம் அவற்றை எளிதாக தீர்க்கும். சத்யத்தைக்கொண்டு நீ எதையும் சாதிக்கலாம். பூமியை ஆகாயமாக மாற்றலாம். ஆகாயத்தை பூமியாக மாற்றலாம். ஆகவே சத்யத்தை கடைபிடிக்க வேண்டும். சத்யமே கடவுள்.

சத்யத்தை மறந்தால், வாழ்க்கையே இராது. இக்காலத்தில் சத்யத்தை மறந்ததால் அநேக துன்பங்களுக்கும், அநேக இடைஞ்சல்களுக்கும் மக்கள் ஆளாகிறார்கள்.

உயர்ந்த பதவியில் இருப்பதால் வெற்றி ஏற்படாது. பதவியிருக்கும்போது அங்கு சத்யம் இருப்பதில்லை. இக்காலக்கல்வியில் சத்யம் இருப்பதில்லை. ஏன்? இது அனைத்தும் உலகியல்கல்வி. இது உலகியல் செயல்களைப் பற்றிக்கூறுகிறது. இது வெளி நோக்குகின்ற, வெளியுலகைப் பற்றிய வழி. இது ப்ரவ்ருத்தி மார்க்கம். சத்யம் நிவ்ருத்தி மார்க்கம் அகநோக்கில் காண்பது. சத்யம் நிவ்ருத்தி, சத்யம், உள்ளே இருப்பது. நித்யமான (என்றுமுள்ள) சத்யத்தைக் கடைப்பிடிக்கும்போது, நீங்கள் நிச்சயமாக வெற்றி பெறுவீர்கள்.

மாணவர்களே! எந்தவிதமான சூழ்நிலைகளும் இடைஞ்சல்களும் எதிர்கொள்ள நேரிட்டாலும், சத்தியத்தை கடைப்பிடிப்பதில் உறுதியாக இருங்கள். வாக்குறுதியளிக்க நேரிட்டால், என்ன நேர்ந்தாலும் அந்த வாக்குறுதியை நிறைவேற்ற வேண்டும். வாமனர் வந்து தானங்கேட்டார். அரசர் பலி வழங்குவதாக வாக்களித்தார். அவரது குரு சுக்ராசாரியர் 'கொடுக்காதே' என்றார். பலிச்சக்கரவர்த்தி அப்போது கூறினார். "குரு தேவா, நீர் எனது குரு. இருந்தாலும் நான் கொடுத்த வாக்குறுதியை மீற மாட்டேன். கொடுத்த வாக்கை மீறுவதை விட பாவம் வேறுண்டா?

என்ன நேரிட்டாலும் எனது வாக்குறுதியைக் காப்பாற்றியே தீருவேன்." ஆகவே சத்யத்துடன் கூடிய பவித்ரமான வாழ்க்கையை நாம் வாழ முயல வேண்டும். இந்தக்கூட்டத்தில் 10 பேர் அவ்வாறிருந்தால் இவ்வுலகத்தையே காப்பாற்ற முடியும்.

## அனுபவம்

நம்மில் எத்தனை பேர் சத்தியத்தை கடைபிடிக்கிறோம். எத்தனைபேர் தருமத்தின் வழியில் நடக்கிறோம். இல்லை. நூற்றுக்கணக்கான அறிவுரைகளைக் கேட்கிறோம். ஆயிரக்க ணக்கான நூல்கள் படிக்கிறோம். கணக்கற்ற சான்றோரைத் தரிசிக்கிறோம். எதைக்கடைப்பிடிக்கிறோம்? எதை அனுச ரிக்கிறோம்? உம்முடைய அனுபவம் என்ன? ஒன்றும் பயனில்லை.

பண்டிதர் என்று கூறிக் கொள்கிறீர்கள். பண்டிதர் என்றால் என்ன? நூல்களைப் படித்தவரைப் பண்டிதர் என்பதா? சாத்திரங்களைப் படித்தவரைப் பண்டிதர் என் பதா? கீதை, ''பண்டிதா, ஸமதர்ஸன:'' என்று கூறுகிறது. சமநோக்கு உடையவனே பண்டிதன். லாப நஷ்டம், இன்ப துன்பம், இகழ்ச்சி, புகழ்ச்சி இவற்றை ஒன்றாகக் காண்ப வனே பண்டிதன். வெப்பதட்பத்தை ஒரே விதமாக அனுபவிப்பவனே பண்டிதன். இத்தகைய வேறுபாடுகள் இயற்கையின் இயல்பு, இயற்கையின் இலக்கணம். கடுமை யான குளிர் எப்போதும் இராது. எதுவும் எப்போதும் இராது. அதிலுள்ள நிகழ்வுகள் நம் கைவசம் இல்லை.

## பிரபஞ்சம்

பிரபஞ்சத்துக்கு துவைதம் என்ற பெயருண்டு. அத்த கைய இரட்டைத்தன்மை இருப்பதால்தான் நம்மால் வாழ முடிகிறது. இரட்டைத்தன்மை இருப்பதால்தான் நமக்கு அமைதியும் சுகமும் கிட்டுகின்றன. இடைவிடாது இனிப் பையே சுவைக்க வேண்டும் என்று யாரும் விரும்புவ தில்லை. 10 நாட்கள் தொடர்ந்து இனிப்பைப் சுவைத்தால், 11-வது நாள் ஊறுகாய் தேவைப்படுகிறது. இடைவிடாது ஊறுகாய் தின்றால், இனிப்பு தேவைப்படுகிறது. இரட்டைத்

தன்மை வாய்ந்த இவ்வுலகில் இலாபம், நஷ்டம் இரண்டையும் காண்கிறோம் ஏன்? இவற்றின் ஊடே உள்ள ஏகத்துவத்தை (ஒருமைத்தன்மையை, அத்வைதத்தை) காண முயல வேண்டும். இரட்டைத்தன்மை இருப்பதால், அவற்றால் நாம் கவர்ச்சியுறல் ஆகாது. இரட்டை மனம் உடையவன் அரைக்குருடன். A man with duel mind is half blind. இது சுவர்க்கடிகாரத்திலுள்ள பெண்டுலம் போன்றது. பெண்டுலம் அசையும்போது, செகண்டுமுள், நிமிடமுள், மணிமுள் எல்லாம் அசைகின்றன. பெண்டுலம் போன்று மனம் அசையும்போது, ஜீவாத்மா, பரமாத்மா என்று ஊசலாடுகிறது. அவை இரண்டும் மனதில் ஒன்றிணைவது எப்போது? பெண்டுலம் நிற்பது போல மனம் அசையாதிருந்தால் அப்போது அவை ஒன்றிணைகின்றன. ஆகவே பெண்டுலம் போன்ற நம் மனதின் மேல் நமக்கு ஆதிக்கம் இருக்க வேண்டும். உனக்கு காலக்கணக்கு தேவைப்படும்போது, பெண்டுலம் அசைய வேண்டும். ஏகாத்ம பாவனை கைவரப்பெற்றபின் காலத்தைப்பற்றிய கவலை இல்லை.

**காலம்**

Time is God காலமே இறைவன்.

காலகாலாய நம:
காலதர்ப்ப தமனாய நம:
காலாதீதாய நம:
காலஸ்வரூபாய நம:

அனைத்தும் காலமே.

காலத்தை யமன் (காலன்) பின்தொடர்கிறான். மனிதன் காலனைப் பின்தொடர்கிறான். காலத்துக்கு அடிமையாகலாகாது. காலத்தை ஆதிக்கங்கொள்ள வேண்டும்.

இறைவன் மனிதன் இதயத்தில் இருக்கிறான். மனிதன் அந்த அளவுக்கு உயர்ந்தவன். மனிதன் இறைவனைத் தன்வசப்படுத்திக்கொண்டான். தன்னைப்பற்றி தாழ்வாகவும் அற்பமாகவும் நினைப்பது வெட்கப்படத்தக்கது.

சரீரமாத்யம் கலுதா்ம ஸாதகம்
ஜந்தூனாம் நாஜன்ம துா்லபம்

மனிதப்பிறவியைத் தாழ்வாக நினையாதீர். அதை ஸ்ரீமந் நாராயணனுக்கு அர்ப்பணியுங்கள்.

மனிதத் தன்மைக்குள் தெய்வத்தன்மை மறைந்திருக்கி றது. மனிதத்தன்மை தெய்வத்தன்மைக்கு உயர வேண்டும். அது விலங்குத்தன்மைக்கு கீழிறங்கலாகாது. முன்னால் செல்வதற்கான Gear ஐப் பயன்படுத்துங்கள். பின்னால் செல்வதற்கான Gear ஐப் பயன்படுத்தாதீர்கள். இலட்சி யத்தை அடையும் வரையில் வழியில் நிறுத்தாதீர்கள். கர்மக்ஷேத்திரத்தில் (கடமை புரிவதற்கான இவ்வுலகில்) மனிதன் ஒரு யாத்திரிகன். அவன் தனது பொறுப்புகளை யும், கடமைகளையும் நிறைவேற்ற வேண்டும். அதுவே மனிதனது நிஜமான நோக்கமும், இலட்சியமும்.

வாழ்க்கை என்பதுஎன்ன? F-F-F-F- Follow the Master. The master is Conscience. எசமானரைத் தொடர்ந்து செல். மனசாட்சியே எசமானர். Face the devil. அரக்கனை எதிர்த்து நில்.

| | |
|---|---|
| Fight to the end | முடிவுவரை போராடு |
| Finish the game | ஆட்டத்தை முடித்து வை. |
| Life is a game; play it. | வாழ்க்கை ஒரு விளையாட்டு. விளையாடு. |

| | |
|---|---|
| Life is a dream realise it | வாழ்க்கை ஒரு ஆர்வம்மிக்க கனவு. அதை நிறைவேற்றிக் கொள். |
| Life is Love enjoy it. | வாழ்க்கை அன்புமயம். அனு பவி. |
| Life is trouble meet it | வாழ்க்கை இடைஞ்சல் கொண்டது. அதை எதிர் கொள். |

வாழ்க்கை மிகுந்த அர்த்தங்களை கொண்டது. அது சூட்சுமங்களும், இரகசியங்களும் கொண்டது. நாம் பவித் ரம், திவ்யம். மனித வாழ்வை தாழ்ந்ததென்றும், அற்பமான தென்றும் கருதுகிறோம். தவறு! இது தெய்வீகமானது.

**சத்யம்**

பவித்ரமானதும், திவ்யமானதும் ஆன இந்த வாழ்க்கை யில் நான்கில் மூன்றுபாகம் சத்யம் என்பர். அதுதவறு. வாழ்க்கையின் முழுமையும் சத்யமே. சத்யமே இறைவன். இறைவனே சத்யம்.

பூர்ணமத, பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ணமுதச்யதே
பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவாசிஷ்யதே.

இதுவும் பூர்ணம் அதுவும் பூர்ணம். இந்த முழுமையிலி ருந்து அந்த முழுமை வெளிவந்தது. பூர்ணத்திலிருந்து பூர்ணம் வெளிவந்தாலும் பூர்ணம் குறைவுபடவில்லை.

எது முழுமையானது? இறைவன் முழுமையானவர். நீயும் முழுமையானவன்; இயற்கையும் முழுமையானது.

சத்யம் முழுமையானது. சத்யத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். பொய் கூறலாகாது. உண்மை கூறும்போது

சங்கடங்கள் நேரிட்டால், பொய் கூறாதே. ''அனுத்வேக கரம் வாக்யம் ஸத்யம் ப்ரிய ஹிதம் ச யத்''. அபாயம் நேரும் காலத்தில் சத்யம் கூற இயலாவிடில், பொய் கூறலாகாது.

## இந்திரன்

ஒரு சமயம் இந்திரன் ஒரு தவமுனிவரை சோதிக்க எண்ணினான். அவர் அனைத்தையும் துறந்தவர். அவர் இரு விரதங்கள் பூண்டிருந்தார். யாரையும் துன்புறுத்தலாகாது; பொய் கூறலாகாது. இந்த விரதங்களை நிறைவேற்றுவதற்கா கத் தவம் செய்தார். வேடன் வடிவில் வந்த இறைவன் ஒரு மானை விரட்டிக்கொண்டு வந்தார். அப்போது தபஸ்வி கண்ணைத் திறந்தார். மான் அங்குள்ள புதரில் ஓடி ஒளிவதைக் கண்டார். இறைவன், வேடன் வடிவில் அங்கு வந்தார். ''குருஜி, நான் இங்கு மானைத் துரத்திக்கொண்டு வந்தேன், அதைப் பார்த்தீர்களா?'' ''பார்க்கவில்லை'' என்று கூறினால் அது அசத்தியம். ''புதருக்குப்பின்னால்'' என்று கூறினால் அது கொல்லப்படும். உயிரைக் கொல்வதில்லை என்று விரதங்கொண்டிருந்தாரல்லவா? ''கடவுளே, இந்த இரு விரதங்களையும் காப்பாற்றுவதற்குரிய சரியான எண் ணத்தை எனக்குக் கொடுங்கள்'' என்று வேண்டினார். இறைவன் அவரது கோரிக்கையை நிறைவேற்றினார்.

இறைவனை பரிசுத்த இதயத்துடன் பிரார்த்தித்தால் இறைவன் உடனே செவிசாய்ப்பார். உதட்டளவில் பிரார்த் தித்தால், அதற்கு பலன் ஒன்றும் இராது. தூய இதயத்துடன் பிரார்த்திக்கும்போது, அதற்கு Reaction, Reflection, Resound (பிரதிச்செயல், பிரதிபிம்பம், எதிரொலி) இவை நிகழ்கின் றன.

தபஸ்வி கூறினார். நான் என்ன செய்வேன் வேடனே, கண்கள் பார்க்கின்றன. அவை பேசாது. நாக்கு பேசும். அது காண இயலாது. ஒன்று பார்க்கிறது. மற்றது பேசுகிறது. ஆகவே நான் ஒன்றும் செய்ய இயலவில்லை என்றார். இறைவன் இவ்வாறான முறையை அவருக்கு கற்பித்தார். மனித வாழ்வு மிகுந்த குழப்பத்தில் உள்ளது. அதற்கு வழிகாண வேண்டும். உண்மை கூறும்போது அபாயங்கள் நேருகின்றன. ஆனால் பொய்யும் கூறலாகாது. ஆகவே இடைப்பட்ட வழியில் செல்லுங்கள்.

பொய் கூற வேண்டாம். உண்மை கூறினால் அபாயம் என்றால் உண்மையும் கூற வேண்டாம். மௌனமாக இருங்கள்.

—பாபா

(ஹே சிவசங்கர... என்ற பஜனைப்பாடலுடன் அருளுரையினை நிறைவு செய்தார்.)

*(2.7.96)*

# 6. மனிதனும் தெய்வமாக மாறுவான்

தாமஸ குணமாகிய சோம்பலை விட்டொழிக்காது, ஆன்மீகத்தில் புகுவது எவ்வாறு?

ராஜஸ குணமாகிய உணர்ச்சிகளைக் கைவிடாது, பக்தி எவ்வாறு வளரும்?

சாத்வீக குணமே பக்தியின் பாதைக்கு இட்டுச்செல்ல வல்லது. பாரத புத்திரர்களே! இதைச்செவி மடுத்துக் கேளுங்கள்.

## முக்குணங்கள்

நாம் காணும் இவ்வுலகம் முக்குணங்களின் பிரதிபலிப் பேயாகும். ஒவ்வொரு மனிதனும் முக்குணங்களின் வடிவி னன் ஆகும். முக்குணங்களைக் கொண்ட மனிதன், அவற்றை எவ்வாறு கடந்து செல்ல இயலும்? நல்லவை, கெட்டவை இவற்றை அவன் புரிந்து கொண்டால் முக்கு ணங்களைக் கடந்து செல்ல அவனால் முடியும். சாதாரண மனிதர்களுக்கு தாமஸ, ராஜஸ, சாத்வீக குணங்கள் தேவை. மனிதன் இவையில்லாது வாழ முடியாது. (இவற்றை) பிரித்துணராது, விசாரிக்காது அவன் செயலில் இறங்க இயலாது.யோசனையில்லாமல் அவன் செயலில் இறங்க இயலாது. ஆகவே தூக்கம், விசாரித்தல், யோசித்தல் இவை தாமஸ குணத்துடன் சம்பந்தமுள்ளவை.

ராஜஸ குணம் இல்லாது மனிதர்கள் கணங்கூட வாழ முடியாது. ஆசைகளனைத்தும் உணர்ச்சிகள், இவை ராஜஸ குணங்கள். இறைவனுக்காக ஆசைப்படுதலும் ராஜஸ குணமே. உலகியற் பொருட்களுக்காக ஆசைப்படும் தன்மை யுள்ள ஒருவனே இறைவனுக்காகவும் ஆசைப்படுகிறான்.

ஆசை எதற்காக இருந்தாலும், ஆசையின் தன்மை ஒன்றே. கோபம், துவேஷம், பொறாமை, அகங்காரம் இவையெல்லாம் ராஜஸ குணங்கள்.

ராஜஸிக இயல்பிலும், சாத்விக குணமும் மறைந்திருக்கிறது. கங்கை, யமுனை, நதிகளுக்குள் மறைந்திருக்கும் சரஸ்வதி நதிபோன்று, தாமஸ ராஜஸ குணங்களுக்குள்ளும் சாத்வீக குணம் மறைந்திருக்கிறது. வரிசைக் கிரமமாக ஒவ்வொரு குணத்தையும் அது செல்லும் வழியையும், அதன் செயல்படும் விதத்தையும் ஆராய்ச்சி செய்யும்போது, கங்கை யமுனையின் ஊடே சரஸ்வதி நதி செல்வது போல, ராஜஸிக தாமஸிக குணங்களினூடே இருக்கும் சாத்விக குணம் எத்தகையது என்பதை அறியலாம்.

## தாமஸ குணம்

தாமஸ குணத்தின் அடித்தளத்தில் சாத்விக குணம் உள்ளது. ராஜஸிக குணம் வெளிப்புறம் இருக்க, சாத்விக குணம் அடித்தளத்தில் உள்ளது. தாமஸிக, ராஜஸிக குணங்களைக் கடந்து சென்றபின்னரே ச்சாத்விக குணத்தை நாம் அடைகிறோம்.

முற்காலத்தில் ரத்னாகரன் என்ற கொள்ளைக்காரன் சிறிதும் ஈவு இரக்கமின்றி, வழியில் கண்ட பயணிகளைத் துன்புறுத்தி அவர்களிடம் உள்ள பொருட்களைக் கொள்ளையடித்தான். தாமஸிக குணம் தயை, தாட்சணியம் கூடியது. அதே கொள்ளைக்காரன் சப்த ரிஷிகளைச் சந்தித்து, அவர்களுடன் உரையாடி தபஸ்வியாக வால்மீகியாக மாறினான். முனிவராக மட்டுமல்ல, கவியாகவும் திகழ்ந்தான். அவனது காவியம் தெய்வீகக்காவியம்.

கவியென்பவன் யார்? கவியென்பவன் முக்காலத்தின் தன்மையை உணர்ந்தவன். இக்காலத்தில் சொற்களை

இணைத்துப் பாடுபவர்களை கவியென்று கூறுகிறோம். இவர்களெல்லாம் கவிகள் அல்லர். வால்மீகி, வியாஸர் போன்ற முனிவர் தவம் செய்து, முக்காலத்தையும் கடந்த இறைவனை தரிசித்து, முக்காலமும் உணர்ந்து, தெய்வீகக் காப்பியங்களை இயற்றினார்கள். முழுமையான தாமஸ குணமுள்ள ரத்னாகரன், முழுமையான சத்வ குணமுள்ள வால்மீகியாக மாறியதற்குக் காரணம் ஸத்ஸங்கமே (நல்லோ ரிணக்கம்).

என்னால் தாமஸிக குணத்தை மாற்ற இயலாது என்று கூறி ஒருவன் பலமற்றவனாக மாறலாகாது. அனைத்துக்கும் கடவுளருளே மூல காரணம். எவ்வாறு, எங்கே எப்போது நாம் கடவுள் அருளைப்பெறுவோம்?

**ரத்னாகரன்**

தாமஸ குணம், தாமஸ குணமாகவே நிலைத்திராது. தாமஸ குணம் நேராக சாத்விக குணமாக மாறக்கூடியது. தாமஸிகம் ராஜஸகுணம், ராஜஸிகம் சத்வ குணமாகவும் வரிசைக்கிரமமாக மாற வேண்டிய தேவை இல்லை. தாமஸகுணமுள்ளவன், கடவுள் அருள் காரணமாக, சான் றோர் உபதேசத்தைக் கேட்டு, சத்வ குணம் உள்ளவனாக மாற இயலும். தாமஸ குணமுள்ள ரத்னாகரன், சப்தரிஷிக ளின் உபதேசங்கேட்டு, கடுமையான தவம் புரிந்து வால்மீகி யாக மாறினான்.

இரண்டாவது ராஜஸ குணம். வீர்யம், துவேஷம், பொறாமை, ஆடம்பரம், அகங்காரம், கோபம். இத்தகைய குணங்களைக் கொண்டது. இத்தகைய குணங்களைக் கொண்ட முனிவர் யார்? அவரே விஸ்வாமித்திரர். இத்த கைய குணங்கள் கொண்ட விசுவாமித்திரர், இத்தகைய குணங்களுடன் வாழ்க்கை நடத்திய விசுவாமித்திரர் பிற்கா

லத்தில் மாபெரும் முனிவராக மாறினார். காரணம் என்ன? வசிஷ்டரிடம் கொண்ட பகைமை காரணமாக, அவரைக் குற்றங்கூறி, அவர் பிரம்ம ரிஷியாதலால் அவரிடம் பொறாமை கொண்டு, அவரை அழிக்க எல்லா முயற்சிகளும் செய்தார்.

## அருந்ததி

ஒரு நாள் மாலை வசிஷ்டர் தன் மனைவி அருந்ததியுடன் உரையாடிக் கொண்டிருந்தார். அன்று முழு நிலவு. அவர்கள் முழு நிலவின் தண்ணொளியை களித்துக் கொண்டிருந்தனர். அருந்ததி முழுநிலவைப் புகழ்ந்தாள். வசிஷ்டர், 'ஆம், இது விசுவாமித்திரர் தவம் போன்று சோபையும் ஒளியும் கூடியது' என்றார். புதருக்குப்பின் மறைந்திருந்த விசுவாமித்திரர் இதைக்கேட்டார். கையிலுள்ள வாளைத்தூர எறிந்தார். விசுவாமித்திரர் இவ்வாறு நினைத்தார். ''வசிஷ்டர் தவத்தின் பெருமையை எவ்வளவு அழகாகக் கூறினார். எனது பகைமை, எனது ராஜஸ குணத்தின் விளைவு. தன் வாளைத்தூர எறிந்துவிட்டு ஓடிவந்து வசிஷ்டர் கால்களில் வீழ்ந்தார். வசிஷ்டர், விசுவாமித்திரரை ஆசீர்வதித்து ''பிரம்மரிஷி விசுவாமித்திரரே எழுந்திருங்கள்'' என்றார். இதுவரை வசிஷ்டர் விசுவாமித்திரரை 'ராஜரிஷி' என்றே அழைத்து வந்தார். இப்போது மிகவும் இயல்பாக, எளிதாக 'பிரம்ம ரிஷி' என்று அவரை அழைத்தார்.

## பிரும்ம ரிஷி

விசுவாமித்திரர் ஆனந்தமடைந்தார். 'எவ்வாறு, ஏன் என்னை இப்போது பிரம்மரிஷி என்று அழைத்தீர்கள்' என்று கேட்டார். 'விசுவாமித்திரா, இதுவரையில் உன்னிடம்

அகங்காரம் குடிகொண்டிருந்தது. நீ அகங்காரத்துடன் பிறந் தாய், அகங்காரத்துடன் வளர்ந்தாய், அகங்காரத்துடன் வாழ்க்கை நடத்தினாய், யாருக்குமே நீ தலை வணங்கிய தில்லை. இன்று உன் அகங்காரத்தை ஒழித்து என் கால்களில் விழுந்து வணங்கினாய். உன் அகங்காரம் ஒழிந்ததற்கு இதுவே அடையாளம். ஆகவே நீ பிரம்மரிஷி என்றார். அகங்காரம் இல்லாதவரே பிரம்மரிஷி. அகங்காரம், பற்று தல், எனது என்ற உடைமைக்குணம், இவை இல்லாதவரே பிரம்மரிஷி. பாண்டித்தியம், உயர்பதவி இவற்றைப்பற்றி அவர்கள் கவலைப்படுவதில்லை. தாம் இறைவனின் கருவிகள். அனைத்தும் இறைவனின் திருவுள்ளமே. இறைவ னின் கைகளில் நாம் வெறும் பொம்மைகள். அவர் எவ்விதமும் ஆடச்செய்வார். இத்தகைய குணங்களை வளர்த்துக் கொண்டால், அவன் பிரம்மரிஷியாகிறான்.

'நான்' இது எனது, அது உனது என்ற குணங்கள் வளரும்போது அவன் ராஜரிஷி. நான் என்ற அகப்பற்று, எனது என்ற புறப்பற்று இவற்றைக் கைவிடும்போது அவன் பிரம்மரிஷியாகிறான். அநேகங் கற்றவரை முனிவர் என்று கருதலாகாது. கடுந்தவம் புரிபவரை முனிவர் என்று கருதலாகாது. பற்றுதலை விட்டொழித்தவர் எவரோ அவரே முனிவர் (ரிஷி).

## மதிப்பு

அனைத்து நற்குணங்களும் மனிதனிடம் குடிகொண்டி ருக்கவேண்டும். தெய்வப்பிரீதி, பாப பீதி, சங்க நீதி (இறையன்பு, பாவங்கண்டஞ்சுதல், சமூக நெறி) இவை குடிகொண்டால்தான் மனிதனுக்கு மதிப்புண்டு. சத்யத்தை மறந்த அன்று, தருமத்தைப் பின்பற்றாத அன்றே மனிதன் தனது மதிப்பை இழக்கிறான். உலக முழுவதும் பொருட்கள்

அவ்வவற்றிற்கு உரிய மேம்பாட்டுடன் இருப்பதைக் காண்கிறோம். ஏன்? அவைகள் நமது இயல்பான தன்மைப்படி நடக்கின்றன. மனிதனோ, தன்னுடன் கூடப்பிறந்த இயல்பான தன்மைகளை அழித்துவிட்டு, செயற்கையான முறையில் வாழ்கிறான்.

ஒரு மாணவன் பேசினான். ஸ்வதர்மம், பரதர்மம் என்று கூறினான். ஸ்வதர்மம் என்றால் ஆத்ம தர்மம். பரதர்மம் என்றால் வெளிப்புறமானது. உடல் சம்பந்தமான தர்மம் அனைத்தும் வெளிப்புறமானது. அது ப்ரவ்ருத்திமார்க்கம். ஆத்ம தர்மம் என்பது நிவ்ருத்தி மார்க்கம். மனிதன் ஸ்வதர்மம், ஆத்ம தர்மம் இரண்டையும் மறந்து செயற்கையான வழியில் வாழ்கிறான்.

இக்காலத்தில் என்ன நடக்கிறது? கத்தரிக்காய் போன்ற கறிகாய்களின் விலை உயர்ந்து விட்டது. மனிதனின் மதிப்பு மிகவும் தாழ்ந்து விட்டது. இதற்குக் காரணம் என்ன? அவன் சத்யத்தை மறந்து விட்டான். தர்மத்தை மறந்து விட்டான். இவை இரண்டையும் அவன் மறந்தபோது, தர்மமும் அவனை மறந்தது.

தர்மயேன ஹதோ ஹந்தி, தர்மோ ரக்ஷதி ரக்ஷித: தர்மத்தை நாம் போஷித்தால் அது நம்மை காப்பாற்றும். தர்மத்தைக் கொன்றால், அது நம்மைக் கொன்று விடும். மனிதன் மதிப்பை இழந்ததன் காரணம் இதுவே.

**உண்மை**

மனிதன் சத்யத்தை அனுசரிப்பதில்லை. ஒருவன் உண்மையே பேசி, தருமத்தின் வழியில் நடக்க வேண்டும். தற்காலத்தில் அவன் தருமத்தைப்பற்றிப் பேசுகிறான். ஆனால் அதன்படி நடப்பதில்லை. தருமத்தின்படி நடக்காவிடில், வாழ்க்கை எப்படி நன்றாக அமையும்?

தருமத்தைப்பற்றி அதிகமாகப் பேசுகிறோம். மேடையிலிருந்து இறங்கும்வரை, தர்மம் நம் கூடவே இருக்கும். தர்மம் நம்மைக் காப்பாற்றும் என்று எவ்வாறு நாம் எதிர்பார்க்கமுடியும்? இக்காலத்தில் தருமத்தைப் பற்றிப் பேசுகிறோம். அதைக் கற்பிக்கிறோம். ஆனால் நாம் தருமத்தைப் பயிலுவதில்லை. கற்பித்தலும் விளம்பரம் செய்தலும் முக்கியமல்ல. அதை வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டும்.

கணக்கற்ற இனிப்பு வகைகள் புத்தகத்தில் குறிப்பிடப்படுகின்றன. புத்தகத்தில் பல இனிப்புகளின் பெயர்களைப் படிக்கிறாய். ஆனால் ஏதாவது ஒன்றைத் தின்றாலேயல்லாது, அதன் சுவை உனக்குப் புரியாது. அதே போல இக்காலத்தில் மனிதன் சத்யம், தர்மம் என்பவற்றைப்பற்றி, புத்தகத்தின் மூலம் அறிந்ததைக் கொண்டு பேசுகிறான். ஆனால் அவற்றை உடல் மூலமாக செயற்படுத்த வேண்டும்.

### சப்த ரிஷிகள்

ரத்னாகரன் முதலில் தாமஸிகமாக இருந்து, முனிவர்கள் கூறியதைக் கேட்டதால், பிறகு சாத்விகமாக மாறினான். முனிவராக மாறினான். அவன் கேட்டதைப் பயின்றான். சப்தரிஷிகள் கூறியதைக் கேட்டதுடன் நிற்கவில்லை. அவற்றை வாழ்க்கையில் கடைப்பிடித்து பயிற்சி செய்தான். அவன் தன் உடலை முழுவதுமே மறந்தான். அவனைச் சுற்றி எறும்புப்புற்று வளர்ந்தது. எறும்புப்புற்று முழுவதும் இராமநாமமே எதிரொலித்தது. அவன் அகங்காரத்தையும் மறந்து உடல் உணர்வையும் மறந்தான். மனிதனுக்கு தேகப்பற்றுதல், கல்விச்செருக்கு, பணகர்வம், குலப்பெருமை, குணத்தைப்பற்றிய பெருமிதம் இருக்கும்வரை அனைத்தையும் இழக்கிறான். இவையனைத்தையும்

கைவிட்ட கணத்தில் மகரிஷியாக மாறுகிறான். இதனால் ரத்னாகரன் மகரிஷியாக ஆனது மட்டுமல்ல, இராமசரிதம் இயற்றுவதற்கு உரிமையும் தகுதியும் பெற்றார். தாமஸகுண மிகுந்த ரத்னாகரன், சத்வகுண மிகுந்த வால்மீகியாக மாறியதற்கு, சப்த ரிஷிகளின் ஸ்பரிசமும், (தொட்டதும்) உரையாடலுமேயாகும். அவர்களுடைய அற்புதமான இணக்கத்தால் அவனது கெட்ட குணங்கள் அவனை விட்டு விலகின.

## விசுவாமித்திரர்

விசுவாமித்திரரும் அவ்வாறே. அவர் முதலில் கௌசிகர் என்ற அரசராக இருந்தார். கௌசிகர் என்ற பேரரசராக ராஜஸகுணங்கள் மிகுந்து இருந்தார். அத்தகையவர் தனது அரசைத் துறந்து, சுகதுக்கங்களை மறந்து, கடுமையான தவம் இயற்றினார். வசிஷ்டரின் புனிதமான உபதேசங்களைக் கேட்டு அவர் மகரிஷியாக (மாமுனியாக) மாறினார். பிறகு அவர் பிரம்ம ரிஷியானார். ராஜஸ குணத்திலிருந்து, பிரம்மரிஷியாக உயர்ந்த வரலாறு அவருடையது.

சாத்விகம் என்பது என்ன? சாந்தம், சகிப்புத்தன்மை, நல்லனுபவம், சத்யம் ஆகிய இயல்புகளைக் கொண்டது சாத்விகம். காமம், வெகுளி, மயக்கம்,பேராசை, தற்பெருமை, பொறாமை. இவற்றிற்கு அதில் இடமில்லை. வெறுப்பின் சுவடு சிறிது இருந்தாலும் அதை பிரேமையாக மாற்றிவிடும். பிரேமையாக மாற்ற இயலாவிடில், தவம் செய்து என்னபயன்?

## பிரேமதத்துவம்

ஒரு சிறு உதாரணம். தவறாக நினைக்க வேண்டாம். ஸ்வாமி பிரேம தத்துவத்தை உபதேசிக்கிறேன். ஒவ்வொரு

உரையிலும் பிரேமை என்று குறிப்பிடுகிறேன். எத்தனை பேர் இதை அறிந்து உணர்ந்திருக்கிறீர்கள். எத்தனைபேர் நடைமுறையில் பயிற்சிக்குக் கொண்டு வந்திருக்கிறீர்கள். யாராவது உங்களை ஏதாவது கேள்வி கேட்டால், அன்புடன் பதில் கூறலாகாதா? மந்திரிலோ, புத்தக சாலையிலோ, கான்டீனிலோ, ஆஸ்பத்திரியிலோ எங்குமே யாரும் அன்புடன் பேசுவதே இல்லை. எதற்காக அறிவுரைகளைக் கேட்க வேண்டும். யாராவது ஒருவர் அன்புடன் பதில் கூறுகிறார்களா? யாராவது 'ஐயா, ஸ்வாமியின் தரிசன நேரம் எது? என்று கேட்டால் 'போ, போ' - சாந்தமாக, அமைதியுடன் பதில் கூறலாகாதா. வேறு யாரை கேட்டாலும் இது எனது Duty இல்லை. 'போ'. Duty இல்லாவிடிலும் ஒழுங்காகப் பதில் கூறலாகாதா. அன்புடன் கூறலாகாதா. ஆசிரமத்தில் இங்கு 30, 40 வருடங்கள் இருக்கிறீர்கள். அன்பு என்பது யாரிடமும் இல்லை. எல்லாவிதமான ஆன்மீகப் பயிற்சிகளெல்லாம் செய்கிறீர்கள் எதற்காக? உங்களுக்குள் இருக்கும் அன்பு என்ன ஆயிற்று. நீங்கள் அன்பினைக் கொல்கிறீர்கள். வெறுப்பினை வளர்க்கிறீர்கள். நிஜமாகவே நீங்கள் ஸ்வாமியின் உரைகளைக் கேட்டு வருவதாயிருந்தால், அன்பினை ஏன் பயிற்சி செய்வதில்லை? ஆசிரமத்தில் தங்குகிறீர்கள். ஆனால் செயல்கள் தீயவையாக இருக்கின்றன. பணிகளை சிரத்தையுடன் செய்கிறீர்களா? சத்யத்தை உரைக்கிறீர்களா? அன்புடன் பேசுகிறீர்களா? எங்குமே பகவான் அன்பு நிறைந்த சொற்களைக் கேட்கவில்லை.

**ஈரம்**

மக்கள் உங்களிடம் பேச வருகிறார்கள். இங்கு பேச வேண்டாம் என்பதை நீ ஏன் அன்புடன் எடுத்துரைக்கலாகாது. ஆசிரியர்கள், மாணவர்கள், மருத்துவர்கள், செவிலியர்கள் (NURSE) யாருமே அன்புடன் பேசுவதை ஸ்வாமி

காணவில்லை. இவ்வுரைகளை நீங்கள் ஏன் கேட்க வேண்டும். கேட்டபின் பயிற்சி செய்யுங்கள். மழை பெய்ததன் பயன் தரையில் ஈரம் இருக்க வேண்டும்.

பஜனையோ, அருளுரையோ, முதல் வரிசையில் வந்து உட்காருகிறார்கள். பஜனை அரங்கத்தில் பெண்கள் முதல் வரிசைக்குப் போட்டியிடுகிறார்கள். ஏன் இந்த அகங்காரம்? எங்கிருந்தாலும் ஸ்வாமி கூறுவதைக் கேட்டுக் கொண்டிருக் கிறேன் என்று மகிழ்ச்சியுடன் இருக்கலாகாதா? கணக்கற்ற நேரம் உங்களுக்குள்ளது. கணக்கற்ற அன்பு உங்களிடமுள் ளது. இவற்றை நீங்கள் நிரப்பிக்கொள்வதில்லை.

மழை பெய்கிறது. பானைகளை நேராக நிமிர்த்தி வைத்தால் அதிக நீர் சேமிக்கலாம். பானைகளைத் தலை கீழாகக் கவிழ்த்து வைத்தால், ஒரு சொட்டு நீர் கூட சேமிக்க இயலாது. இந்த உரைகளைக் கேட்பவர்கள் அனைவரும் பானைகளைத் தலைகீழாகக் கவிழ்த்து வைத்துக்கொள்கிறார் கள். ஆகையால் அவர்கள் இதயத்தில் அன்பின் சுவடு சிறிது கூட இல்லை.

நீங்கள் ஏன் இங்கு இருக்க வேண்டும்? தங்க வேறிடம் இல்லையா? வந்து ஒரு பயனுமில்லை. என்ன சாதித்தீர்கள்? என்ன அனுபவித்தீர்கள்? என்ன ஆனந்தித்தீர்கள்? ஒன்று மில்லை. நீங்கள் காலத்தை வீணடிக்கிறீர்கள். இன்றிலிருந்தா வது உண்மையைத் தெரிந்து கொள்ளுங்கள். யாராவது உங்களைக் கேள்வி கேட்டால் அன்புடனும், மரியாதையுட னும் பதில் கூறுங்கள். மக்கள் கூடுமிடங்களில், பொது மக்களுடன் தொடர்பு ஏற்படும், Accommodation, Information, Canteen, Book stall, Stall - எங்கு சென்றாலும் அங்கு Bull dog, Alsation dog இவற்றைக் காண்கிறீர்களே தவிர, மரியாதைப் பண்பைக் காண்பதில்லை. இங்கு ஏன் நீங்கள் வசிக்க வேண்டும்?

## இனிமை

கோடிக்கணக்கான ரூபாய்கள் செலவழித்து ஆஸ்பத்திரி கட்டப்பட்டது. அவர்களுக்கு ஏன் அன்புடன் கூடி சிகிச்சை செய்யலாகாது? நோயாளிகள் பல துன்பங்களுடன் உங்களை அணுகும்போது, நீங்கள் ஏன் அவர்களுடன் இனிமையாகப் பேசலாகாது? அவர்களுடன் சண்டையிட்டு, நேரமில்லை வெளியே செல் என்கிறீர்கள். Get out என்றால் கூடப்பரவாயில்லை. அதைவிட இன்னும் கடுமையாகப் பேசுகிறார்கள். அத்தகையவர் மருத்துவர்களல்லர். மனிதர்கள் அல்லர். பக்தர்களுமல்லர். அவர்கள் ஸ்வாமிக்காக வந்திருந்தால், அன்பினை வளர்த்துக்கொள்ள வேண்டும்.

உச்சியிலிருந்து உள்ளங்கால் வரையில் ஸ்வாமி அன்பின் வடிவம். பகவானிடமிருந்து அன்பினைப் பெறுகின்றோம். அவற்றைப் பயன்படுத்துவதில்லை. அன்புடனும் அமைதியுடனும் பதில் கூறுவார் யாருமில்லை.

அன்பின் வடிவங்களே!

அன்பு இல்லாவிடினும், ஸ்வாமி உங்களை அன்பின் வடிவங்கள் என்றுதான் அழைக்கிறேன். அன்பை வளர்த்துக் கொண்டாலே போதும். அன்பை வளர்த்துக்கொண்டால், எல்லா தவத்தின் எல்லா ஆற்றலும் உங்களுக்கு கிட்டும்.

## நிலவு

வசிஷ்டர் என்ன கூறினார்? ''ஆஹா, நிலவு தண்ணொளி வீசுகிறது. களங்கமில்லாது, குறைவுபடாது வீசுகிறது. விசுவாமித்திரரின் தவத்தின் ஆற்றல் போல ஒளி வீசுகிறது''. விசுவாமித்திரர் அங்கு இல்லாவிடினும், வசிஷ்டர் அவரைப் புகழ்ந்தார். விசுவாமித்திரர் இதைக்கேட்டதுமே அவர் மனம் உருகியது.

புதியவர்கள் பிரசாந்திநிலையம் வரும்போது, ஆசிரம வாசிகள் அவர்களை அன்புடன் வரவேற்று உபசரிக்க வேண்டும். அவர்களை நாம் பாசத்துடனும், நேசத்துடனும் வரவேற்க வேண்டும். பெற்றோர்கள் அங்கு இல்லை என்ற குறையை அவர்கள் மறக்கும்படி செய்ய வேண்டும். வெளிக்கல்லூரிகளில், புதிய மாணவர்கள் அரக்கத்தனமான சீண்டலை (Ragging) ச் சந்திக்க வேண்டியுள்ளது. தமது சொந்த உறவினராக இருந்தால் இவ்வாறு அவர்கள் செய்வார்களா? புதிதாக வந்தவர்கள் பயமில்லாது மகிழ்ச்சி யுடன் இருக்குமாறு செய்ய வேண்டும். அதற்குப்பதிலாக அவர்களுக்கு மனக்கொந்தளிப்பை ஏற்படுத்துகிறார்கள். இது முட்டாள்தனமானது. இரக்கமற்றது. குரூரமானது. ஆகவே புதிதாக வரும் மாணவர்களை மிகுந்த அன்புடன் நடத்த வேண்டும். அது போல ஹாஸ்டல் (விடுதிகள்)லுக்கு வரும் மாணவர்களையும் மிகுந்த பாசத்துடனும் நேசத்துட னும் நடத்த வேண்டும். நாம் அவர்களை வித்தியாசமாக நடத்துகிறோம். பக்கத்தில் கூட உட்கார அனுமதிப்பது இல்லை. அவர்களுடன் சகஜமாகப் பழக வேண்டும். பிறகுதான் ஸ்வாமியின் பிரேம தத்துவத்தைப் புரிந்து கொள்ள முடியும். என்ன பேசினாலும் எதைப்பேசினாலும் அன்புடன் பேசுங்கள். தெரியாவிடில் 'ஐயா, எனக்குத்தெரி யாது' என்று கூறுங்கள். மாறாக 'போ, போ' என்று விலங்குகளைப்போல அவர்களை விரட்டாதீர்கள். அது சரியல்ல. எல்லோரும் மனிதரே. அனைவரையும் கௌர விக்க வேண்டும். அனைவரையும் நேசிக்க வேண்டும்.

## தெய்வீகப் பிரேமை

பிறகு நீங்கள் எல்லோரிடமும் குடிகொண்டுள்ள தெய்வீகப் பிரேமையை ஏற்றுக்கொள்ளத் தகுதி பெறுவீர்

கள். இறைவனை வழிபடுகிறீர்கள். ஜீவராசிகளைத் துன்புறுத்துகிறீர்கள். இது என்ன வழிபாடு?

காளைகள் இரவும் பகலும் உழைக்கின்றன. அவைகளை நாம் சவுக்கால் அடிக்கிறோம். அதே காளை நந்தி வடிவில் கற்சிலையாக இறைவன் முன் அமர்ந்திருந்தால் அதைச்சுற்றி வலம் வருகிறோம். இது கல்லின் மேலுள்ள பக்தி. இது இதயத்தின் பக்தி அல்ல. இத்தகைய இதயம் நமக்கு இருந்தால், நம்மை பக்தர்கள் என்று எவ்வாறு கூறிக்கொள்வது.

ஒவ்வொருவரும் Compassion, Compassion (கருணை) என்று கூறுகிறார்கள். Compassion எங்கே இருக்கிறது? வெறும் Passion (மனோவேகம்)தான் இருக்கிறது. ஒவ்வொருவரையும் துன்புறுத்துகிறோம். துன்புறுத்தாதீர். இது ஆசிரமம் என்று கூறப்படுகிறது. இங்கு சிரமத்தைக் கொண்டு வரலாகாது. பகவான் நமக்கு ஏன் Interview (பேட்டி) அளித்து நமக்கு மகிழ்ச்சி கொடுக்கக்கூடாது. வெளியில் நாய்கள் போலத்திரிகிறோமே என்று பல பக்தர்கள் மனத்துன்பம் அடைகிறார்கள். அனைவருக்கும் பேட்டியளிக்க இயலாதே? இதுவே உங்கள் அனைவருக்கும் சமமான ஒரே interview. இதை பிரேமை மூலம் புரிந்து கொள்ளுங்கள். (பலத்த கரவொலி). நாளையிலிருந்தே நீங்கள் அன்புடன் பேச வேண்டும். அன்புடன் பதில் கூற வேண்டும். தெரியாவிடில் ''ஐயா! மன்னியுங்கள், எனக்குத்தெரியாது' என்று இனிமையாகக் கூற வேண்டும். YOU MAY NOT OBLIGE, BUT YOU CAN TALK OBLIGINGLY. நீங்கள் உதவி செய்யாதிருக்கலாம். ஆனால் உங்களால் ஆதரவாகப் பேச இயலும். பேச்சைக் குறையுங்கள். அப்போது நீங்கள் விலங்குத்தன்மையிலிருந்து விலகியிருப்பீர்கள். விலங்குத்தன்மை உள்ளிருக்கும்போது, மனிதத்தன்மையுடன் எவ்வாறு இருக்க முடியும்? முதலில் விலங்குத் தன்மையை விரட்டியடிக்க வேண்டும்.

அன்பு செலுத்துங்கள். அன்புடன் எல்லோருடனும் பகிர்ந்து கொள்ளுங்கள். இதுவே உண்மையான சாத்விக குணம்.

வாழ்க்கை முழுவதும் ராஜஸிக குணத்துடன் வாழ்ந்து வருகிறோம். அது அரக்க குணம். அது சரியல்ல. நாம் மனிதர்கள். 'நான் விலங்கல்ல', நான் அரக்கனல்ல, நான் மனிதன்! நாமே நம்மை கேட்க வேண்டும்.

''நான் கெட்டவனல்ல. நான் விலங்கல்ல. நான் மனிதன், நான் மனிதன், நான் மனிதன்''

## மனிதனும் தெய்வமாக மாறுவான்

அப்போது ஒவ்வொரு மனிதனும் தெய்வமாக மாறு வான். நீயே கேள்வி கேட்டுக்கொண்டால் உனக்கு விடை தானாகவே வரும்.

இப்போது கருணையென்பதே இல்லை. தயை, கருணை இவற்றின் சுவடே இல்லை. யாரும் ஒழுங்காக ஆதரவு அளிப்பதில்லை.

நாளையிலிருந்து பண்புடன் பேசுங்கள். நோயாளிகளை அன்புடன் கவனியுங்கள். அவர்கள் நிலையை அறிந்து தகுந்த மருந்து கொடுங்கள்.

படித்த மனிதர்கள் அதிகக் குரூரமாக இருக்கிறார்கள். இந்தக்கல்வி மனிதனுக்கு அகங்காரத்தையும், கர்வத்தையும் அளிக்கிறது. கிராமவாசிகள் சிறந்தவர்கள். அவர்கள் பணிவு டன் இருக்கிறார்கள். ஓரளவுக்கு அவர்களிடம் கலாசாரம் இருக்கிறது. படித்தவர்களிடம் கலாசாரப்பண்பே இல்லை. ஆனால் அவர்களிடம் சச்சரவிடும் குணம் இருக்கிறது. இவற்றிலிருந்து நாம் விலகித்தூர இருக்க வேண்டும்.

பக்தி என்பது வெறும் வழிபாடல்ல. நாம் தெய்வீகப் பிரேமையை வளர்க்க வேண்டும். பிரேமையினை வளர்த்துக் கொண்டால் மனிதப்பண்பு உயர்மாற்றம் அடையும்.

பகவானின் அருளைப்பெற, பிரேமைதான் ராஜவீதி.

**—பாபா**

(பிரேம முதித மனசே கஹோ... என்ற பஜனைப்பாடலுடன் பகவான் அருளுரையினை நிறைவு செய்தார்.

*(3.7.96)*

# 7. பகவான் ஒவ்வொருவரையும் கவனிக்கிறார்

புண்ணியச் செயல்கள் புரிந்தும், தியாகம் செய்தும், அரக்க குணங்களைத் தடுத்தும், இறைவனிடம் பக்திசெலுத்தியும், மனிதா, அன்றாட வாழ்க்கையை நடத்துவாயாக.

அன்பின் வடிவங்களே!

### மானிடப்பிறவி

மானிடராகப் பிறத்தல் அரிது. அரியதான மானிடப்பிறவியைப் பெற்று, புனிதமான அமைதியை அனுபவிக்காவிடில், அது பெரும் துரதிருஷ்டமாகும். பிறப்பிலிருந்து இறப்பு வரை, மனிதன் பல மாற்றங்களை அடைகிறான். எத்தகைய மாறுதல்களை அடைகிறான் என்பது அவனுக்கே தெரிவதில்லை. இவ்வுலகத்தில் எத்தனையோ மாற்றங்கள், மாறுதல்கள், திருப்பங்கள், குறுக்கங்கள் உள்ளன. அவற்றை அவன் அறியான்.

> சிறுவயதில் நண்பர்களுடன் விளையாட்டில் கழித்தான்.
> யுவ பருவத்தில் பெண்கள் நாட்டத்தில் கழித்தான்.
> முதுமைப் பருவத்தில் இறைவனை நினைக்கவில்லை.
> கிடைக்காததைப் பற்றி மனம் வருந்துகிறான்.
> கெட்ட பழக்கங்களைக் கைவிடுவதில்லை. பக்தியில் நாட்டமில்லை. வாழ்க்கையை அழித்துக்கொண்டு, மண்ணுக்குச் சமானமாக அழிந்து படுகிறான்.

ஆனால் மனிதன் மதிநுட்பம் மிகுந்தவன். ஆனால் எந்த திசையில் மதி நுட்பத்தைச் செலுத்துவது என்று அறியவில்லை. மனிதனுக்கு அறிவு இருந்தும் நேர்வழியில்

அதைப்பயன் படுத்துவதில்லை. இதற்குப் பொறுப்பு யார் என்று கேட்டால் மாயை என்ற பதில் கிடைக்கிறது.

### மாயை

மாயை என்பது ஒரு பெயரே தவிர, உண்மையில் மாயைக்கு உருவம் இல்லை. இவ்வுலகில் நடைபெறும் எல்லா நிகழ்வுகளும் ஆட்டமும் பாட்டமும் வேடிக்கையும், விளையாட்டும், இன்பங்களும் மாயை (பிரமை) என்று நினைக்கிறோம். பண்டிதர்களும் மாயை ஒரு நர்த்தகி என்று கூறுகிறார்கள். நர்த்தகி என்றால் ஆடுபவள். மாயை எல்லோரையும் ஆடச்செய்கிறதா? இந்த நர்த்தகியைக் கட்டுப்படுத்துவது எவ்விதம்? அவள் மேல் ஆதிக்கம் செலுத்துவது எவ்வாறு? ந-ர்த்த-கி. இதை மாற்றினால் கீ-ர்த்தனை. அதாவது கீர்த்தனத்தின் மூலம், இறைவன் புகழ் பாடுவதன் மூலம் நர்த்தகியை வசப்படுத்தலாம். இதுவே பக்திமார்க்கம் என்று கூறப்படுகிறது.

இவ்வுலகத்தின் இயல்பை அறிந்து அதன்படி நாம் நடந்து கொள்வதற்கு, தண்ணீரில் மூழ்கிய ஒருவனால் பேச இயலாது. கரையில் உள்ள மனிதனால்தான் பேச இயலும். பிரேமையில் மூழ்கிய ஒருவனால், பிரேமையின் இயல் பைப்பற்றிப் பேச இயலாது. பிரேமை என்ற நீருக்கு மேலே உள்ள ஒருவனால்தான் பிரேமையைப் பற்றி மேம்போக்கா கப் பேச முடியும். இதுவே இக்கால சமுதாயத்தின் நிலை. பிரேமையின் அனுபவம் என்ன என்று அறியாமல், அதன் இயல்பு என்ன என்று அறியாமல் அதைப்பற்றிப் பேசுவது, கேலிக்குரியது.

### ஆன்மீகப் பயிற்சி

எத்தகைய ஆன்மிகப்பயிற்சி செய்ய வேண்டும்? ஆன்மீகப்பயிற்சி (சாதனா) என்பது என்ன? ஆத்மா

அல்லாதவற்றை மறந்து, ஆத்மாவை நினைந்திருப்பதே சாதனா. ஆத்ம ஞானம் பெறுதலே சாதனா, நிலையற்றதை மறந்து, நிலையானதை நினைந்திருப்பதே சாதனா. இத்தகைய ஞானத்தை மனதில் கொள்ளுதலே சாதனா. சாதனா என்பது சடங்குகளோ, யாக யக்ஞங்களோ அல்ல. பல பெண்கள் வீட்டின் கடமைகளையெல்லாம் செய்து கொண்டு, வீட்டின் எசமானரையும், குழந்தைகளையும் கவனித்துப் பராமரிக்கிறார்கள். 'ஐயோ, இந்த நல்ல செயல்களில் ஈடுபட முடியவில்லையே' என்று வருந்துகிறார்கள். சத்ஸங்கத்தில் ஈடுபட முடியவில்லையே என்று வருந்துகிறார்கள். ஸத்ஸங்கத்தில் சேர்ந்து, அங்கு கூறுவதைக் கேட்பதால் என்ன பயன்? உண்மையான சாதனை என்பது குழந்தைகளை நன்கு பராமரித்து, வீட்டை சுத்தமாக நன்றாக வைத்துக்கொண்டு, கணவனை மகிழ்ச்சியுடன் இருக்கச் செய்வதே உண்மையான சாதனை. வீட்டில் சமையல் செய்து, குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்பி, கணவன் அலுவலகம் செல்ல உதவி செய்வதே சாதனா. சமையல் செய்யும்போது, உண்மையான ஆன்மீகப்பயிற்சி பெறுகிறோம். அரிசி வேறு, கல்வேறு என்று கவனமாகப் பிரித்து, அரிசியை சமைத்தல். இதுவே க்ஷேத்ர, க்ஷேத்ரக்ஞ விபாக யோகம். இதுவே குணத்ரய விபாக யோகம். இதுவே ஆத்ம, அநாத்ம விபாகயோகம்.

அரிசியையும் கல்லையும் பிரித்து அரிசியை சமைத்தல் ஆன்மீகப் பயிற்சி (சாதனை). உபயோகமுள்ள அரிசி அனைத்தும் க்ஷேத்ரக்ஞன் (அறிந்தவன்). கல் அனைத்தும் க்ஷேத்ரம்.

கறிகாயை நறுக்குகிறாய். அப்போது எவ்வாறு நினைக்கிறாய்? நான் கறிகாய் நறுக்கவில்லை. என்னுடைய கெட்ட குணங்களை நறுக்கிக் கொண்டிருக்கிறேன். ஞானம் என்ற கத்தியால் வெட்டிக் கொண்டிருக்கிறேன். அன்பு என்ற

தண்ணீரில் கழுவுகிறேன். விஞ்ஞானம் என்ற பலகையில் வைக்கிறேன். ச்ரத்தை, பக்தி என்ற உப்பு, காரம் இவற்றை சேர்க்கிறேன். இதுவே சரியான சமையல்.

மாலை நேரத்தில் காய், பூரி போன்ற சிற்றுண்டி பரிமாறுகிறாள். பஜனைக்குச் செல்லாமல் பூரி தயார் செய்ய வேண்டுமே என்று கவலைப்பட வேண்டாம். பூரி தயார் செய்யும்போது, நான் எனது இதயத்தை விசாலமாக்கிக் கொள்கிறேன்.

வீட்டைச் சுத்தமாகக் கழுவுகிறீர்கள். அப்போது வீட்டைக் கழுவுவதாகப் பொருள் அல்ல. என் இதயத்தை நான் கழுவுகிறேன்.

**சாதனை**

இது போன்ற உயர்ந்த எண்ணங்கள்தான் ஸத்ஸங்கம். உயர்ந்த 'சாதனை' என்பது, கணவனுக்கு உதவிசெய்து, குழந்தைகள் பள்ளிக்குச் செல்ல வைத்து, வீட்டைப் பராமரித்தலேயாகும். ஒருவரது கடமையை செவ்வனே புரிதல் சாதனை. (ஆன்மீகப்பயிற்சி)

பல ஆண்களும், பெண்களும் காவிஉடை தரித்து, உடைமைகள் அனைத்தையும் தியாகம் செய்து, ஆனால் நான், எனது என்பவற்றை விடாமல் பற்றிக் கொண்டிருப்பதைக் காண்கிறோம். ஆதிசங்கரர், வேதங்களுக்குப் பொருள் கூறி நாடெங்கும் விஜயம் செய்தார். மண்டனமிச்ரரைச் சந்தித்தார். அவருடன் விளக்கமாக வாதஞ்செய்தார். அவரது மனைவி உபயபாரதி, பெரும் ஞானி. அவள் உடைமைகளை எல்லாம் துறந்து, ஆசிரமத்தில் தங்கி பெண்களுக்கு வேதாந்தம் கற்பித்து வந்தாள். ஒருநாள் தனது சீடர்களுடன் கங்கைக்குச் சென்று கொண்டிருந்தாள். மரத்தின் நிழலில் ஒரு சன்னியாசி தன் கமண்டலத்தைத் தலையினடியில்

வைத்துப் படுத்திருப்பதைக் கண்டாள். சந்நியாசி கமண்ட லத்தை வேறு எங்காவது வைத்தால் மற்றவர்கள் திருடிவிடு வார்கள் என்று பயந்தான். உபயபாரதி சீடர்களிடம் ''பார்த்தீர்களா! இந்த சந்நியாசி சர்வ சங்க பரித்யாகி (அனைத்தையும் துறந்தவர்) ஆயினும் கமண்டலத்தைப் பற்றிக் கொண்டிருக்கிறார் பாருங்கள். அதனிடம் அவருக்கு எவ்வளவு பற்றுதல்! இத்தகைய பற்றுதல் கொண்டவர் எவ்வாறு துறவியாக இருக்க முடியும்?''

**உலகப்பற்று**

சந்நியாசி அவள் கூறுவதைக் கேட்டார். அவள் நீராடித்திரும்பி வந்து கொண்டிருந்தாள். அப்போது சந்நி யாசி கமண்டலத்தைத் தூர எறிந்தார். அவள், 'ஐயோ, சந்நியாசிக்கு உடைமைப்பற்றுடன் கூட, தன்னுணர்வும் (அகங்காரம்) இருக்கிறதே?' என்றாள். எல்லாருக்கும் தான் துறவி என்பதை வெளிக்காட்ட, அவர் தன் கமண்டலத்தை தூர எறிந்தார். இது அகங்காரமே. இத்தகைய உலகப்பற்று இருந்தால் சாதனைகள் என்ன புரிந்து என்ன பயன்?

பிறகு உபயபாரதி துறவியிடம் கூறினாள்: ''அனைத்தை யும் துறந்த பின்னும் ஏன் அகங்காரமும், உடைமைப்பற்றும் கொண்டிருக்கிறீர்கள்?'' அத்துறவி அவள் காலில் வீழ்ந்து தனது அகங்காரத்தையும் உடைமைப்பற்றையும் விடுவதாக வாக்களித்தார்.

ஏதோ தியாகம் செய்வதாகக் கூறுகிறார்களே. எதைத் தியாகம் செய்தார்கள்? தியாகம் என்பது என்ன?

> குடும்பத்தைத் துறத்தலோ, உடைமைகளைத் துறத் தலோ, காட்டுக்குச் செல்லுதலோ தியாகமல்ல. மனதி லுள்ளதைத் துறத்தலே தியாகம். தியாகம் என்பது ஒரு

புறச்செயல் என்று பலர் நினைக்கிறார்கள். தியாகம் அதுவல்ல. கெட்ட குணங்களைத் தியாகம் செய்ய வேண்டும். கெட்ட உணர்ச்சிகளை (பாவனைகளை)த் தியாகம் செய்ய வேண்டும். அகங்காரத்தை (நான் என்பது) தியாகம் செய்ய வேண்டும். இவ்வாறு தியாகம் செய்ய வேண்டும்.

**எளிது**

குடும்பத்தை விட்டு ஓடுதல் மிகவும் எளிது. இது அவ்வளவு கடினமல்ல. தவறான வழியில் இட்டுச்செல்லும் கெட்ட குணங்கள் உள்ளன. அவற்றைத் தியாகம் செய்ய வேண்டும். அவையே ராக, துவேஷம் (விருப்பு, வெறுப்பு).

நவக்கிரகங்களைக் காண்கிறோம். அவை நம்மை வருத்துகின்றன என்று கூறுகின்றார்கள். அது சரியல்ல. நம்மை வருத்துவது ராகம், துவேஷம் (விருப்பு, வெறுப்பு) என்ற இரு கிரகங்களே. இவை இரண்டும் உம்மை அளவற்ற துன்பத்துக்கு ஆளாக்குகின்றன. இவை இரண்டை விட்டு விலகி ஓடினால் போதும். உமக்கு அமைதிகிட்டும்.

இத்தகைய சாந்திக்காக (அமைதிக்காக) தனிப்பட்ட முயற்சி எதுவும் தேவையில்லை. நமது கடமைகளையும், பொறுப்புகளையும், ஒழுங்காக நிறைவேற்றுவோம். நீ ஒரு கிரஹஸ்தன், கிரஹஸ்தனின் கடமையை ஒழுங்காகச் செய். நீ ஒரு பிரம்மசாரி. பிரம்மசாரியின் கடமையை ஒழுங்காகச் செய். இவ்வாறு ஒவ்வொருவரும் தமது ஆசிரமத்துக்குரிய (வாழ்க்கை நிலைக்குரிய) கடமைகளை ஒழுங்காக நிறை வேற்றி வந்தால், வாழ்க்கை புனிதமடையும். ஆனால் இக்காலத்தில் நிலை வேறாக இருக்கிறது.

நல்ல விஷயங்களையும், புனிதமான விஷயங்களையும் பற்றிக்கூறும்போது, கேட்பார் யாருமில்லை. வீணான பயனற்ற பேச்சினை மக்கள் கேட்க விரும்புகிறார்கள். கெட்டவற்றைக் கேட்கத்தயாராக இருந்து கொண்டு, புனிதமானவற்றைக் கேட்கத் தயாராக இல்லையென்றால் நல்ல பயனை எவ்வாறு எதிர்பார்க்க முடியும்? சமுதாயத்தின் வழி இவ்வாறிருக்கிறது.

"நல்லதைப் பார்க்க விரும்புவதில்லை. கெட்டதைப் பார்க்க விரும்புகிறார்கள். நல்லதைக் கேட்க மனதே இல்லை. கெட்டதில் மனம் மூழ்கியிருக்க விரும்புகிறார்கள். நல்ல எண்ணங்களை எண்ணுவதே இல்லை. கெட்ட எண்ணங்களை வரவேற்கத் தேவையில்லை. அவையே வந்து உள்ளே செல்கின்றன. காரணம் என்ன? நமது பழக்கங்களே இதற்குக் காரணம்.

ச்ரேயோஹி ஞானம் அப்யாஸாத்; த்யானாத் ஞானம் விசிஷ்யதே
த்யானாத் கர்ம பல த்யாக:த்யாகாத் சாந்தி ரனந்தரம்.

நல்ல பழக்கங்களை வளர்த்துக்கொள்ள வேண்டும்.

### தத்துவம்

இருப்பது ஒன்றே. அதுவே பல வகைகளாகத் தோன்றுகிறது. மலர்கள் பல இருக்கின்றன. அவற்றினூடே இருப்பது ஒரே சரடுதான். இன்று அது சரடு. நேற்றும் அது சரடுதான். நாளையும் அது சரடுதான். ஆனால் மலர்கள் நேற்று மொட்டாக இன்று மலராக இருந்து, நாளை வாடி விடுகின்றன. வாழ்க்கை ஒரு மொட்டு. வயது ஏற ஏற, மலர்ந்து வாடி விடுகிறாய். ஆனால் வாழ்க்கைத் தத்துவம்

என்பது சரடு. அது முக்காலத்திலும் மாறாதது. அதுவே பிரம்மசூத்ரம். (பிரம்மம் என்ற சரடு). சரடு, மனித சமுதாயம் ஜீவராசிகள் ஆகிய அனைத்து மலர்களையும் ஒன்று சேர்க்கிறது.

மாறுகின்றவற்றைப்பற்றி கவலைப்பட வேண்டிய தேவையில்லை. மாறாத ஒன்றை அடைவதற்கு நாம் முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும். மனம், புத்தி இவற்றை நேரான வழியில் செலுத்த வேண்டும்.

## புத்தி

இங்குள்ள டம்ளரில் தண்ணீர் இருக்கிறது. தண்ணீருக்க டியில் சர்க்கரை இருக்கிறது. அவ்வாறே நீரைப்பருகினால், அதற்குச் சுவை இராது. கரண்டியைக் கொண்டு சர்க்கரையை யும் நீரையும் கலக்கினால் சர்க்கரை நீரின் எல்லாவிடங்களி லும் சேர்கிறது. அதே போல இதயம் என்ற டம்ளரில், தெய்வத்துவம் என்ற சர்க்கரை அடித்தளத்தில் உள்ளது. உலகியல் ஆசைகள் என்ற தண்ணீருக்கு தனியான சுவை ஏதும் இல்லை. புத்தி என்ற கரண்டியைக் கொண்டு கடவுட்சிந்தனையால் கலக்கினால், சர்க்கரை என்ற தெ ய்வத்துவம் எல்லாவற்றிலும் கலந்திருக்கும். இதுவே சாதனை. இதற்கு வேறெங்கும் செல்ல வேண்டாம். இதயம் என்ற டம்ளர் உங்களிடமே இருக்கிறது. தெய்வத்துவம் என்ற சர்க்கரையும் உங்களுக்குள்ளேயே இருக்கிறது. புத்தி என்ற கரண்டியும் உங்களிடம் இருக்கிறது. ஏன் தேட வேண்டும்? எங்கே தேட வேண்டும்? எங்கே செல்ல வேண்டும்? இத்தகைய முயற்சிகளெல்லாம் வெறும் அறியாமையே. எங்கே தேட விரும்புகிறீர்கள்? தஞ்சாவூர் அரசர் தியாகராஜரை அழைத்து ஒரு சங்கீதக் கச்சேரி ஏற்பாடு செய்தார். ''எந்தரோ மஹானுபாவுலு'' இங்குள்ள பற்பல

சான்றோர்களுக்கு வணக்கத்தைத் தெரிவிக்கிறேன் என்று பாடினார். அவரது இசையால் அனைவரையும் பரவசத்தில் ஆழ்த்தினார். தஞ்சாவூர் அரசர், பணத்தை வெகுமதியாக அளிக்க முன்வந்தார். ''நிதிசாலசுகமா? ஈஸ்வர சந்நிதி சால சுகமா'' - மனமே; இந்தச் செல்வம் மகிழ்ச்சியை அளிக்கிறதா என்று தன்னையே கேட்டுக்கொண்டார் தியாக ராஜர்.

## நற்குணம்

தஞ்சாவூர் அரசர் அவரை வீட்டுக்கு பல்லக்கில் அனுப்பினார். திருடர்கள், தியாகராஜர் பல்லக்கில் செல்வ தைக் கண்டனர். அவரிடம் பணம் இருக்கும் என்று அவர்கள் நினைத்தனர். பல்லக்கு தூக்கிகள் தியாகராஜரிடம் ''ஸ்வாமி, திருடர்கள் நம்மைப்பின் தொடர்கிறார்கள். நம்மை எந்த சமயத்திலும் திருடலாம்'' என்று கூறினார். ''நான் பயப்படத்தேவையில்லை. பணமுள்ளவன் நடுங்க வேண்டும். குணமுள்ளவனுக்கு பயமேது? நற்குணம் உண்டே தவிர என்னிடம் பணம் இல்லை!'' என்றார். சிறிது நேரங்கழித்து திருடர்கள் ஓடிவந்து தியாகராஜர் காலில் வீழ்ந்தனர். நீங்கள் எங்களைக் காப்பாற்றுங்கள் என்று வேண்டினர். ''எதற்குக் காப்பாற்ற வேண்டும்? உங்களுக்கு என்ன ஆபத்து நேரிட்டது?'' என்று தியாகராஜர் கேட்டார். இருவர் எங்களைத் தொடர்கிறார்கள் என்றார்கள். தியாகராஜர் இராமனைத் தேடியலைந்தார். திருடர்கள் கூறியதிலிருந்து இராம லட்சுமணர் தன்னைக் காப்பாற்றி யதை உணர்ந்தார். இறைவன் உங்களைச் சுற்றிலும், மேலும், கீழும், பக்கத்திலும் இருந்து உங்களை எப்போதும் காப்பாற்றுவார். ''ராம நன்னுப்ரோவரா...'' என்று பாடினார் தியாகராஜர். ''ஓ ராமா, என்னைக் காப்பாற்று, காப்பாற்று'' என்று வேண்டினார். சாதகன் இறைவனை உணரும்வரை

தேடிக்கொண்டே இருப்பான். இறைவன் மேலும், கீழும், உள்ளும், வெளியிலும், பக்கத்திலும், சுற்றிலும் இருப்பதை அறிந்துணர்ந்த பின், சாதனை வேறு எதுவும் அவனுக்குத் தேவையில்லை. நீங்கள் இத்தகைய ஆன்மீகப்பயிற்சியை மேற்கொள்ள வேண்டும். நீயே கடவுள்.

## இறைவன்

உன் இதயத்தில் இறைவன் குடி கொண்டிருக்கிறார். 'தேஹோ தேவாலய ப்ரோக்தோ ஜீவோதேவ ஸநாதன:' உடலே கோயில். இதயமே, இறைவன் இருப்பிடம். உன்னிடம் தெய்வத்துவம் இருக்கிறது. இந்த உண்மையை ஒவ்வொருவரும் புரிந்து கொள்ள வேண்டும்.

"கேலி செய்தாலோ, குற்றஞ்சாட்டினாலோ இவ்வுலகிலிருந்து உன்னால் தப்பஇயலாது. பிறர் என்று நீ நினைப்பவர் பிறரல்லர். அவர்கள் இறைவனே. யாரையும் குறை கூறாதீர்கள். யாரையும் அவமானப்படுத்தலாகாது.

## தெய்வத்துவம்

இறைவன் எல்லோரிடமும் இருக்கின்றார். இத்தகைய தெய்வத்துவத்தை உணர்ந்தபின், எதற்காகக் கவலைப்பட வேண்டும். யாரை நீங்கள் சந்தித்தாலும், நேசித்து சேவை செய்யுங்கள். ஒரு சிறிய உதாரணம்.

ஒரு சிறிய பையன் தன் வாக்குறுதியைக் காப்பாற்றினான். முதலில் பேசிய சிறுவன், சிம்லாவிலிருந்து வந்தவன். 10 ஆண்டுகளுக்கு முன்னர் அவன் வயதை நீங்கள் யூகிக்கலாம். அங்குள்ள இன்னொரு பையனும், இங்கு பேசிய பையனும் சகோதரர்கள். இருவரையும்

இமாசலப் பிரதேசத்திலிருந்து அவர்கள் தாய் கூட்டிக் கொண்டு வந்தாள். பிருந்தாவனத்துக்கு அவர்களைக் கூட்டி வந்தாள். ஸ்வாமி இருவரையும் அழைத்தார். ஸ்வாமி தாயிடம் கூறினார். ''இவர்கள் என்னுடைய குழந்தைகள். அவர்களைப்பற்றி கவலைப்படாதே. அவர்களைப்பற்றி நினைக்கவே வேண்டாம்''. அவள் கூறினாள் ''சாயி மாதா, உங்களுக்கு அவர்களை அர்ப்பணிக்கிறேன்''. ஸ்வாமியிடம் அவர்களை ஒப்படைத்து விட்டு அவள் காலமானாள். ஸ்வாமி இருவரையுமே வளர்த்தார். குழந்தைகள் கூறினர். ''எங்கள் தாயார் சாயிதான். அந்தத் தாயல்ல. சாயிதான் எங்கள் தாயார்'' தந்தையும், ஸ்வாமியிடம் தாய் போல வாக்குறுதியளித்தார். அன்றிலிருந்து குழந்தைகள் ஒரு சொட்டுக் கண்ணீர் கூட விடவில்லை. அந்த பிஞ்சு உள்ளங்களுக்கு, கொடுத்த வாக்குறுதியின் ஆற்றல் தெரியும். ஒருமுறை வாக்களித்தபின் அதன்படி நடந்தால், நீ துன்புறு தல் இல்லை. அதுவே சரணாகதி.

தாய் காலமாகி விட்டாள். தந்தை வருவதில்லை. ஸ்வாமி கவனித்துக் கொள்வதால் தந்தை விலகிவிட்டார். ஸ்வாமி காலையும் மாலையும் அவர்களுடன் பேசி அவர்கள் சேம நலனை விசாரிப்பார். அந்த இளம் உள்ளங்களில் அத்தகைய அழுத்தமான தீவிர நம்பிக்கை இருந்தது. அந்தச் சிறுவன் நம்பிக்கையைப்பற்றி மிகத் தெளிவாகப் பேசினான். அவனது நம்பிக்கை முழுமையா னது. அவன் தேக மாதாவிடமிருந்து பிரிந்தது, அவனை பாதிக்கவில்லை.

ஒருநாள் அவனுக்குத்தன் தாயின் நினைவு வந்தது. வார்டன் ''ஸ்வாமி, இவன் சாப்பிடவில்லை. அழுது கொண்டிருக்கிறான்'' என்றார். அப்போது அவன் முதலாம் வகுப்பு மாணவன். வயது 5. ஸ்வாமி அவனை பேட்டி அறைக்கு அழைத்துச்சென்று, நயமாகப் பேசி, அவனை

மகிழ்ச்சியுறச் செய்து அவனுக்கு மோதிரம் வரவழைத்துக் கொடுத்தார். அன்றிலிருந்து, பார்க்கும்போதெல்லாம் அவன் சிரித்துக்கொண்டே இருக்கிறான். (பலத்த கரவொலி) குழந்தைகள் அத்தகைய இளகிய மனம் படைத்தவர்கள்.

**தைரியம்**

பெரியவர்கள் இத்தகைய புனிதமான அன்பைப் புரிந்து கொள்வதில்லை. அன்பு அத்தகைய அளவுக்குப் புனிதமானது. அது அத்தகைய வீர்யத்தையும் தைரியத்தையும் கொடுக்கிறது. வேறு எங்காவது இருந்தால் அவர்கள் வாழ்க்கையை இவ்வாறு நடத்த முடியுமா? ஸ்வாமியுடன் இருந்ததால் அவர்கள் இவ்வாறு இருக்க முடிந்தது. ஸ்வாமி அவர்களை ஆயிரம் அன்னையரின் அன்புடன் பராமரித்து வருகிறார் (கரவொலி).

இந்த ஸத்யஸ்ய ஸத்யம் (உண்மையுடன் அடங்கிய பேருண்மை) அனைத்தையும் துறந்த பெரும் துறவிகளாலும், தியாகிகளாலும் கூட புரிந்து கொள்ளப்படவில்லை. தியானம் செய்கிறார்கள், ஜபம் செய்கிறார்கள். என்ன பயன்? அகங்காரமும் (நான் என்பது) உடைமைப்பற்றும் (எனது என்பது) எஞ்சியிருக்கும்வரை, அவையெல்லாம் பயனற்று விடுகின்றன.

வாழ்க்கையில் ஒன்றை மட்டும் ஆதாரமாகக் கொண்டால் போதும், கவலையற்று வாழலாம். பிரேமை என்பதே அந்த ஒன்று. இத்தகைய பிரேமை இருந்தால், அனைத்தும் உங்கள் கைவரப்பெறும். உடல்வலிமை, புத்திக்கூர்மை, மனோபலம், (புஜபலம், புத்தி பலம்,) அனைத்தையும் நீங்கள் பெறுவீர்கள். உங்களுக்கு எந்த ஆற்றல் தேவையோ அந்த ஆற்றலைப் பெறுவீர்கள். தங்கத்தைக் கையில் கொண்டால் வேண்டிய நகைகள் அதன்மூலம் பெறலாம்.

இறைவனின் அருளாசி பெற்றவர், எதனையும் சாதிக்க இயலும். கடவுளின் அன்பை அறிந்துணர்ந்தோர் எதையும் சாதிக்க முடியும். ஆகவே ஒவ்வொருவரும் தெய்வத்து வத்தை உணர்ந்து அதன் வழியில் நடந்துகொள்ள வேண் டும். இவ்வுலகில் எத்தகைய ஆன்மீக சாதனையும் புரியத்தே வையில்லை. நம்மிடமுள்ள கெட்ட குணங்களைக் கைவி டல் வேண்டும். அது போதும். கடவுள் ஒவ்வொருவரிட மும் இருக்கிறார் என்ற ஆழ்ந்த நம்பிக்கையை வளர்த்துக் கொள்ள வேண்டும். மாணவர்கள் ஏகாத்ம பாவனையை (ஆத்மா ஒன்றே எல்லாருள்ளும் இருப்பது) வளர்த்துக் கொள்ள வேண்டும். அத்தகைய உள்ளுணர்வுடன் எதையும் ஏற்றுக்கொள்ளலாம். பொருட்கள், சுக சௌக்கியங்கள், வாகனங்கள் அனைத்துக்கும் தேவை உள்ளது.

## பொறுப்புக்கள்

எந்த விஷயமாயினும் (பெரியதாயினும் சிறியதாயி னும்) ஸ்வாமி தானே கவனித்துக் கொள்கிறார். உங்களுக் குத் தெரியாது. எந்த சிறுவிஷயமாயினும் ஸ்வாமி வார் டனை அழைத்துப் பேசுகிறார். எத்தனையோ பொறுப்புகள் தனக்கு இருந்தாலும், ஸ்வாமி ஒவ்வொரு மாணவனையும் கவனித்துக் கொள்கிறார். பரந்த இதயம் இல்லாதவர்கள், ஸ்வாமி, என்னைக் கவனிக்கவில்லையே என்று கவலைப்ப டுகிறார்கள். உண்மையில் பகவான் ஒவ்வொருவரையும் கவனிக்கிறார்.

இப்போது மாணவன் பேசினான் ''நான் ஒரு தாயை இழந்தேன். பதிலாக ஆயிரம் அன்னையரைப் பெற்றேன்''. தைரியமில்லாது யார் இவ்வாறு பறைசாற்ற முடியும்? அவன் பேச்சைத் தொடங்கும்போது, ''சாயி மாதா'' என்று தொடங்கினான். இத்தகைய நம்பிக்கையே அவர்களைக்

காப்பாற்றி, அவர்களுக்கு எல்லா வெற்றிகளையும் அளிக்கிறது.

அன்புதான் வெற்றியை ஆகர்ஷிக்கிறது. பிரேமையை வளர்த்துக்கொள்ளுங்கள். பிரேமையை வளர்த்துக்கொண்டால் ஒவ்வொன்றிலும் வெற்றி பெறலாம்.

### ஒழுக்கம்

மற்றொரு விஷயம். ஒழுக்கத்தைக் (Discipline) கடைப்பிடிக்க வேண்டும். ஸ்வாமி அன்று, மிருதுவாகவும் இனிமையாகவும் பேசுங்கள். கடுமையான சொற்களைப் பயன்படுத்தாதீர்கள் என்று கூறினேன். கடந்த இரண்டு மாதங்களில் பிரசாந்தி நிலையத்தில் கட்டுப்பாடு (Discipline) குலைந்து விட்டது. பஜனை முடிந்தபின்னர், எழுந்திருந்து செல்பவர்கள் அதிக சத்தம் செய்கிறார்கள். ஸ்வாமி சிலரைப் பேட்டிக்கு அழைத்ததும் அவர்கள் எழுந்திருக்கும்போது, வராண்டா இன்னும் பல இடங்களில் சந்தைக்கடையில் இருப்பது போல சத்தம் எழுகிறது. இந்த இடத்தை விட்டு எழுந்து செல்லும்போது, இங்கு கேட்டவற்றை நினைத்துக் கொண்டே செல்ல வேண்டும். வெறும் பேச்சு எங்கும் ஒலிக்கிறது. பேச்சு...பேச்சு...பேச்சு... எங்கும் பேச்சுதான். பிரசாந்தி நிலையம் மட்டுமல்ல, எங்கு சென்றாலும், கடைத்தெருவோ எங்கானாலும் அதிகமாகப் பேசாதீர்கள்.

ஒழுக்கம், கட்டுப்பாடு (Discipline) நமது நிழல் போன்றது. எங்கு சென்றாலும் உங்கள் நிழல் உங்களைப் பின்தொடர்கிறது. கட்டுப்பாட்டைத்தான் இறைவன் உங்களிடம் எதிர்பார்க்கிறார். பஜனையிலிருந்து வெளியேறும் போது நிசப்தமாக இருக்க வேண்டும். இங்கு பிரசாந்திநிலையத்திலும் வேறிடத்திலும் பேசாதிருக்க வேண்டும். பேசுவதால் ஒரு பயனுமில்லை. வீட்டில் குடும்ப விவகாரங்கள்

பேசலாம். அதிகம் பேசுவதால், தெய்வீக ஆற்றல் குறைகிறது. அதிகமாகப் பேசுவதால், நீங்கள் கேட்டதனைத்தும் மனதிலிருந்து சிதறிவிடுகின்றன. அதிகமாகப் பேசுவதால் நரம்புத்தளர்ச்சியும் ஏற்படுகிறது. செவிமடுத்து கேட்டது மறந்துவிடும். ஆகவே மௌனம் காத்தல் வேண்டும். ஆடவரும் சரி, பெண்டிரும் சரி. ஒருவருக்கொருவர் பேசலாகாது. வேண்டுமானால் வீட்டுக்குச்சென்று பேசலாம். தெருக்களிலும், மந்திரிலும் பேசலாகாது.

பெரியவர்களும் மாணவர்களுக்கு எதிரில் பேசுகிறார்கள். It is a bad ideal. இது தவறான முன்மாதிரியாகும். பெரியவர்களும் மாணவருக்கு இலட்சிய உதாரணமாக விளங்கும்படி நடந்து கொள்ள வேண்டும். மௌனம் கடைப்பிடிக்கும்போது இறைவனின் குரலைக் கேட்கிறீர்கள்.

இன்றிலிருந்து கட்டுப்பாட்டைக் கடைப்பிடியுங்கள். கட்டுப்பாட்டைக் கடைப்பிடிக்கும்போதே, கடுமையான சொற்களைக் கடைப்பிடிக்காதீர்கள். அனைவரும் பிரேம மயமாக இருக்க வேண்டும். அன்புதான் நமது வாழ்க்கை. அன்பே இறைவனாகக் காணுங்கள். அன்பை வீணாக்கினால் தெய்வத்துவம் வீணாகிறது.

ஆகவே அன்புடன் பேசி, கருணை, பொறுமையுடன் புரிந்து கொண்டு வாழ்க்கை நடத்தினால், வாழ்க்கை இன்பமுடன், செல்வதே தெரியாது செல்லும்.

—பாபா

(கோவிந்த கிருஷ்ண ஜெய் என்ற பஜனைப் பாடலுடன் பகவான் அருளுரையை நிறைவு செய்தார்).

(4.7.96)

# 8. கடவுள் பரிபூரணத்தின் வடிவம்

புலனடக்கம் இல்லாத ஆன்மீகப் பயிற்சி (சாதனை) செய்வதால் என்ன பயன்? சகிப்புத்தன்மையில்லாத யோகத் தினால் என்ன பயன்? மன்னிக்கும் சாந்தியில்லாத ஜபத்தி னால் என்ன பயன்? வறண்ட நிலத்தில் பயிரிடுவது போன்ற முயற்சியாகும்.

## முயற்சி

மாணவர்களே!

உலகில் எதைச் சாதிக்க வேண்டுமானாலும் அதற்குரிய பயிற்சியைச் செய்ய வேண்டும். எறும்புகூட நகரத்தொடங் கினால் சில மைல்கள் செல்லும். பறக்க முயற்சி செய்யாவிடில் கருடன் கூட ஈரடிகள் எடுத்துவைக்க இயலாது. எந்த மனிதனும் நல்ல எண்ணம் இல்லாது, எண்ணத்துடன் கூடிய முயற்சி இல்லாது எதையும் சாதிக்க இயலாது. மிகச்சிறுவயதிலேயே துருவன், ஸ்ரீமன் நாராயண னைக் காண ஆர்வங்கொண்டு, இடைஞ்சல்களையும் துன்பங்களையும் பொருட்படுத்தாது, ஆன்மீக சாதனை செய்து வெற்றியுங் கண்டான். சத்சங்கற்பம் (உறுதிபெற்ற நல்லெண்ணம்) அவனை துருவ நட்சத்திரமாக மாற்றும் அளவுக்கு வலிமை பெற்றதாக இருந்தது. எந்த மனிதனும் வயது, திறமை இவை பற்றி கவலைப்படாமல் முழு நம்பிக்கையுடன் ஈடுபட்டால் அச்செயலை நிறைவேற்ற முடியும்.

பல வரலாறுகளில் நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். பல சான்றோர்கள் பெரும் தவமுயற்சி செய்தும், பயனில் லாது ஏமாற்றமடைந்திருப்பதைக் கேட்டிருக்கிறோம். விசு வாமித்திரர் கடும் தவமுயற்சி செய்தும் பலமுறைகள்

தோல்வியுற நேர்ந்தது; காரணம் அவரிடம் புலனடக்கம், பொறுமை, சகிப்புத்தன்மை இவை இல்லை. ஒவ்வொரு துறையிலும் பயிற்சி தேவைப்படுகிறது.

திரும்பத் திரும்பப் பாடிப்பழகினால், இசையின் ஒரு தொனியை (TUNE) சரியாகப்பாடலாம்.
மாணவர்கள் இடைவிடாது பயிற்சி செய்வதால், பஜனைப்பாடல்களை இனிமையாகப் பாடுகிறார்கள்

## புலனடக்கம்

துர்வாசர் மிகுந்த ஆற்றல் பெற்றவர். பெரும் தபஸ்வி. பூதக்கண்ணாடி கொண்டு பார்த்தால் கூட அவரிடம் புலனடக்கம் சிறிதும் இல்லை. அவர் அளவு கடந்த சினங்கொண்டவர். அமைதியின் சுவடுகூட அவரிடம் இல்லை. துர்வாசர் எங்கும் நல்ல பெயர் பெறவில்லை. காரணம், அவரிடம் அமைதி இல்லை. பெருந்தவம் செய்து, ஆற்றல்கள் பல பெறலாம். ஆயினும் சாந்தி (அமைதி) இல்லாவிடில் அவை பயனற்றவை. அமைதியுடன் சகிப்புத் தன்மையும் தேவைப்படுகிறது.

சகிப்புத்தன்மையே (க்ஷமம்) சத்யம்; அதுவே தர்மம்; அதுவே வேதங்கள். அதுவே யாகயக்ஞங்கள். சகிப்புத்தன் மையே மகிழ்ச்சி. அதுவே சகலமும்.

சகிப்புத்தன்மை ஒவ்வொருவருக்கும் முக்கியமான கண் போன்றது. அனைத்து ஆன்மீகப்பயிற்சிகளுக்கும் பிரேமையே முக்கியப் பிராணன். பிரேமையில்லாது போயின் வாழ்க்கையே இல்லை. ஆகவே பிரேமையின் தத்துவத்தைப் புரிந்துகொண்டு நம்மை நாம் சரிசெய்து கொள்ள வேண்டும்.

### வாழ்க்கை முழுவதுமே கனவுதான்

மாணவன் கூறினான் LIFE IS LOVE. ENJOY IT. அன்பே வாழ்க்கை. உணர்ந்து அனுபவி. Life is dream Realise it. (வாழ்க்கை ஆர்வமிக்க கனவு, நிறைவேற்றிக்கொள்) கனவு என்பது என்ன? வாழ்க்கை முழுவதுமே கனவுதான். பட்டப்பகலில் பகவானின் உரையைக் கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள். இது கனவல்ல. கண்களால் காண்கிறீர்கள். காதுகளால் கேட்கிறீர்கள். மனதால் சிந்திக்கிறீர்கள். இதயம் இளகுகின்றது. இவையெல்லாம் பிரத்தியட்ச பிரமாணம் (ஸ்தூல சாட்சி) நீங்கள் நினைக்கிறீர்கள், எந்த அளவுக்கு இவை பிரத்யட்சப் பிரமாணம்? பகலுணவு உண்டபிறகு உறங்குகிறீர்கள். அப்போது பிரத்யட்ச பிரமாணம் மறைகிறது. கனவில் நீங்கள் அநேகவிதமான ஆனந்தத்தையும் துக்கத்தையும், அனுபவிக்கிறீர்கள். அத்தகைய அனுபவங்கள் அனைத்தும் கனவு நிலை இருக்கும்வரையில் நீடிக்கின்றன. கண்விழித்ததும் அவையனைத்தும் பொய்யாகின்றன.

கனவில் வெளிச்சம் இருப்பதில்லை. வெளிச்சத்தின் போது கனவு இருப்பதில்லை.

இரவுத்தூக்கத்தில் பகல் அனுபவங்கள் இருப்பதில்லை. இரவுத்தூக்கக்கனவில், பகற்கனவு அனுபவங்கள் இல்லை. பகற்கனவு அனுபவத்தில் இரவுத்தூக்க அனுபவம் இல்லை. பகற்கனவு அனுபவத்திலும், இரவுத்தூக்க அனுபவத்திலும் நீ இருக்கிறாய். ஆகவே 'நீ' எங்குமுள்ளவன்.

பகலிலும், இரவிலும் கனவுகள் இருக்கின்றன. ஆகவே Life is a dream Realise it. அதுவே Religion (சமயம், மதம்) To realise is Religion. அறிந்துணரும் அனுபவமே மதம். உண்மையை அறிந்துணர்வதே மதம். இவையனைத்துக்கும் அன்பே, தலையாயது, பிரதானம்.

## முனிவர்கள்

அடர்ந்த காடுகளில், மிருகங்களுக்கிடையில் முனிவர் கள் தவம் செய்து காலங்கழித்தனர். குரூரமான விலங்குகள் காடுகளில் அங்குமிங்கும் உலவின. முனிவர்களிடம் கைத் துப்பாக்கிகளோ, நீண்ட துப்பாக்கிகளோ, கத்திகளோ, வாட்களோ இல்லை. ஆயினும் முனிவர்களும் விலங்குக ளும் ஒத்திசைந்து அக்காட்டில் வாழ்ந்தனர். ஏன் விலங்குகள் முனிவர்களைக் கண்டுஅஞ்சவில்லை? ஏன் முனிவர்கள் விலங்குகளைக் கண்டு நடுங்கவில்லை? முனிவர்கள் பரிபூரண அன்பின் வடிவங்கள். அந்த அன்பின் அதிர்வுகள் விலங்குகளின் உள்ளே சென்று அவர்களை சாந்தமாக்கின. சேர்க்கை எவ்வாறோ அவ்வாறே பயனும் அமையும். Tell me your company I shall tell you what you are. உனது சேர்க்கை என்ன என்று கூறு. நீ யார் என்று நான் சொல்கிறேன். நல்லவர்களுடன் சேர்ந்தால், நல்ல குணங்கள் அமையும்.

அனைத்திலும் பிரேமையே முதலிடம் வகிப்பது. அன்பே கடவுள். அன்பில் தோய்ந்து வாழ்.

## கடவுள் பரிபூரணத்தின் வடிவம்

அந்தோனி, என்றொரு வயலின் விற்பன்னர் இருந்தார். அவர் உருவாக்கிய வயலின்கள் மிகப்பேர் பெற்றவை. ஒரு வயலின் உருவாக்க அவருக்கு ஓராண்டு காலம் பிடித்தது. அவரது நண்பர்கள் 'அந்தோனி', ஒரு வயலின் செய்ய ஓராண்டு காலம் ஆகிறதே. உனக்கு இதனால் என்ன இலாபம்?' என்று கேட்டார்கள். உன் குடும்பத்தை நீ எவ்வாறு பராமரிக்க இயலும்? எவ்வாறு உன்னால் அமைதியுடன் வாழமுடியம்?

அந்தோனி கூறினார், ''நண்பர்களே, கடவுள் முழுமை யானவர், பரிபூரணமானவர். ஆகவே மனிதன் செய்வது எதுவாயினும் பரிபூரணமாக இருத்தல் வேண்டும். பரிபூர ணத்தின் வடிவமான கடவுள் திருப்தியடைவார். குடும்பத் தைப் பராமரிக்க நான் வயலின் செய்யவில்லை. என்னு டைய மகிழ்ச்சிக்காகவும் இந்த வயலினைச் செய்யவில்லை. பரிபூரணத்தின் வடிவான இறைவனைத் திருப்தி செய்விக் கவே நான் வயலின் செய்கிறேன்.

ஆகவே மனிதன் எதைச்செய்தாலும் இறைவனைத் திருப்தி செய்விக்கவே செயல்புரிய வேண்டும். ஆகவே,

'ஸர்வகர்ம பகவத் ப்ரீத்யார்த்தம்'–

(அனைத்து செயல்களும் கடவுளின் ப்ரீதிக்காகவே) என்று கூறப்படுகிறது.

எந்த ஆன்மீக முயற்சி செய்தாலும், அமைதியில்லாது அதைச்செய்தால் அதற்கு ஒரு பலனும் இராது. பொறுமை இல்லாது யோகத்தை மேற்கொண்டால், அது வெறும் உடலளவில் பயிற்சியாக அமையுமே தவிர, ஆத்ம சாந்தி (மனநிறைவு) இராது. மனநிறைவும் சாந்தியும் இல்லாது ஜபம் செய்தாலும் அது வியர்த்தமாகவே (பயனற்றதாகவே) இருக்கும்.

## உட்சிறப்பு

செய்யும் ஒவ்வொரு செயலையும் இறைவனுக்கு அர்ப்பிக்க வேண்டும். செய்யும் ஒவ்வொரு செயலின் அளவையும் கணக்கையும் இறைவன் கவனிப்பதில்லை. அதன் உட்சிறப்பைத்தான் கவனிக்கிறான்.

'ஒரு தேக்கரண்டியளவு பசும்பால், ஒரு காலன் அளவு கழுதைப்பாலைவிட எவ்வளவோ மேல்'. ஜபதியானம் ஒரு

மணிநேரம் செய்கிறேன் என்று கூறுகிறாய். ஆனால் மனதைக் கட்டுப்படுத்த உன்னால் முடியவில்லை. இவ்வாறு செய்யும் ஜபம் பயனற்றது. ஒவ்வொரு செயலும் இறைவனுக்கான பணி என்று ஏற்றுச்செய். அதுதான் நேரான, சரியான, துல்லியமான வழி. எளிய நேரான வழி இருக்க, கடினமான வழியைப் பின்பற்றுவானேன்? வீட்டு வேலையை சிரத்தையுடன் இறைவன் பணியென்று செய். இறைவன் உன் இதயத்தில் இருக்கிறார். உடலைக் கொண்டு செய்யும் ஒவ்வொரு பணியும் இறைவன் செய்கிறார் என்று நினைத்துச் செய். இறைவன் இருப்பதன் காரணமாக மூச்சுவிடுகிறேன். தெய்வசக்தி மூலந்தான் இந்த ஒலிபெருக்கி வேலை செய்கிறது.

### புலன்கள்

நமது புலன்கள் அனைத்தும் தெய்வீகமானவை. புலன்களால் செய்யும் அனைத்தையும், இறைவனுக்குச் சம்மதமானவையே என்பதைக் கருதிச்செய். நீ செய்யும் செயல்கள் அனைத்தும் உனது திருப்திக்காகச் செய்யப்படுகின்றன. நீ யார்? நீ உடலா. இல்லை. நீதான் உடல் என்றால், நீ ஏன் உனது உடல் என்று கூறுகிறாய்? நீ மனம் என்றால் ஏன் எனது மனம் என்று கூறிக்கொள்கிறாய்? நீ உடலல்ல, நீ மனமல்ல. நீதான் எசமானன். மனம், உடல், புலன்கள் இவையெல்லாம் கருவிகள். தெய்வீக விழிப்புணர்வு (Awareness) தெய்வீக சக்தி இவற்றின்மூலம் இயங்குகிறது. தெய்வீக விழிப்புணர்வு, Conscience எல்லாரிடமும் இருக்கிறது. Conscience, உலகிலுள்ள ஜீவராசிகள் அனைத்திலும் இருக்கிறது. ஆகவே ஒவ்வொருவரிடமும் Conscience is God (ஜீவசாட்சியே, கடவுள்) Conscience இல்லாது ஒரு ஜீவராசிகூட உயிர்வாழ இயலாது.

''ஈஸாவாஸ்யம் இதம் ஜகத் - பிரபஞ்சம் முழுவதும் இறைவன்'', ''ஈஸ்வரஸ் ஸர்வ பூதானாம்'' - இறைவன் எல்லாவற்றிலும் இருக்கிறார்.

கடவுள் எங்கிருக்கிறார்? கடவுள் எல்லாவற்றிலும் இருக்கிறார். அவரை ஏன் காண இயலவில்லை.

**தூய்மை**

உன்னிடம் ஜபமாலை இருக்கிறது. துளசி மாலை இருக்கிறது. சில ருத்ராட்சத்தால் ஆனவை. சில Crystal மணிகளால் ஆனவை. எதுவாயினும் சரி, ருத்ராட்ச மாலையில் நூலைக் காண்பதில்லை. துளசிமாலையில் காண்பதில்லை. ஸ்படிக மாலையில் காண்கிறாய். அனைத் தும் பெயர், உருவம் இவற்றில் ஒன்றே. ஆனால் ஸ்படிக் மாலையில் மட்டும், நூலைக் காணலாம். அதுபோல யாருக்கு இதயம் தூய்மையானதோ அவர்கள் பிரம்மன் என்ற ஆதார நூலைக் காண்பார்கள். ப்ரம்மன் என்ற சூத்ரம் (நூல்) எல்லாரிடமும் உள்ளது. அதைக் காண்பதற்கு இதயம், ஸ்படிகம் போன்று, பரிசுத்தமாகவும் தெளிவாக வும் இருக்க வேண்டும்.

இக்கால மனிதன் ஜபம், தியானம் போன்ற பலவித மான ஆன்மீக முயற்சிகளை மேற்கொள்கிறான். இவற்றால் என்ன பயன்? அவன் கெட்ட குணங்கள், கெட்ட எண்ணங்கள், கெட்ட பழக்கங்கள் இவற்றிலிருந்து விடுபட வேண்டும்.

வாழ்க்கையின் முக்கிய தத்துவங்கள் இராமாயணம், பாரதம், பாகவதம் இவற்றில் கூறப்படுகின்றன. இம்மூன் றும் மூன்று கெட்ட குணங்களை - காமம், குரோதம், லோபம் இவற்றைத் தெரிவிக்கின்றன. பவித்ரமான இராமா யணம், காமத்தின் சின்னமா என்று அதிசயிக்கலாம்.

இராமாயணத்துக்கு காமம்தான் மூல காரணம். இராமாய ணம் முழுவதும் இராவணனின் கெட்ட குணத்தைக் கூறுகிறது. அதுவே காமம்.

### விவேகம்

பாகவதம் குரோதத்தை அடிப்படையாகக் கொண்டது. இரண்யகசிபு இறைவனிடம் குரோதம் கொண்டான். அவனுக்கு விவேகம் சிறிதும் இல்லை. கடவுளிடம் குரோதம் மிகுந்தது. அவன் கோபம் காரணமற்றது. பாகவதம் இரண்யகசிபுவின் கதை. பாரதம், துரியோதனன் பாண்டவர்களுடன் ஒரு சிறிது நிலங்கூட பகிர்ந்துகொள்ள விரும்பவில்லை. இதுவே லோபம் (பேராசை, கருமித்த னம்).

ஆகவே காமம், குரோதம், லோபம் இவையே இராமாயணம், பாகவதம், பாரதம் இவற்றிற்கு மூல காரணம். முடிவில் அவர்களுக்கு என்ன நேர்ந்தது? இராவணனுக்கு என்ன நேர்ந்தது? அனைத்து ஆற்றலும் பெற்ற இராவணன், காமத்தின் விளைவாக அரசு, உறவினர், மற்ற அனைத்து உடைமைகளையும் இழந்தான்.

இரண்யகசிபு, இறைவனிடம் கோபங்கொண்டவன். சொந்த மகனிடம் தயை, தாட்சண்யம் சிறிதுமில்லாமல், கருணை சிறிதுமில்லாமல், நடந்து கொண்டான். முடிவில் என்ன நடந்தது? கெட்ட பெயரெடுத்து, அபகீர்த்தியுடன் தன்னையே அழித்துக்கொண்டான். இரண்யகசிபு பஞ்ச பூதங்களை தன் கைவசம் கொண்டவன். அத்தனை வல்லமை பெற்றும் என்ன பயன்? வீணாகத் தன் வாழ்வை முடித்துக்கொண்டான்.

லோபம்: துரியோதனனுக்கு அளவுக்கு மிஞ்சிய ஆசை. பேராசை காரணமாக அவன் சகோதாரர்கள் அனைவரையும்

இழந்தான். பாண்டவர்களிடமும், கிருஷ்ணனிடமும் கூட அவன் வெறுப்புக் கொண்டான். கிருஷ்ணனிடம் நம்பிக்கை கொண்டவன் போல நடித்தானே தவிர, உண்மையில் அவனுக்கு நம்பிக்கை இல்லை. கிருஷ்ணன் பாண்டவர்கள் பக்கம் இருந்ததால், துரியோதனன் அந்த உறவை விரும்ப வில்லை.

இவர்கள் மூவரும் இறைவனிடம் வெறுப்புக்கொண்ட வர். ஆகவே ஆசை, வெகுளி, பேராசை இவை இறைவ னுக்கு விரோதமானவை. இவை ஆன்மீகத்துக்கு இடைஞ்ச லானவை. முக்திக்கு (மோட்சத்துக்கு) விரோதிகள். முக்தி என்பது என்ன? முக்திஎன்பது கைலாசமா, வைகுண்டமா, சுவர்க்கமா? மோக்ஷம் (முக்தி) என்பது மோக+க்ஷயா - மோகம் இல்லாதது, பற்றற்ற நிலை. பற்றற்ற நிலையை நாம் வளர்க்கும்போது, அது நேராக மோட்சத்துக்கு (விடுதலைக்கு) இட்டுச் செல்கிறது.

**நாராயணன்**

ஒரு சமயம் நாரதர் நாராயணனிடம் இந்தக் கேள்வி யைக் கேட்டார். ''ஸ்வாமி, நான் தங்களை அவசரமாக தரிசிக்க விரும்பினால் தங்களை எங்கு காணலாம். கைலாசமா, வைகுந்தமா, சுவர்க்கமா? தங்கள் தலைமை அலுவலகம் எது?

விஷ்ணு கூறினார், ''நாரதா, விலாசத்தை எழுதிக்கொள்.

மத்பக்த: யத்ர கா யததி. தத்ர திஷ்டாமி நாரத, வைகுந்தம், கைலாசம், சுவர்க்கம் இவைகள், கிளை அலுவலகங்கள். எனது தலைமையகம் ''மத்பக்த:'' - எனது பக்தர்கள். எங்கு என்னை நினைந்திருக்கிறார்களோ, ''தத்ர திஷ்டாமி நாரத''. அங்கேதான் நிலைநிறுத்திக் கொள்கி றேன். மற்ற இடங்களில் நான் ஊர்வலம் எடுத்துச்செல்லப்ப

டும் சிலை. ''தத்ர திஷ்டாமி நாரத'' - அங்கே என்னை பிரதிஷ்டை செய்து கொள்கிறேன். ஆகவே ஒவ்வொரு இதயமும் இறைவன் இருக்கும் இடம். அனைவரும் இறைவனே. இந்த மானுட உடல் கொண்டிருப்பதால், நாம் நம்மை மனிதர் என்று நினைக்கிறோம்.

உடலுணர்வை மறந்து விடுங்கள். உண்மையை அறிந்து கொள்ளுங்கள். இறைவனை நினைந்திருங்கள். நிலையில் லாத இவ்வுலகையும், உலகியல்புகளையும் நினைந்து வாழ்க்கையைக் கடத்தாதீர்கள்.

இறைவன் அன்பின் வடிவம். அனைத்தும் அன்பேயா கும். அது வடிவமோ, குணமோ அல்ல. தூய அன்பே அது. அன்பு, அன்புதான். அதற்கு வடிவமில்லை. அதற்கு எல்லை வகுக்க இயலாது. கடலுக்கு எல்லை உண்டு. ஆகாயத்துக்கு எல்லை உண்டு. ஆனால் அன்புக்கு எல்லை இல்லை.

கர்நாடகத்தில், மல்லம்மா என்ற பக்தை இருந்தாள். 'இறைவா

ஏரிக்கு அழகு பொங்கு தாமரை
கிராமத்துக்கு அழகு வசிக்கும் வீடு.
வானத்துக்கு அழகு தண்முழு நிலவு
கடலுக்கு அழகு பொங்கும் அலைகள்
பக்தருக்கு அழகு தூய அன்பு.

அலையில்லா கடல், நிலவில்லா ஆகாயம், தாமரையில்லா ஏரி. இவை அழகை இழந்தவை, அழகற்றவை. அன்பில்லா பக்தரும் அழகற்றவர்.

பிரேமையே உண்மையான அழகு. LOVE IS GOD அன்பே இறைவன். அனைவரையும் நேசியுங்கள். அடுத்தவ

ரிடம் அன்பு இல்லையென்றால் உமது அன்பை அவருடன் பகிர்ந்து கொள்ளுங்கள்.

கருவி

அன்பு திசை காட்டும் கருவி. எங்கு வைத்தாலும் அது வடக்கு திசையே குறிக்கும். நீ என்ன செய்தாலும், என்ன நினைத்தாலும், எப்போதும் இறைவன் இருக்கும் திசை நோக்கி நடந்து செல். எவ்வாறு எத்தகைய தொழில் செய்தாலும் நீ பணம் சம்பாதிக்கிறாயோ, அது போல எத்தகைய கருமங்கள் செய்தாலும், நீ பிரேமையை சம்பாதித்துக்கொள்.

அன்பு (பிரேமை) அதிகரிப்பது, குறைவதில்லை. அது ஒரே அளவினைக்கொண்டது. கூடுவதோ குறைவதோ இல்லை.

''பூர்ணமிதம் பூர்ணமதம் பூர்ணாத் பூர்ணமுதச்யதே''. பிரேமை எப்போதும் முழுமையாக நிறைந்திருக்கிறது. முழுமையான அன்பு எங்கே இருக்கிறதோ அங்கே இறைவன் இருக்கிறார். அங்குதான் பிறக்கிறார். இறைவனிடம் செல்லும் வழி எவ்வளவு சுலபமானது என்று உங்களுக்குப் புரியவில்லை. வெண்ணெய் கடைந்து எடுப்பது கடினம். அதைவிட சுலபம் இறைவனை அடைவது. இந்த எளிய வழியை நாம் ஏன் அறிந்து கொள்ள முயலுவதில்லை. நமது பாவனையே இதற்கு மூலகாரணம். கடவுள் எங்கே இருக்கிறாரோ, அவரை அடைவது மிகக்கடினமாயிற்றே? எத்தகைய தவம் செய்ய வேண்டுமோ, எந்தவிதமாக விசாரிக்க வேண்டுமோ என்ற பாவனையே நமக்கு கஷ்டம் என்ற பிரமையை உருவாக்குகிறது. கடவுள் தனியாக ஓரிடத்தில் இல்லை. அவர் எங்கும் இருக்கிறார்.

ஸர்வத: பாணிபாதம். ஸர்வதோக்ஷி சிரோமுகம்
ஸர்வத: ச்ருதிமல்லோகே ஸர்வம் ஆவ்ருத்ய திஷ்டதி

அவர் எங்கும் இருக்கும்போது அவரை ஏன் தேடவேண்டும்? அவரைத் தேட வேண்டியதில்லை. அவரைக் காண வேண்டியதில்லை. பார்க்குமிடமெல்லாம் அவரே. கண்களால் இவ்வுலகைக் காண்கிறாய். இவ்வுலகம் இறைவனே. 'ஓ மூடனே, நீ காண்பதனைத்தும் இறைவனே'. தலைகள் அனைத்தும் இறைவடிவையே குறிக்கின்றன. கண்பார்வையைக் கொண்டு உருவம், பெயர் கொண்ட மனிதரென்று நினைக்கின்றாயே தவிர, அனைத்தும் இறைவன் என்று கொண்டால், இறைவடிவையே காண்பாய். இது திருஷ்டி தோஷமே தவிர, சிருஷ்டி தோஷமில்லை. பார்வையிலுள்ள குறைபாடேதவிர, படைப்பிலுள்ள குறைபாடல்ல. அணிந்து கொள்ளும் கண்ணாடியின் நிறத்தைப் பொருத்தது பார்வையின் நிறம். வெறுப்புடன் கண்டால், வெறுப்பைக் காண்கிறாய். அன்புடன் கண்டால் அன்பையே காண்கிறாய். ''யத் பாவம் தத் பவதி'' பாவனைத்தகுந்த பயன். உனது உணர்ச்சிகளே, உனக்குப் பிரதிபலிப்பாகக் கிடைக்கின்றன. அனைத்தும் இறைவன் வடிவங்களே. நாம் சமத்துவ பாவனையை, எல்லோரையும் சமமாக நோக்குவதையும், ஏகாத்ம பாவனையையும் (ஒருமைத்தன்மையையும்) வளர்க்க வேண்டும். அன்பின் மாபெரும் ஆற்றலுக்கு, ஹைட்ரஜன், அணுகுண்டுகளின் ஆற்றல் இணையாகா. அவ்வாற்றலால் அனைத்தையும் கடந்து செல்லலாம்.

பலர் இங்கு வந்து கூடியிருக்கிறீர்கள். இதற்கு எது காரணம்? பிரேமையே உங்கள் யாவரையும் ஸ்வாமி பக்கம் கொண்டு வந்திருக்கிறது. ஸ்வாமியிடம் நீங்கள் கொண்டுள்ள ஆழ்ந்த பிரேமையே உங்களை இங்கு கொண்டு வந்து சேர்த்திருக்கிறது. உங்களுக்கு ஏதாவது அழைப்பு

விடுக்கப்பட்டதா? இல்லையே. நாம் அனைவரும் தெய்வீ கப்பிரேமையால் பிணைக்கப்பட்டிருக்கிறோம்.

### எளியவழி

அன்பு நிறைந்து பேசுங்கள். அன்பு நிறைந்து வேலை செய்யுங்கள். அன்பு நிறைந்து சிந்தியுங்கள். ஒவ்வொரு செயலையும் அன்பு நிறைந்து செய்யுங்கள். இதைவிட எளியதான வழிவேறெதுவுமில்லை.

கையில் ஜபமாலையை உருட்டிக்கொண்டு இருப்ப வரை ஜபம் செய்கிறார்கள் என்று நினைக்கிறீர்கள். ஒரு பக்கம் ஜபமாலை மணிகள் உருளுகின்றன. மறுபக்கம் நாவிதனைப்பற்றிய நினைப்பு உருளுகிறது. ஒரு பக்கம் தியானம் செய்வார். மறுபுறம் சமையல் அறையிலிருந்து வரும் கீரையின் மணத்தை மூக்கு நுகரும். இதுவா தியானம்? இதுவா ஜபம்? இல்லை. உண்மையான ஜபம், இறைவன் எனக்குள் இருக்கிறார். நானே கடவுள் என்று நினைப்பதுதான்.

வேதங்கள் பலவாறாகக் கூறுகின்றன. ''அஹம் ப்ரஹ் மாஸ்மி'' ''தத்வமஸி'', ''ப்ரக்ஞானம் ப்ரஹ்மா''. ''அயம் ஆத்மாப்ரஹ்மா''. ஒன்று நான் பிரம்மன் என்கிறது. இன்னொன்று, 'நீயே அது' என்கிறது. அடுத்தது, 'விழிப்பு ணர்வே ப்ரம்மன்' என்கிறது. கடைசியாக 'நானே ஆத்மா, நானே ப்ரஹ்மா'.

பண்டிதர்கள் இவற்றிற்கெல்லாம் சூட்சுமமாகப் பல பொருள் கூறி, நமக்கு குழப்பத்தைத் தருகிறார்கள். பல அர்த்தங்களைக் கண்டு மனதைக் குழப்பிக்கொள்ள வேண் டாம்.

உமக்கு எளியவழி, இனியவழி, ஆனந்தந்தரும் வழி ஒன்றே. அதுவே பிரேமையின் வழி.

—பாபா

(ப்ரேம முதித.... என்ற பாடலுடன் பகவான் தன் அருள் உரையை நிறைவு செய்தார்.)

(5.7.96)

# 9. எண்ணங்களே அனைத்துக்கும் மூல காரணம்

கெட்ட எண்ணங்களால் ஒருவன் துன்பத்துக்குள்ளாகிறான். பலனுள்ள எண்ணங்களால் ஒருவன் சத்வ குணமுடையவனாகிறான். எண்ணங்களைக் கடந்தவன் அமைதியில் நிலை பெறுகிறான். இந்த நல்வார்த்தையை மறக்காதீர்கள்.

**உதவி**

Face is the index of the mind. அகத்தின் அழகு முகத்தில் தெரியும். எண்ணங்களும், அவற்றிற்கு எதிர்மறை எண்ணங்களும் முகத்தில் பிரதிபலிக்கின்றன. இடைஞ்சல், கவலை, கோபம், அபாயம், மகிழ்ச்சி இவையெல்லாம் முகத்தில் தெரிகின்றன. ஆகவே மனிதன் கெட்ட எண்ணங்களுக்கு இடங்கொடுக்கலாகாது. கெட்ட எண்ணங்களால்தான் அவனுக்கு சங்கடங்களும், பிரச்சனைகளும் நேருகின்றன. மற்றவருக்குக் கெட்டது நிகழ வேண்டுமென்று ஆசைப்படுதலும் துன்பம் வரவேண்டுமென்று ஆசைப்படுதலும் துன்புறுத்த வேண்டுமென்று ஆசைப்படுதலும் தவறானவை. இவற்றைவிட, உனக்கு உதவி செய்தவருக்குத் துன்பம் கொடுத்தல் இன்னும் மோசமானது. கெட்ட எண்ணங்கள் மனித சமுதாயத்துக்கு இயல்பானவை அல்ல.

ஒரு கல்லை கிணற்றுக்குள் எறிந்தால் ஒரு அலை கிளம்புகிறது. அது பெரிதாகி, கிணறு முழுவதும் பரவுகிறது. அதுபோல மனம் என்ற ஏரியில் எண்ணம் என்ற கல்லை எறிந்தால், அதன் அலைகள் ஐம்புலன்களிலும் பரவுகின்றன. கெட்ட எண்ணம் கண்ணில் நுழைந்து, கெட்டதைக் கேட்கச் செய்கிறது. மனதில் உள்ள கெட்ட எண்ணங்கள் கெட்டதைப் பேசச் செய்கின்றன. கெட்ட

எண்ணம் உன் கைகளை கெட்ட செயல் செய்யும்படி தூண்டுகிறது. கெட்ட எண்ணந்தான் உன் உடலிலுள்ள உறுப்புகள் அனைத்தையம் கோணல் வழியில் செயல்புரியச் செய்கிறது. ஆகவே கெட்ட எண்ணங்களால் நீ துன்பத்துக்கு ஆளாகிறாய்.

### சாது

நமது துன்பத்துக்கு மூல காரணம் என்ன? நமது எண்ணமே. மனதில் குடியிருக்கும் கெட்ட எண்ணங்கள் தான் துன்பத்துக்கு இட்டுச் செல்கின்றன. ஆகவே எண்ணம் மனதில் நுழைந்ததே அது கெட்டதா, நல்லதா என்று விசாரித்து, கெட்டதை விலக்க வேண்டும். நல்லெண்ணங் களை ஏற்று ஆதரிப்பவன் சாது ஆகிறான். மற்றவர்களுக்குச் சேவைசெய்யும் எண்ணங்கள், மற்றவரின் சேமநலம் நாடும் எண்ணங்கள், மற்றவர் முன்னேற்றத்தை விரும்பும் எண் ணங்கள், இத்தகைய உண்மை நிரம்பிய எண்ணங்களால் மனிதன் சாதுவாகிறான். சாதுவென்றால் காஷாய உடை தரித்த சாதுவல்ல. சத்வ குணம் நிரம்பிய சாது. இத்தகைய சத்வ குணம் ஒவ்வொருவரிடமும் உள்ளது. சத்வகுணத்தைக் காப்பாற்றி, வளர்க்க வேண்டுமெனில் நல்ல எண்ணங்கள் நம் மனதில் புக வேண்டும்.

### அமைதி

அமைதி (சாந்தி) எங்கே கிடைக்கும்? அமைதி வெளியுலகில் எங்கிருந்தும் கிடைப்பதில்லை. உமது உத்தியோகத்திலிருந்தும் கிடைப்பதில்லை. சாந்தி உமக்குள் இருந்துதான் கிடைக்கிறது. எப்போது உமக்கு அமைதி கிட்டுகிறது? எண்ணங்களனைத்தையும் விட்டபிறகே அமைதி கிட்டுகிறது. அனைத்து எண்ணங்களையும் இறைவ

னுக்கு அர்ப்பணித்தால் அமைதி கிட்டுகிறது. எல்லா எண்ணங்களும் இறைவனால் தூண்டப்பட்டவை என்று எண்ண வேண்டும். அனைத்து எண்ணங்களும் இதயத்திலி ருந்து வெளிவருகின்றன. இதயமே இறைவன் இருக்கும் மையம். அனைத்து எண்ணங்களும் இதயத்திலிருந்து வெளிவருகின்றன என்று நம்பும்போது, நல்லெண்ணங்களே உருவாகும். அதன்பின் சாந்தி கிட்டும்.

நல்லவற்றிற்கும், கெட்டவற்றிற்கும் மற்றவர் காரண மல்ல. நல்லது கெடுதல் அனைத்துக்கும் நீயே பொறுப்பு, உனது எண்ணங்களே பொறுப்பு. ஆகவே நல்ல எண்ணங் களை வளர்த்து, பின் எண்ணங்களைக் கடந்து செல்ல வேண்டும். 'யத் பாவம் தத்பவதி' எத்தகைய உணர்ச்சி களோ, அத்தகைய அனுபவம்.

ஆகவே ஒவ்வொன்றும் உள்ளிருப்பவனின் பிரதிப லிப்பு. ஒருமுறை கிருஷ்ணன், தர்மபுத்திரரை அழைத்து, இங்கெல்லாம் சுற்றிச்சென்று, யாராவது கெட்ட மனிதன், இருக்கிறானா என்று பார்த்துவா என்றார். அதேபோல துரியோதனனையும் அழைத்து, ''துரியோதனா, இங்கு யாராவது கொடியவர், கெட்டவர் இருக்கிறார்களா என்று பார் என்றார்''. தருமரும் துரியோதனனும், ஒரு நல்ல மனிதனைத் தேடிச்சென்றனர். சிறிது காலங்கழித்து தருமர் வந்து ''கிருஷ்ணா, நமது நாட்டில் கெட்ட மனிதன் யாரையும் காணவில்லை! அனைவரும் நல்லவர்கள், நல்ல பழக்கங்கள் கொண்டவர்கள், என் கண் எதிரே வந்த யாரும் கெட்டவன் இல்லை'' என்றார்.

**கிருஷ்ணர்**

துரியோதனன் சிறிது நேரங்கழித்து வந்து, ''கிருஷ்ணா இந்நாட்டில் எங்கு திரும்பினாலும் கெட்டவர்களும் கொடு

மையானவர்களுமே தென்படுகிறார்கள். நற்குணங்கள் கொண்டவன், நற்பழக்கங்கள் கொண்டவன் யாரையும் காணவில்லை'' என்றான்.

கிருஷ்ணன் அப்போது கூறினார். ''யத் பாவம் தத்பவதி'' துரியோதனன் கெட்ட எண்ணங்களும், கெட்ட உணர்ச்சிகளும் நிரம்பியவன். ஆதலால் அவன் கண்ணில் கெட்டவர்களே தென்பட்டனர். அணியும் கண்ணாடியின் நிறத்துக்கேற்ப, கண்பார்வையின் நிறம் அமைகிறது. கெட்ட வனின் பார்வை கெட்டவற்றையே வெளிப்படுத்துகின்றது. துரியோதனன் தீயவன்.

தருமன் சாது. நல்லெண்ணம் நிரம்பியவன், நற்பழக்கங் கள் கொண்டவன். நற்குணத்தின் வடிவம். ஆகவே அவன் நல்லவர்களையே கண்டான். துரியோதனன், தருமன் இவர்க ளின் அனுபவங்களுக்குப் பின்னணியாக அமைந்தது அவர வர் எண்ணங்களே.

நம்மிடமுள்ள நல்லவற்றையும், கெட்டவற்றையும் அடிப்படையாகக் கொண்டு, நாம் பிறரை நல்லவர் என்றும் கெட்டவர் என்றும் கூறுகிறோம். நமது குற்றமுள்ள மனமே இதற்குக்காரணம், நல்லவையும், கெட்டவையும் வெளியுல கில் இல்லை. ஒவ்வொன்றும் Reaction, Reflection, Resound (எதிர்செயல், பிரதிபலிப்பு, எதிரொலி). அவனுடைய எதிர்ச்செயல், அவனது பிரதிபலிப்பு; அவனது எதிரொலி இவையே காரணம். தீதுக்கும் நல்லதற்கும், நாமே மூலகாரணம். மற்றவரல்ல. நல்லவற்றிற்கும் கெட்டவற்றிற் கும் நமது எண்ணங்களே முக்கிய காரணம்.

## செயல்கள்

மனம் எண்ணங்களின் கூட்டு. மனம் செயல் வழியாகச் செல்கிறது. இன்ப துன்பங்களுக்கு நமது செயலே மூல

காரணம். எண்ணங்கள் நல்லவையாக இருந்தால், மனம் நல்லதாக இருக்கும். மனம் நல்லதாக இருந்தால், நடத்தை (செயல்) நல்லதாக இருக்கும். இக்கால உலகில், பல கெட்ட செயற்பாடுகளையும், கெட்ட செயல்களையும் காண்கிறோம். ஆகவே நல்ல எண்ணங்களைப் போஷித்து வளர்க்க வேண்டும்.

### மூல காரணம்

நமது உணவும், பழக்கங்களுமே நமது கோணலான, திரிந்த எண்ணங்களுக்கு மூல காரணம். எண்ணங்கள், உள்நுழைந்ததுமே, அவற்றை முன்நிறுத்தி நல்லதா கெட் டதா, சரியா, தவறா என்று அதற்குரிய நேரம் எடுத்துக் கொண்டு தீர்மானியுங்கள். Haste makes waste, waste makes worry, so do not be in a hurry. அவசரத்தால் வீணாகும், வீணாவதால் கவலை வரும். ஆகையால் அவசரம் வேண் டாம். ஒரு பொழுதும் அவசரம் வேண்டாம். பொறுமை யைக் கடைபிடியுங்கள். அமைதியாக இருங்கள். சாந்தமாக இருந்தால் எல்லா சுகங்களையும் அனுபவிக்கலாம். இன்பங் கூட வெளிப்புறத்ததல்ல, உலக சம்பந்தமானதல்ல. அதிருஷ் டங்கூட தகுதியைப்பொறுத்து அமைவதில்லை. நமது செயல்கள் அதிருஷ்டத்தைப் பொறுத்து அமைகின்றன. நம்மால் காணப்படாத ஒன்றே அதிருஷ்டம்.

எண்ணத்தை விதைத்து, கர்மம் என்ற செயலைப் பெறுகிறாய்.
கர்ம பலனை விதைத்து, அப்யாஸத்தைப் (பயிற்சி) பெறுகிறாய்.
அப்யாஸத்தை விதைத்து, சீலத்தை (ஒழுக்கம்)ப்பெறுகி றாய்.
சீலத்தை விதைத்து, அதிருஷ்டத்தை அறுவடை செய்கிறாய்.

அதிருஷ்டத்துக்கு குணம் ஆதாரம்; குணத்துக்கு ஆலோ சனை ஆதாரம். ஆலோசனைக்கு கர்மபலன் ஆதாரம், கர்மபலனுக்கு சங்கற்பம் (எண்ணம்) ஆதாரம்.

இன்பதுன்பங்களுக்கு எண்ணமே மூலாதாரம். சங்கற் பத்தையொட்டி சுபாவம் அமைகிறது. ஆகவே நமது எண்ணத்தின்மேல் நாம் ஆதிக்கம் செலுத்த வேண்டும்.

நிகழ்ச்சிகள்

பொதுவாக உலகியல்பின்படி நமக்கு நேரும் அனுப வங்களுக்குப் பிறரைக் குறை கூறுகிறோம். அது சரியல்ல. நாமே, நமது எண்ணங்களே அதற்கு மூல காரணம். நமது பாவங்களுக்கு (நோக்கங்கள்)த் தகுந்தவாறு நமக்கு நிகழ்ச்சி கள் அமைகின்றன. பரிட்சையில் தேறினால் உன்னுடைய முயற்சியே மூலகாரணம். நீ தோல்வியுற்றால், அதற்கும் உனது முயற்சி காரணம். நேர்மையாகப்படித்து எழுதியிருந் தால் தேறியிருப்பாய். நேர்மையான முயற்சி செய்ய வில்லை. ஆகவே தோல்வியுற்றாய்.

எதையும் சாதிப்பதற்கு நல்லெண்ணங்களை வளர்த்துக் கொள்ள வேண்டும். எண்ணங்கள் எப்போதும் சுயநலமா கவோ, சுயலாபத்தைக் கருதியோ இருக்கலாகாது. அத்த கைய எண்ணங்கள் இயல்பாக வருகின்றன.

ஸ்வ பாவம் என்பது ஸ்வ+பாவம் = ஸ்வ என்றால் ஆத்மா. பாவம் - என்றால் உணர்வு. ஸ்வபாவம் என்றால் ஆத்ம உணர்வு. ஸ்வதர்மமாயினும் (ஆத்மதர்மமாயினும்) சரி. பரதர்மமாயினும் (உலகியல் தர்மமாயினும்) சரி. ஸ்வபாவத்தைப் பிரதானமாகக் கொண்டாலும் சரி. அவை இதயத்திலிருந்தே வெளிவருகின்றன. அனைத்தும் இதயத்தி லிருந்தே வெளிவருகின்றன. வெளியிலிருந்து வரவில்லை. ஆன்மீகப்பாதையிலுங்கூட அளவுக்கு மீறி நாம் (உத்வேகம்)

கொந்தளிப்படைகிறோம். அளவுக்கு மீறி நாம் ஆனந்தமடைகிறோம். நம்மை மறந்து விடுகிறோம். போதையில் உள்ளவர் போலாகிறோம். நாரதர் இவ்வாறே கூறினார். அனைத்துக்கும் நீயே மூல காரணம். எண்ணங்களே காரணம். உனது கஷ்டங்களுக்கும் மனத்துன்பங்களுக்கும் நீயே காரணம். வேறுயாரும் இதற்குப் பொறுப்பல்ல. வேறு யாரையும் நாம் குறை கூறத்தகுதியில்லை.

**உண்மை**

இந்த உண்மையை நன்கு உணர்ந்து கொண்டால், நல்ல எண்ணங்களை வளர்த்துக்கொள்ள முடியும். இவ்வாறு நல்லெண்ணங்களை வளர்த்துக்கொண்டவரே சாது எனக் கூறப்படுகிறார்.

உண்மை நிறைந்த எண்ணங்கள் இதயத்திலிருந்து இயல்பாக வெளிவருகின்றன என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும். யாரும் உன் பொருட்டாகப் பேசுவதில்லை. உங்கள் காதில் வேறு யாரும் கூறுவதில்லை. அனைத்தும் உன்னிடமிருந்து வெளிவருகின்றன. இதயமே அனைத்துக்கும் மையம் என்றும், அதிலிருந்தே அனைத்தும் வெளிவருகின்றன என்றும் நன்கு உணர்ந்து கொண்டால், அதுவே அமைதியின் வடிவமாகிறது.

சாந்தி என்பது என்ன? கஷ்டதுக்கங்களை எதிரிட்டு, நஷ்டத்தை எதிரிட்டு நிற்பதற்கு சாந்தி என்று பொருளல்ல. இன்பதுன்பங்களின்போது சமநிலை மாறாதிருக்க வேண்டும். இன்பமும் தற்காலிகமானது. வலியும் தற்காலிகமானது. இரவும் தற்காலிகம். பகலும் தற்காலிகம். அனைத்தும் ஓடும் மேகங்கள். ஒன்றும் நிரந்தரமானது அல்ல. இன்று பௌர்ணமிநாள் என்று மகிழ்ச்சி கொள்ளலாம். பௌர்ணமியும், அமாவாசையும் அநித்யமானதே.

'அநித்யம் அசுகம் லோகம்' இவ்வுலகம் தற்காலிகமானது, துன்பம் நிறைந்தது. முழுமையான சுகத்தை அனுபவிப்பவரும், முழுமையான ஆனந்தம் அனுபவிப்பவரும் அது இழந்த அடுத்த கணத்தில் துக்கத்தில் ஆழ்கிறார்.

ஆகவே சாந்தி உம்மிடமிருந்து வெளிவரல் வேண்டும். வெளியிலிருந்து வரலாகாது.

**சாந்தி**

வெளிநாட்டவர் ஒவ்வொருவரும், என்ன வேண்டும் என்று கேட்டால், I want peace (எனக்கு அமைதி வேண்டும்)என்று கூறுகிறார்கள். இங்கு மூன்று சொற்கள் இருக்கின்றன. I- நான், Ego- அகங்காரம், Want- வேண்டும் ஆசை. இவை இரண்டையும் நீக்கினால் Peace அமைதி தயாராக இருக்கிறது. சாந்தி (அமைதி) உனக்குள் இருக்கிறது. வெளியே, இருக்கிறது. மேலே, கீழே, சுற்றிலும் கூடவே இருக்கிறது. எல்லாவிடங்களிலும் அமைதியைக் காண்பதில்லை. Pieces- துண்டுகளைக் காண்கிறோம். சாந்தி உள்ளேயே இருக்கிறது.

YOU ARE THE EMBODIMENT OF PEACE. YOU ARE THE EMBODIMENT OF TRUTH. YOU ARE THE EMBODIMENT OF LOVE. YOU ARE THE EMBODIMENT OF GOD.

அமைதியின் வடிவம் நீ. சத்தியத்தின் வடிவம் நீ. பிரேமையின் வடிவம். இறைவனின் வடிவம் நீயே.

இந்த உண்மையை நீ உணர்ந்து கொண்டால், அதுவே சாந்தி.

வேதாந்தத்தில் ஆதிபௌதிகம், ஆதிதெய்விகம், ஆத்யாத்மிகம் என்ற மூன்றைக் கற்பித்தார்கள். ஆதிபௌதிகம்

என்பது தேகம். ஆதி தெய்விகம் என்பது மனம். ஆத்யாத்மிகம் என்பது ஆத்ம தத்வம்.

*The one you think you are*
*The one others think you are*
*The one you really are*
*You ae not one but three.*

நீ யாரென்று நினைத்துக்கொள்கிறாயோ, அந்த 'நீ'
நீ யாரென்று மற்றவர் நினைக்கிறார்களோ, அந்த 'நீ'
ஆக. நீ ஒருவனல்ல, மூவர்.

### சாட்சி

நீ யாரென்று நினைத்துக்கொள்கிறாயோ அது தேகம். அதுவே உனக்கு பிரமாணம் (சாட்சி) ஆனால் நீ உடலல்ல, மனமல்ல, ஆத்மஸ்வரூபமே நீ. ஆத்ம ஞானம், ஆத்மத்யா கம், ஆத்மானந்தம் இவை மூன்றும் சேர்ந்ததே ஸ்வபாவம்.

ஹவா - ஸ்வா. அதுவே ஸ்வா என்றாயிற்று, அதுவே ஹம்ஸா - அதுவே ஹம்ஸ காயத்ரி. (Swan என்பதே ஹம்ஸம்) ஸோ - ஹம் (பகவான் உச்சரித்துக் காட்டினார்). ஸோஹம் இதுவே ஹம்ஸ காயத்ரி. நீ ஹம்ஸமே - இந்த தத்துவத்தை எப்போது நீ உணர்ந்து கொண்டாயோ நீ பரமஹம்ஸர்.

பல சாதுக்கள் பரம ஹம்ஸர் என்று அழைக்கப்படுகின் றனர். ஹம்ஸம் (அன்னம்) பாலையும் நீரையும் பிரிக்கிறது. அது போல பரமஹம்ஸர் அனாத்ம பாவத்தையும் (உடலு ணர்வையும்) ஆத்ம பாவத்தையும் பிரித்து, ஆத்ம பாவத்தில் லயிக்கிறார்.

ஆத்மா, அனாத்மா இவற்றைப் பிரித்தலே ஹம்ஸத்தின் குணம். குணங்களைப் பிரித்தலே குணத்ரய விபாகமே

ஹம்ஸத்தின் குணம். க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாகமே ஹம்ஸத்தின் குணம். ஆகவே நீ உலகியல் உணர்வுகளைக் கைவிடல் வேண்டும்.

இவ்வியற்கை, பிரபஞ்சம், பிரக்ருதி - விளைவின் வடிவம் (காரியஸ்வரூபம்). இவ்விளைவுக்கு இறைவன், பரமாத்மா, காரணவடிவம் (காரணஸ்வரூபம்). கார்ண - காரிய ஸ்வரூபமே (வடிவமே) ஜகத் (உலகம்) ஜகத் என்றால் ஜ - கத் (வருதல் - போதல்). எதுவும் நிரந்தரமல்ல. போவது வருகிறது; வருவது, போகிறது. எதுவும் நிரந்தர மல்ல. ஆகவே இது மித்யா எனப்படுகிறது. இது ஸதஸத் எனவும் கூறப்படுகிறது. இந்த ஜகத்திலிருந்து நாம் ஓடிவிட முடியாது. ஜகத்தில் இருந்து கொண்டு ஜகதீஸ்வரனை, இறைவனை உணர வேண்டும். ஜகத், சைதன்யத்தின் (பேருணர்வின்) வடிவம். அத்தகைய விழிப்புணர்வே தெய்வத்துவம்.

Consciousness (பேருணர்வு) is Divinity Consciousness-இலிருந்து ஏற்பட்டது. Conscious-உடல் Consicence-ஜீவசாட்சி Witness Consciousness (சைதன்யம்) அனைத்தும் சைதன்யத்துடன் தொடர்பு கொண்டவை. அனைத்தும் ஒரே குடும்பம்.

## சிலவற்றை விலக்க வேண்டும்

சிலவற்றை நாம் கைவிட வேண்டும். சிலவற்றை ஏற்றுக்கொள்ள வேண்டும். கடைக்குச்சென்று ஆரஞ்சுப்ப ழம் வாங்குகிறாய். உன் பணத்தைக்கொண்டு முழுப்பழத் தையும் வாங்கினாய். இருந்தாலும் தோலை நீக்க வேண்டும். விதைகளையும் எறிய வேண்டும். அதன் ரஸத்தைப்பருக லாம். உன் பணத்தைக் கொண்டு வாங்கியதால், நீ முழுவதுமாக உண்பதில்லை. வாங்கிய பழத்தில் சில வற்றை நீக்கியே ஆக வேண்டும்.

இவ்வுடலும் உனக்குச் சொந்தமானது. இவ்வுடலில் சில அனுபவங்களை ஏற்க வேண்டும். சில அனுபவங்களை விலக்க வேண்டும். கெட்ட எண்ணங்கள், கெட்ட உணர்ச்சிகள், கெட்ட பழக்கங்கள் இவற்றைக் கைவிட வேண்டும். விதைகளை வைத்திருந்தால் அவை செடிகளாக வளரும்.

இனிய ரஸத்தைப் பருக வேண்டும்.

த்ருஷ்டி மதுரம், ச்ரவணம் மதுரம்... மதுராதிபதே மதுரம். இத்தகைய இனிமையான ரஸத்தை பருக வேண்டும்.

காசு கொடுத்து வாங்கியதற்காக முழுப்பழத்தையும் உண்பதில்லை. கெட்ட எண்ணங்களால் நம்மை நாம் கெடுத்துக் கொள்கிறோம்.

கெட்ட குணங்களைக் கண்டதும், உனக்குள்ளே I am man, I am man - not animal not animal என்று கூறிக்கொள்ள வேண்டும். ராக, துவேஷம், காமம், குரோதம் அசூயை (பொறாமை) இவையெல்லாம் விலங்குக்குணங்கள். விலக்க வேண்டும். என் குணங்கள் என்ன? சத்யம் என் குணம், தர்மம் எனது குணம், பிரேமை எனது குணம், அஹிம்ஸை எனது குணம், ஸஹனம் (பொறுமை) என் குணம். சதாசாரம் (நற்பழக்கம்) என் குணம் என்று கருத வேண்டும். கருணை எனது உண்மையான குணம், கருணையின் ஸாரத்தைக் கொண்டு வாழ்க்கை நடத்த வேண்டும். கருணையே இராமனின் முதன்மையான குணம். அதுவே அவரது வாழ்க்கையை புனிதமாக்குகிறது. கருணை, ஒவ்வொருவர் வாழ்விலும் இடம் பெற வேண்டும்.

எக்காரணத்தைக் கொண்டும் சோகமடையலாகாது. கெட்டகுணம் இருக்கும்போதுதான், மனத்துயரமும் கூட வரும். மனதை அன்பால் நிறைத்துக்கொள். இதயம் என்ற தொட்டியை அன்பால் நிறைத்தால், மனம் என்ற திருப்புகு

மூாயிலிருந்து (Tap) இனிய சொற்களைப் பெறுவாய். குழாயைத்திறந்ததும் நல்ல சொற்கள் வெளிவரும்.

*Start the day with the love*
*Fill the day with love*
*Spend the day with love*
*End the day with love*
*This is the way to God.*

நாளை அன்புடன் தொடங்கு.
நாளை அன்புடன் நிரப்பு.
நாளை அன்புடன் செலவிடு.
நாளை அன்புடன் நிறைவுசெய்.
இதுவே இறைவனை அடையும்வழி.

இதயத்தை அன்பியல்பால் நிரப்ப வேண்டும். இதயத்தில் அன்பில்லாத வாழ்க்கை நடைப்பிணத்துக்கு சமம். நாம் அன்பு வடிவங்களாக வேண்டும்.

**பிரேமை**

பிரேமையை வளர்த்துக்கொள்ள வேண்டும். பிறரிடமும் பிரேமையை வளர்க்க வேண்டும். ஒரு விதை நடுகிறோம். அதிலிருந்து கிளைகள், இலைகள், மலர், காய், கனி அனைத்தும் வருகின்றன. அனைத்தும் ஒரு விதையிலிருந்து வந்தவை. அதுவே பிரேமை என்னும் மரம். அனைத்து நல்ல எண்ணங்களும் சொல்லும் செயலும் பிரேமையிலிருந்து கிளையாக, மலராக, காயாக, கனியாக வளர்ந்தவை.

பல பறவைகள் அம்மரத்தின் மேல் தங்குகின்றன. சத்தமிடுகின்றன. அமைதியற்ற பல மனிதர்கள் நிழலில்

தங்கி இளைப்பாறுகின்றனர். வந்து ஓய்வெடுக்க விரும்பி னால் அங்கு சத்தம் நிறைந்திருக்கிறது.

ஆகவேதான் 'தஸ்மாத் ஜாக்ரத ஜாக்ரத' என்று கூறப்பட்டது.

ஜன்மதுக்கம் ஜராதுக்கம்... துக்கம் புன:புன:
அந்த:காலே மஹாதுக்கம் தஸ்மாத் ஜாக்ரத ஜாக்ரத ஜாக்ரத

என்றார் சங்கரர்.

பிறவி ஒரு துக்கம், முதுமை ஒரு துக்கம், முடிவுகாலம் பெருந்துக்கம். ஆகையால் விழிப்புடனிரு என்றார் சங்கரர்.

பிரேமை என்னும் மரத்தில், பறவைகள் என்னும் துர்க்குணங்கள் வந்து சத்தமிடுகின்றன. அவற்றை விரட்ட என்ன செய்ய வேண்டும்? கீழே தங்கி இருப்பவர்கள் கைகொட்ட வேண்டும். இராமா, கிருஷ்ணா, கோவிந்தா என்ற பஜனைப்பாடல்கள் பாடி கைகொட்ட வேண்டும்.

—பாபா

(ஹரி பஜனபினா சுகசாந்தி.... என்ற பாடலுடன் பகவான் அருளுரையை நிறைவு செய்தார்).

*(6.7.96)*

# 10. இறைவன் இருக்கிறார்

முழுக்குருடர்கள் இவ்வுலகத்தைக் காண்பதில்லை. நீ கடவுளைக் காணவில்லை என்பதானாலோ, அறிந்துணர வில்லை என்பதனாலோ கடவுள் இல்லையென்று மறுக்க முடியுமா? நீ இல்லை என்று கூறலாம். நாங்கள் அவர் இருப்பதை நம்புகிறோம்.

அன்பின் வடிவங்களே!

**சூரியன்**

பழங்காலந்தொட்டு மனிதர்கள் இறைவன் இருப்ப தைப்பற்றி வாத விவாதங்களில் ஈடுபட்டு வருகிறார்கள். சிலர் அவர் இருப்பதை மறுக்கிறார்கள். இவ்வாறு அவர்க ளது காலம் வீணாகிறது. பார்வை இழந்தவன் ஒளிமிகுந்த சூரியனைக் காண இயலாது. கண்ணை மூடிக்கொண்டவன் உலகத்தைக் காண இயலாது. அதனால் இவ்வுலகம் இல்லையென்றோ சூரியன் இல்லையென்றோ கூற முடி யுமா? உலகம் இருக்கிறது. ஆனால் பார்வை இல்லை. சூரியன் இருக்கிறது. ஆனால் கண்ணை மூடிக்கொண்டான். தவறு படைப்பில் இல்லை. பார்வையில் உள்ளது.

ஆழ்ந்த நம்பிக்கையே (Faith) மனிதனுக்கு உயிர் போன்றது. நம்பிக்கை இல்லாவிடில் கணநேரங்கூட வாழ இயலாது. நம்பிக்கை இல்லாமல் ஓரடி கூட முன்னால் எடுத்து வைக்க இயலாது. நம்பிக்கையில்லாமல் ஒரு பொறுப்பையும் ஏற்று நடத்த இயலாது. முயற்சி ஏதும் செய்யாத ஒருவன், எவ்வாறு வெற்றியை எதிர்பார்க்க முடியும்?

இந்தப் பரந்த உலகத்தில் ஒரு சிறு செயலையும் செய்து முடிக்க, நம்பிக்கை மிகவும் அவசியம். இறைவனைப்பற்றி

மட்டுமல்ல ஒவ்வொரு துறையிலும் நம்பிக்கை அவசியம். ஒவ்வொரு விஷயமும் உனது நம்பிக்கையைப் பொறுத்துள் ளது. மற்றவற்றைப் பொறுத்தல்ல. இவ்வுலகில் நாம் நம்பிக்கையின் அடிப்படையில் பௌதிக உலகில், ஆன்மீ கத்தில், நீதிநெறியில், விஞ்ஞானத்தில், தொழில் நுட்பத்தில் பலவற்றைச் சாதித்திருக்கிறோம். நம்பிக்கையின் அடிப்ப டையில்தான் நாம் எல்லோரையும் நேசிக்கிறோம். குறிப் பிட்ட இன்னார் உன் தாய் என்று நம்பினாலேயல்லாது, நீ அவரை நேசிக்க இயலாது. நம்பிக்கை இல்லாது உன் மனைவியை நேசிக்க இயலாது. நம்பிக்கை இல்லாது, உன் புதல்வரை உன்னால் நேசிக்க இயலாது. எங்கும் நிறைந் துள்ள அன்பை அனுபவிக்க வேண்டுமெனில், அதற்கு நம்பிக்கை அவசியம். இவ்வுலகில் இருவகையினர் உண்டு (1) நம்பிக்கை இல்லாதவர்கள், (2) நம்பிக்கை இல்லாதவர் போல நடிப்பவர்கள்.

## கடவுள்

ஒருவர் கடவுளை இதயத்தில் காண்கிறார். ஆனால் அரசியல் காரணங்களுக்காக அவர் இல்லை என்று கூறுகி றார். கடவுள் இருந்தால் அவரை ஏன் காணலாகாது? நீ காண்பதை நம்புகிறாயா அல்லது காண்பதையே நம்ப மறுக்கிறாயா?

இன்று ஒரு கேள்வி எழுப்பப்பட்டது. ஸ்வாமி எல்லோரையும் நேசி என்று கூறுகிறார். நாம் ஏன் எல்லோரையும் நேசிக்க வேண்டும்? ஸ்வாமி எதிர்க்கேள்வி கேட்டேன். ஏன் எல்லோரையும் நேசிக்க வேண்டும் என்று கேட்டாய். ஏன் வெறுக்க வேண்டும்? அன்பு செலுத்துவதற் கும், வெறுப்பதற்கும் காரணம் ஒன்றே! அன்பும், வெறுப் பும், வடிவமும் அதன் பிரதிபலிப்பும் ஆகும். எங்கே

வெறுப்பு இருக்கிறதோ, அங்கே அன்பும் இருக்கிறது. 'இல்லை' என்று கூறும்போது அங்கே 'ஆம்' என்பதும் இருக்கிறது.உதாரணம், மேடையில் சாயிபாபா இருக்கி றாரா? இல்லையா? இருக்கிறார், எவ்வாறு, எந்த அடிப்ப டையில்? வடிவத்தின் அடிப்படையில் கூறுகிறோமே. (வடிவம் மேடையில் உள்ளதால்) உரை முடிந்ததும் ஸ்வாமி மேடையிலிருந்து விலகிச் செல்கிறார். ஸ்வாமி மேடை மேல் இருக்கிறாரா இல்லையா? இல்லை. அங்கு இருந்த ஒருவரை இப்போது இல்லை என்று கூற முடிகிறது. சாயி பாபாவே இல்லாதபோது இருக்கிறார், இல்லை என்ற பிரச்னையே எழாது. கடவுள் இருப்பதால்தான் அவர் உண்டு, இல்லை என்ற பிரச்சினையே உருவாகிறது. அவர் இல்லவே இல்லை என்றால் இந்தக்கேள்விக்கே இட மில்லை.

## கடவுள் இருக்கிறார்

"There is God" கடவுள் இருக்கிறார் என்று அனில்குமார் கூறினார். 'There is' என்பது முதல் பகுதி. இருக்கிறார் யார்? God கடவுள். There is no God - "There is" என்பது முதற்பகுதி. 'No God' இரண்டாம் பகுதி. 'There is' என்ற உண்மை முதலில் வருகிறது. சொல்லும், எதிர்மறை யும் பின்னால் வருகின்றன.

'GOD IS NO WHERE' என்பது இன்னொரு கூற்று. 'GOD IS' என்பது முதலில் வருகிறது. அந்த உண்மை முதலில் வருகிறது. 'No Where' என்பதை சிறிது மாற்றி Now Here என்று கூறினால் GOD IS NOW HERE என்றாகிறது. மனம் சொல்லை உருவாக்குவதில் ஈடுபடுகிறது. W இருக்குமிடத் துக்குத் தகுந்தவாறு No where, Now here என்றாகின்றன. உன்னிடம் நம்பிக்கை இருக்கும்போது Now here என்று

கூறுகிறாய். உன்னிடம் நம்பிக்கை (Faith) இல்லாதபோது No where என்று கூறுகிறாய். ஆகவே நம்பிக்கையே மனிதனின் கண். இந்தக்கண்தான் அவனுடைய புனித சாஸ்திரம். திருஷ்டியே சிருஷ்டி. கண்மூலந்தான் அவன் படைக்கிறான். அவன் நம்பிக்கைக்கும் அவன் காணும் உலகுக்கும் வேறுபாடு இல்லை.

கண்ணுக்கும் சாத்திரத்துக்கும் வேறுபாடு இல்லை. கண்ணில் காண்பதையே சாத்திரத்தில் வருணிக்கிறாய். சாத்திரத்தில் வருணிப்பதை கண்ணால் காண்கிறோம். ''க்ஞாதும்'' என்ற முதற்சொல். ''தெரிந்துகொள்''. அடுத்த சொல் ''த்ரஷ்டும்'' – தெரிந்து கொண்டதை, ''பார்'' அடுத்தது ''ப்ர வேஷ்டும்'' நீ கண்டது, உள்ளே செல்ல வேண்டும்.

### புனித நூல்

கடையில் ஒரு பொருள் வந்திருக்கிறது என்பதைக் கேள்விப்படுகிறாய். இவ்வாறு கேள்விப்படுவதால் புனித நூல் அறிவு (Sacred Text) கிடைக்கிறது என்று கேள்விப்பட்டதும் கடைக்கு வந்து பார்க்கிறாய். அதுவே 'த்ரஷ்டும்'. அதற்கடுத்தது 'ப்ரவேஷ்டும்' - உள்ளே செல்வது.

பல பொருட்கள் கடைக்கு வருகின்றன. புனிதநூலை செவிமடுத்துக் கேட்டலே, ''க்ஞாதும்''. இதுவே ச்ரவணம். அடுத்து ''த்ரஷ்டும்''. - பார்க்கிறாய். காதில் கேட்டதை மனதில் பார்த்துக்கொண்டே இருக்க வேண்டும். அது ''த்ரஷ்டும்'' - இதுவே மனனம். மூன்றாவது ''ப்ரவேஷ்டும்''. - உள்ளே செல்வது. இதுவே ''நிதித்யாஸம்'' - நடைமுறைப்பயிற்சி. ஆகவே 'க்ஞாதும்'', ''த்ரஷ்டும்'', ப்ரவேஷ்டும் என்பவை. ச்ரவணம், மனனம், நிதித்யாஸம் ஆகும். செவிமடுத்துக் கேட்டல், கேட்டதை மனதில்

இடைவிடாது சிந்தித்து அறிதல், அடைந்ததை நடைமுறை யில் பயிற்சிசெய்தல் என்பவையே அவை.

ஆகவே ஒவ்வொரு விஷயத்திலும், செவிமடுத்துக் கேட்க வேண்டும். ஒன்பது வகை பக்தியில் ச்ரவணம் முதலில் வருகிறது. அடுத்தது ''கீர்த்தனம்'' - காதில் கேட்டபிறகு, பாடுவதில் பங்கெடுத்துக் கொள்கிறோம். அடுத்தது விஷ்ணுஸ்மரணம். பிறகு ''பாதஸேவனம்'' - சேவை செய்கிறோம். ''வந்தனம்'' - வந்திக்கிறோம். வழிபாடு செய்கிறோம். ''அர்ச்சனம்'' - அர்ச்சிக்கிறோம். வழிபடுகிறோம் - ''ஸ்நேகம்'' - நட்புக் கொள்கிறோம். ''ஆத்ம நிவேதனம்'' - சரணடைகிறோம். ஆத்ம நிவேதனம் எப்போது கிடைக்கிறது? ச்ரவணத்தில் தொடங்கி மற்றவற் றின் வழியாகப் பயணம் செய்து ஆத்ம நிவேதனத்தை அடைகிறோம். ஆரம்பத்தில் இருந்து முடிவுவரை வருவதே பூர்ணம்.

பூர்ணமத: பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ணமுதச்யதே
பூரணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவாவ சிஷ்யதே.

இதுவும் பூர்ணமில்லை. முழுமையில்லை. இது அரைவட் டம். முழுவட்டத்தில் தொடங்கின இடத்திலேயே முடிக்கி றோம். அதை ஓரளவில் நிறுத்திக்கொண்டால் அது அரைவட்டம் 'C' ஆகிறது. ஒன்றில் ஆரம்பித்து வேறொன் றில் முடிந்தால் அது அரைவட்டம். திரும்பத் தொடங்கிய இடம் வரும் வரையில் உள்ள இடம் காலியிடம். இந்த காலியிடந்தான் சந்தேகம் என்ற பிரதேசம். இது Hollow. வெறுமையானது. அத்தகைய சந்தேகத்தை யாரும் தீர்க்க இயலாது. இது முழுமையாக வேண்டும். A முதல் Z வரை கூறிய பிறகே முழுமையாகிறது. A வில் தொடங்கி X வரை சென்று பிறகு எழுத்துகள் தெரியவில்லை என்றால் அது முழுமையல்ல. ஆகவே நாம் ஒன்றில் தொடங்கி

முடிவுவரை பயணம் செய்ய வேண்டும். நாம் நம்பிக்கையில் தொடங்கி ஆனந்தத்தில் முடிவுறுகிறோம்.

### ஸ்ரவணம்

முதலில் ச்ரவணம்; முடிவில் ஆத்மநிவேதனம். முதலில் நாம் செவி மடுத்துக் கேட்டல் வேண்டும். பலர் இங்கு ஸ்வாமியைப் பார்க்க வருகிறீர்கள். நீங்கள் வீடு திரும்பி, தமது அனுபவங்களைக் கூறுகிறீர்கள். நீங்கள் கூறுவதைக் கேட்டுப் பலர் இங்கு வருகிறார்கள். நீங்கள் சொல்வதைக் கேட்காவிடில், அவர்கள் டிக்கட் வாங்க மாட்டார்கள். ஆகவே முதலில் ச்ரவணத்தில் வெற்றி பெறுகிறீர்கள்.

ச்ரவணத்திற்கு நம்பிக்கை கொள்ளுதல் அவசியம். நம்பிக்கையில்லாது நீங்கள் வாழ இயலாது. ஒவ்வொருவரும் நம்பிக்கையுடன் வாழ்க்கையைத் தொடங்க வேண்டும். சிலர் நம்பிக்கை இல்லை என்று கூறுகிறார்கள். சிலருக்கு நம்பிக்கை இல்லை. அது அவர்கள் தலைவிதி. உங்களுக்கு ஏன் அந்த விசாரம்? நீங்கள் ஏன் நம்பிக்கையில்லாத மனிதரைப்பற்றி நினைக்கிறீர்கள். No, Yes இல்லை, ஆம் என்பதெல்லாம் உங்களுக்கே தவிர ஸ்வாமிக்கு எப்போதுமே Yes-தான் (கரவொலி) No என்று கூறிய நாக்கே நாளைக்கு Yes என்று கூறும். ஒரே நாக்குதான் இரண்டையும் கூறும். நீங்கள் எதை நம்புவீர்கள்? அவர்கள் No என்று கூறுவதையா அல்லது Yes என்று கூறுவதையா? நாக்கு என்ன சொன்னாலும் Yes என்று எடுத்துக்கொள்ளுங்கள். அது மாறி மாறிப்பேசும்.

### நாக்கு

கோவிந்தா, தாமோதரா, மாதவா என்று இறைவன் பெயரைச் சொல்வதற்கு யார் காரணம்? எங்கு இவை

நடனமாடுகின்றன? அவை நமது நாக்கில் நடனமாடுகின்றன. நாக்கு சொற்களுக்கான மேடை. மேடை மேல் நல்லதும் தோன்றும், கெட்டதும் தோன்றும். அரசன், அரசி, வேலைக்காரன் எல்லோரும் மேடை மேல் தோன்றுகிறார்கள். இராமனும் வருகிறான், இராவணனும் வருகிறான். சொற்களனைத்துக்கும் நாக்குதான் மேடை. நாக்கு இவை இரண்டுக்கும் சாட்சி கூறுவதில்லை. மாறாக வெறும் சாட்சியாக, பாதிக்காமல், பாதிப்பில்லாமல் நிற்கிறது. சொற்களில் உள்ளவற்றிற்கு அது முக்கிய காரணமல்ல.

ஒருவன் ஊமையாக இருக்கிறான். சுவையுள்ள பதார்த்தங்களை உண்கிறான். வெளியே அவனால் கூற முடியாது. அவன் சுவையின் ஆனந்தத்தில் திளைக்கிறான். இத்தகைய அனுபவம் மிக அவசியமானது. இதற்கு மௌனம் மிகவும் தேவை. இறைவனுக்காகத் தர்க்கம் செய்து, நேரத்தை வீண் செய்யாதே. உடலையும் வீணடிக்காதே. விடாது தர்க்கம் செய்வதன் மூலமாக பகைமைதான் வளரும்.

## நிரூபணம்

இறைவன் இருப்பதை நம்பியே தீர வேண்டும். எதிராக நீ தர்க்கம் செய்வது அறிவற்ற செயல். உடலை மட்டும் காண்கிறாய். உடலில் கண்ணால் காணாத கருணை போல பல குணங்கள் குடிகொண்டிருக்கின்றன. அவற்றை நீ மறுக்கிறாயா? நீ காணாததால் அறிவிலியாக இல்லை என்று நினைக்கின்றாய், மனிதத்தன்மைக்கு நிரூபணத்தைத்தான் நீ காணவில்லை. நீ காணாத, காண இயலாத பல தன்மைகள் பல அனுபவங்களைத் தருகின்றன. அவற்றை இல்லையெனக் கூறுவது அறிவற்ற செயல்.

காற்றை நீ காண்பதில்லை. காற்றில்லாமல் நீ எவ்வாறு உயிருடன் வாழமுடியும்? வாழ இயலாது. ஆகவே காற்று

இருப்பதை நம்ப வேண்டும். இதையே உத்தாலகர் உபதேசித்தார். மகன் கேட்டான். 'தந்தையே, கடவுள் எங்கும் இருக்கிறார் என்று வேதங்கள் சாஸ்திரங்கள் கூறுகின்றனவே அவர் எங்கே என்றான். அவர் கூறினார். 'மகனே, உன்னால் காண இயலாது. பெருமுயற்சி செய்து குருகடாட்சம் இருந்து, இறைவன் அருள் இருந்தால் நீ உண்மையை அறியலாம். இது சிறிய உதாரணம்.

கோப்பையில் தண்ணீர் கொண்டுவா. சர்க்கரை கொண்டு வா'' என்றார். அவன் இரண்டையும் கொண்டு வந்தான். அவர் சர்க்கரையை நீரில் கலந்தார். பிறகு நீரில் தேடினார். காணவில்லை. இதுவரை இருந்த சர்க்கரை எங்கு போயிற்று. தண்ணீர் முழுவதும் கலந்திருக்கிறது. காண இயலவில்லை. ஆனால் இருக்கிறது. அது போலவே கடவுள் எங்கும் இருக்கிறார் என்றார்.

### இறைத்தன்மை

இறைத்தன்மை உள்ளது. அது மனிதத்தன்மையுடன் முழுமையாக லயமாகி இருக்கிறது. ஸ்தூலக்கண்ணால் காண இயலாது. ஞானக்கண்ணால் காணலாம். ஸ்தூலக்கண் மூலமாகத்தான் காண்கிறாய். ஞானக்கண் மூலந்தான் அனுப வம் பெறமுடியும். ஊனக்கண்ணின் சான்றை மட்டுமே நம்புவது அறிவற்ற செயல். நெருப்பைக் காணவில்லை. ஆனால் புகையைப் பார்க்கிறாய். தொலைவிலிருந்து புகை யைக் கண்டு, நெருப்பு இருப்பதை அனுமானிக்கிறாய். நெருப்பில்லாது புகையில்லை. அதுபோல, இறைவனில் லாது நாம் வாழ இயலாது.

சான்றோர்கள் இல்லாது, எவ்வாறு உலகில் நீ வாழ முடியும்? எவ்வாறு உன்னைக் காப்பாற்றிக்கொள்ள முடியும்?

இறைவனால்தான் ஒவ்வொன்றும் நிகழ்கின்றது. ஒரு சிறிய உதாரணம். ஒரு பசு கன்று ஈன்றது. கன்றின் உடலை நாக்கால் நக்கி பசு சுத்தம் செய்கிறது. அதுவரையிலும் கன்றுக்குட்டி எழுந்திருப்பதில்லை. அவ்வாறு சுத்தம் செய்த பிறகே கன்றுக்குட்டி எழுந்திருக்கிறது. எந்த இடத்திலிருந்து பாலைப் பெற்றுப்பருக வேண்டுமென்று கன்றுக்குட்டிக்கு யார் சொல்லிக் கொடுத்தார்கள்? கன்று பசுவின் மடிக்கு நேரே சென்று பாலை உறிஞ்சுகிறது. யார் கற்றுக்கொடுத்தார் கள்? யார் அங்கு செல்லும்படித் தூண்டினார்கள்? பொருள் தெரியாது. அறிவிலிகள் வீணாகத் தர்க்கம் செய்கிறார்கள். அடுத்தபடி என்ன யோசிப்பார்கள் என்று அவர்களுக்கே தெரியாது. நல்லவற்றைச் செவிமடுத்துக்கேட்பதில்லை. கேட்காததால் இன்னும் மோசமாக இருக்கிறார்கள்.

### விளைவுகள்

நல்ல சொற்களைக் கேளுங்கள். ஏன் நீங்கள் கேட்ப தில்லை. உங்கள் வாஸனைகளை நீங்கள் போக்கிக் கொள்ளவில்லை. வாஸனைகள் முன் பிறவிகளிலிருந்து வந்தவை. முந்தைய பிறவிகளில் நடந்தவை பற்றி யாரும் நம்புவதில்லை. நம்பினாலும் நம்பினாவிட்டாலும், அத்த கைய வாசனைகளால் விளைவுகள் ஏற்படுகின்றன.

ஒவ்வொன்றுக்கும் முக்காலம் உண்டு. இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம், இறந்த காலமில்லாது எவ்வாறு நிகழ்காலத்தை எதிர்பார்க்க முடியும்? இறந்த காலத்தில் ஒரு மரம் இருந்ததால்தான், நிகழ்காலத்தில் விதையைக் காண்கிறாய். இன்றுள்ள மரம் நாளைக்குள்ள விதைக்குள் குடிகொள்ளும். இறந்தகாலம் மரம், நிகழ்காலம் விதை, எதிர்காலம் மரம். மாபெரும் மரம் நுண்ணிய விதையில் அடங்கியிருக்கிறது. இதையே 'அணோ ரணீயான் மஹதோ

மஹீயான்' என்று வேதாந்தம் கூறுகிறது. இறைவன் நுண்ணியத்திலும் நுண்ணிய ஒன்றிலும், பெரியதிலும் பெரிய ஒன்றிலும் குடிகொள்கிறார். நீ காண்பதில்லை. ஆனால் அனுபவத்தில் உணர்கிறாய்.

## ரோஜா மலர்

இந்த மலரை எடுத்து, இது ரோஜா மலர் என்கிறேன். நீ அதைக் காண்பதில்லை. அதன் மணத்தை நுகர்கிறாய். மணத்துக்கு வடிவில்லை. ஆனால் ரோஜாவுக்கு வடிவம் உள்ளது. வாஸனைக்கு உருவமில்லை. ஆனால் மணம் தரும் மலர்களுக்கு வடிவம் உண்டு. பிரேமைக்கு வடிவம் எது? பிரேமைக்கு (அன்புக்கு) வடிவம் இல்லை. ஆனால் உன்னிடம் அன்பு செலுத்தும் அன்னைக்கு வடிவம் உண்டு. வடிவமுள்ள ஒருவர் வடிவமில்லாத ஒன்றை உனக்கு அளிக்கிறார். ஆனால் மனிதர்கள் பிரத்தியட்சப்பிரமாணம் என்றே கூறிக்கொண்டு அறிவிலிகளாகவே இருக்கிறார்கள். ஸ்தூலத்தைக்கடந்த பல அனுபவங்கள் உள்ளன. ஒரு உதாரணம்:

உன் கண்ணை உன்னால் காண முடியுமா? அதற்காக அது இல்லையென்று கூற முடியுமா? கண்ணாடிக்கு முன்னால் நிற்கும்போது உன் கண்ணை நீ காண்கிறாய். உன் மனது என்று கூறுகிறாயே அந்த மனதுக்கு வடிவம் என்ன? அதைக்காண முடிகிறதா? அதன் இருப்பை நீ எவ்வாறு நம்புகிறாய்? இவற்றையெல்லாம் மறுப்பது அறிவற்ற செயல்.

## விதை

விதையின் வடிவத்தில் இருந்தபோது, மரத்தை நீ காணவில்லை. அதுவே இத்தனை பெரிய மரமாக வளர்ந்

துள்ளது. காற்று எங்கும் இருப்பது போல, தெய்வத்துவம் எங்கும் உள்ளது. இறைவன் காற்று வடிவில் இருக்கிறார். அவர் வாயுவின் வடிவம். பஞ்சபூதங்களிலும் இவ்வாறே இருக்கிறார்.

சப்தப்ரம்மமயி, சராசரமயி, ஜோதிர்மயி, வாங்மயி,
நித்யானந்த மயி, பராத் பரமயி, மாயாமயி, ஸ்ரீமயி,"

சப்தப்ரம்மமயி: ஒலியின் வடிவில் உள்ளார். ஒலியைக் காண்பதில்லை. கேட்கிறீர்கள். உருவமென்றால் அதைக் காண முடியும். கேட்க முடியாது. ஒவ்வொரு புலனுக்கும் ஓரறிவுதான், ஒரு திறமைதான் உண்டு. உடல் முழுவதும் இரத்தம் உள்ளது. ஆனால் சோதனைக்கு ஓரிடத்தில் எடுத்துக் கொள்கிறோம். லட்டு முழுவதுமே இனிப்பானது. ஆனால் கை அதன் சுவையை அறியுமா? நாக்கு மட்டுமே, அதன் இனிப்பை சுவைக்கும். உடலிலுள்ள ஒவ்வொரு பகுதிக்கும் ஒரு குறிப்பிட்ட ஆற்றல்தான் உண்டு. அறிவிலி, எல்லாவிடங்களிலும் ஒன்றை அனுபவிக்க வேண்டும் என்று ஆசைப்பட்டால் அது இயலுமா? சூழ்நிலைக்கும் விளைவுக்கும் தகுந்தாற்போல நமக்குப் பலவித அனுபவங்கள் ஏற்படுகின்றன.

கடவுள் இருக்கிறார், இருக்கிறார், கடவுள் இல்லாவிடில் உலகம் இல்லை. கடவுள் இல்லை என்றால், நீ இல்லை என்று பொருள். ஆத்மாதான் இறைவன்.

உன்னிடம் நம்பிக்கைதான் இறைவனிடம் நம்பிக்கை. கடவுளிடம் நம்பிக்கையில்லை என்றால், உன்னிடமும் உனக்கு நம்பிக்கையில்லை. உன்னிடம் சுயநம்பிக்கை இல்லையென்றால், எவ்விதம் கடவுளிடம் நம்பிக்கை கொள்வாய்.

உன்னிடம் உனக்கு உள்ள நம்பிக்கை Self confidence. சுயநம்பிக்கை, சுயநம்பிக்கை இராதவனுக்கு கடவுளிடம் நம்பிக்கை இராது.

## சிவம்

நம்பிக்கை மிகவும் அவசியம். மனிதனுக்கு நம்பிக் கையே மூச்சு. மூச்சு இல்லாதவன் இறந்தவன். இங்கு சிவனைக் காண்கிறீர்கள். ஒரு சிறிய உதாரணம்.

உள்மூச்சு, வெளிமூச்சு இவை மங்களகரமானது, சிவம். இவை இரண்டும் இல்லாவிடில் இது சவம்.

நாம் சிலையை சிவம் என்கிறோம். இல்லை நமது மூச்சுதான் சிவம், வாழ்க்கைதான் சிவம். ஒவ்வொருவரிட மும் பிராணன் இருக்கிறது. அதுவே சிவம்.

"ஈஸ்வரஸ் ஸர்வ பூதானாம்".

சிவன் எங்கும் மூச்சு வடிவில் உள்ளார். அதுவே தெய்வம். மூச்சு இல்லாவிடில் சவம்.

ஒரு மாணவன் கூறினான். 'சத்யம் வத: தர்மம் சர' சத்யத்தைப் பேசு; தர்மத்தைக் கடைபிடி. இது எளிதல்ல என்று கூறினான். அது தவறு. இவற்றைவிட சுலபமானது வேறு எதுவுமில்லை. "பகவான் முன்னதாகவே வந்து விட்டார். 4 மணிக்குப் பேசுவார்". உள்ளவாறே பேசுவது மிக எளிது. இதற்கு கவலைப்பட ஒன்றுமில்லை. பொய் கூற மிகக்கவலைப்பட வேண்டும். அதற்கு ஒரு Knack (சாதுர்யம்) வேண்டும். அது Crack (பைத்தியம்)ல் கொண்டு சேர்க்கும். பொய் சொல்லுதல் மிகக்கடினம்.

உண்மை பேசுவது எளிது. ஆனால் நாம் பொய் சொல்லப் பழகிவிட்டோம். ஆகவே உண்மை கூறுவது

கடினமாகத் தோன்றுகிறது. நமது பலவீனங்களுக்கு நாம் இடங்கொடுக்கிறோம்.

ஒரு சிறிய உதாரணம்:

ஒரு மனிதன் வீட்டில் இறக்கிறான். நீங்கள் அந்த வீட்டுக்குச் செல்கிறீர்கள். சாவதைத் தடுக்க முடியாது. பிறந்தவர் இறந்தேயாக வேண்டும் என்று கூறுகிறீர்கள். அங்கு சென்று எப்போது வியாதியால் படுத்தார்? என்ன மருந்து கொடுத்தது? எந்த மருத்துவர் வைத்தியம் செய்தார்? இதெல்லாம் எதற்கு. உங்களுக்கான அற்ப திருப்திக்காகத் தானே இவையெல்லாம்.

மரணம் பிறப்புடனேயே பிறந்தது. ஒரு ரயில் பெட்டியில் Return என்று எழுதியிருக்கும். அது போன்றது. பெட்டிகளெல்லாம் திரும்ப வேண்டும். உடல்களும் திரும்ப வேண்டும். தேதி குறிப்பிடப்படவில்லையே தவிர, திரும்புவது உறுதி. ஏன் இதைப்பற்றி யோசிக்கிறீர்கள். ஏன் கவலைப்படுகிறீர்கள்? மனதைப் பழக்கிக் கொள்ளுங்கள்.

பழக்கங்காரணமாக நாம் உண்மைக்கு மாறாக இருக்கிறோம். நம்பிக்கையே சத்யம். அதுவே ஆனந்தம், ஆனந்தத்திலிருந்து சாந்தி. சாந்தியிலிருந்து சௌக்கியம். சௌக்கியத்திலிருந்து சந்தோஷம். மகிழ்ச்சியே நமது சுவர்க்கம். துக்கமே, நரகம். துக்கத்துக்கும், ஏமாற்றத்துக்கும் இடந்தரலாகாது. முழு நம்பிக்கையுடன் அவற்றுக்கு எதிராகப் போராட வேண்டும்.

இந்த முழு நம்பிக்கையால் நாம் எதையும் சாதிக்கலாம். நம்பிக்கை இல்லாவிடில் நாம் எதையுமே சாதிக்க இயலாது.

ஆகவே நம்பிக்கையை நாம் வளர்க்க வேண்டும். இறைவனை நினைப்பதன் மூலம் நம்பிக்கையை வளர்க்க லாம்.

*—பாபா*

(கோவிந்த ஹரே... என்ற பாடலுடன் பகவான் அருளுரையை நிறைவு செய்தார்).

*(7.7.96)*

# 11. இறைவனே உனது நண்பன்

இரும்பு, மண்ணுடன் சேரும்போது துருப்பிடிக்கிறது. அதே இரும்பு நெருப்புடன் சேரும்போது, துரு ஒன்றும் இருப்பதில்லை. அது போல, ஒவ்வொன்றும் அதன் சேர்க்கையைப் பொருத்தது.

மழை நீர் மணலின் மேல் விழும்போது, உள்ளே செல்கிறது. ஈரமண்ணில் மழைநீர் விழும்போது மேலேயே தங்குகிறது. அதுபோல, பக்தியும் தகுதிக்குத் தக்கவாறு பரிணமிக்கிறது.

மாணவர்களே! அன்பின் வடிவங்களே;

## கூட்டுறவு

மனித வாழ்க்கை புனிதமானது. ஆயினும் நல்லதும், கெட்டதும் சேர்க்கைக்கு, கூட்டுறவுக்குத் தகுந்தவாறு அமைகின்றன. இரும்பு, மண்ணுடன் சேரும்போது, துருப்பி டிக்கிறது. அதே இரும்பை, நெருப்பில் இடும்போது, துரு அதைவிட்டு நீங்குகிறது. இரும்பு நிறம் சிவந்து பிரகாசிக்கி றது.

தூசு, காற்றுடன் சேரும்போது, ஆகாயம் வரை உயர்ந்து செல்கிறது. அதே தூசு நீருடன் சேரும்போது பள்ளத்துள் வீழ்கிறது. மேலே பறப்பதும், கீழே செல்வதும் தூசின் தன்மை இல்லை. சேர்க்கையின் விளைவால் அது மேலே செல்கிறது. கீழே இறங்குகிறது. சேர்க்கையின் தன்மை, உன்னைச்சுற்றியுள்ள நல்ல, கெட்ட மனிதர்களைப் பொருத் தது.

ஸத்ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம்
நிஸ்ஸங்கத்வே நிர் மோஹத்வம்

நிர்மோஹத்வே நிஸ்சலதத்வம்
நிஸ்சல தத்வே ஜீவன் முக்தி.

நல்லவருடன் சேரும்போது, நம் புனித எண்ணங்களைப் பெற்று, தெய்வத்துவத்தைப் பெறுகிறோம். நாம் கெட்டவர் களுடன் சேரும்போது, கெட்ட உணர்வுகள், கெட்ட உணர்ச்சிகள், கெட்ட எண்ணங்கள் உருவாகி, தவறான செயல்களுக்கு இழுத்துச் செல்கின்றன. ஆகவே நல்லவர்க ளுடன் சேர்ந்து மனித நல்லியல்புகளை வளர்த்துக்கொள்ள வேண்டும். நல்லவர்களுடன் சேர்வதன் மூலமாக அவன் தெய்வத்துவத்தை அடைய முடியும் என்பதில் சந்தேகம் இல்லை. கெட்ட சேர்க்கையின் விளைவாக மனிதன் விலங்குத்தன்மையை அடைகிறான்.

## விலங்கு

விலங்கு மனிதனை விடக் கீழானது. தெய்வத்தன்மை மனிதனை விட மேலானது. மனிதன் இவற்றிற்கு இடையில் இருக்கிறான். ஆகவே அவன் மேல் நோக்கிச் சென்று இறைத்தன்மையை அடைய ஒவ்வொரு முற்சியும் செய்ய வேண்டும். கீழே இறங்குவதற்கு முயற்சியே தேவை யில்லை. கெடுவது எளிது. மேலே உயர்வது கடினம். தன்னைத்தானே உயர்த்திக் கொள்வது கடினம். இருந்தாலும் முயற்சி செய்ய வேண்டும். கெட்ட சேர்க்கையின் விளை வாக, கெட்ட உணர்ச்சிகள் நிறைந்து, கெட்ட செயல்களில் ஈடுபட்டு தன்னையே அழித்துக் கொள்கிறான்.

ஒவ்வொன்றுக்கும் எண்ணமே, சங்கற்பமே முக்கிய காரணம். எண்ணம் தூய்மையாகவும், புனிதமாகவும், சரியானதாகவும் இருக்க வேண்டும். ஆனால் இளம் வயதில் கெட்ட எண்ணங்களையும், கெட்ட உணர்ச்சிகளையும் அனுபவித்து காலத்தை விரயம் செய்கிறான்.

இரும்பு மண்ணுடன் சேர்ந்து துருப்பபடிக்கிறது (rusted) துருப்பிடித்தால் உடைகிறது (bursts) உடைந்தால் சோதனை (test) செய்ய வேண்டும். சோதனையின்போது, ஓய்வாக உள்ளது (Rest) (ஒன்றும் இல்லாது) அதுவே அதன் உயர்ந்த நிலை. ஆகவே அதன் தூசெல்லாம் விலக்க வேண்டும்.

அதுபோல மனதுக்கு தூசென்பது கெட்ட எண்ணங்களும், கெட்ட சேர்க்கையுமே. அனைத்தும் கெட்ட சேர்க்கையின் விளைவுகளாகும். Tell me your company. I shall tell you what you are. உன்னுடன் சேர்ந்தவர்களைக் கூறு. நீ யார் என்று நான் கூறுகிறேன்.

### நல்லவர் சேர்க்கை

உனக்குரிய நேரத்தை எடுத்துக்கொள். பரவாயில்லை. நல்லவர்களுடன்இணக்கங்கொள். நீ நல்ல பதவியில் அமர்ந்து, உனது சூழ்நிலை சுமுகமாக அமைந்தால், எல்லோரும் உன்னைச் சூழ்ந்து கொள்வார்கள். சூழ்நிலை உனக்கு மாறாக மாறி, இடைஞ்சலாக இருந்தால், மனிதர்கள் முகம் திருப்பி, உன்னை விட்டு விலகுவார்கள். இது உண்மையான நட்பல்ல.

யார் உண்மையான நண்பன்? உனது துன்பத்தின்போதும், உனது கவலையின்போதும், உனது இடைஞ்சல்களின் போதும் பிரச்சினைகளின்போதும் இடைவிடாது பின்தொடர்கின்ற இறைவனே உனதுஉண்மையான நண்பன். ஏரி நீர் நிறைந்ததும், தவளைகளெல்லாம் வந்து கூடுகின்றன. ஏரிநீர் வறண்டது, ஒரு தவளை கூட கண்ணில் படாது ஓடிவிடும். அதேபோல உனக்கு உயர்ந்த பதவியும் அதிகாரமும் இருக்கும்போது, மனிதர்கள் உன்னைச்சுற்றி கூடியிருப்பர். இது உண்மையான நட்பல்ல, நண்பர்கள், உனக்கு லாப, நஷ்டங்கள், இடைஞ்சல், இன்பங்கள், துன்பங்கள் நேரும்

போதெல்லாம் உன் கூடவே இருக்க வேண்டும். அதுவே உண்மையான நட்பு. ஆகவே உரிய நேரம் எடுத்துக் கொண்டு, உண்மையான நண்பன் யார் என்று தெளிந்து, அவனுடன் சேர வேண்டும். ''ஹலோ'' என்று கூறி யாருடன் வேண்டுமானாலும் சேருவது மிகத்தவறு. நண்பனைத் தேர்ந்தெடுக்குமுன் அவனது பின்னணியைத் தெரிந்து கொள். ஒருவனை நண்பனாக ஏற்றுக்கொள்வதற்கு முன்பு, அவனது நடத்தை, பழக்கங்கள், ஒழுக்கம் (Discipline) இவற்றைத் தெரிந்து கொள். உன் நண்பன் யாருடன் சேருகிறான் என்பதையும் தெரிந்து கொள்ள வேண்டும். உன் நண்பன் கெட்டவர்களுடன் சேர்ந்தால், அவன் முகத்தையும் பாராதே. அவன் ''ஹலோ'' என்றால் நீ 'குட்பை' (சென்று வருகிறேன்)என்று கூறிவிடு. அத்தகைய நண்பர்கள் உன்னை அபாயத்தில் மாட்டி விடுவார்கள்.

**நண்பர்கள்**

தற்காலத்தில் மாணவர்கள் எல்லோரையும் நண்பர்கள் என்று ஏற்றுக்கொள்கிறார்கள். இது உண்மையான நட்பு என்று கூற இயலாது. அவர்களெல்லாம் ஓடும் மேகங்கள். அத்தகைய சிநேகம். ஒரு எல்லைக்குள் அமைய வேண்டும். 'ஹலோ' 'ஹலோ'; 'குட்பை', 'குட்பை' என்றிவ்வாறு இருக்க வேண்டும்.

இந்த வயதில் பண்பாடு, சீலம் (character) முக்கியம். சீலம் இல்லாத ஒருவனுடன் நண்பனாக இராதே. அத்தகையவர்களுக்கு தனிப்பட்ட சீலமும் இராது. சமூகப்பண்பாடும் இராது. சமூகப்பண்பாடு இல்லாதபோது, தேசீயப்பண்பாடு எவ்வாறு அமையும்? ஆகவே தனி மனிதனுக்கு சீலம் மிகவும் அவசியம். அலையாத மனமும் மயங்காத கண்ணும் மிக அவசியம். ஒருவன் மனம் பெண்டுலம் போல

அசைந்துகொண்டே இருந்தால், அவன் மிகவும் கெட்ட பையன். அத்தகைய கெட்ட பையனுடன் நட்பு கொள்ளலா காது. முடிவில் நீயும் கெட்ட பையனாக மாறிவிடுவாய். ஆகவே நல்லவர்களை நண்பர்களாகக் கொள்வதற்கு முழு முயற்சி செய்.

**வலிமை**

இரும்பு மண்ணுடன் சேர்ந்தால் துருப்பிடித்து, துரு வால், வலிமை இழக்கிறது. முதலில் வலிமையுடன்தான் இருந்தது. அது நெருப்புடன் சேர்ந்தால், பிரகாசமடைகிறது. ஒரு அடியில் விரிவடைகிறது. எப்போது இதயத்தைப் புனிதமாக ஆக்க முடியும்? நெருப்புடன் சேர்ந்த இரும்பு போல, நல்லவர்களுடன் சேர்ந்தால் ஒளி வீசுகிறது. புனிதமடைகிறது. அப்போது அதை உன்னிஷ்டப்படி வளைக்கலாம். அதை வட்டமாக மாற்றலாம்; அரைவட்ட மாக மாற்றலாம். சூழ்நிலைக்குத் தகுந்தாற்போல துக்கம், விசாரம், இடைஞ்சல் இவை நேரும்போது இதயத்தை மாற்றலாம். எப்போது? தூசு இல்லாதபோது. தூசு இருக்கும் போது எந்த விதமான நல்ல மாற்றத்தையும் நிகழ்த்த இயலாது. ஒவ்வொருவரிடம் உள்ள அழுக்கு நீங்க வேண்டும். அழுக்கு நீங்குதல் (Refined) என்றால் என்ன? அழுக்கெல்லாம்நீக்கி (கெட்டஎண்ணங்களை விலக்கி) நல்ல தன்மையை வைத்திருத்தல், எல்லா பொருள்களும் இயற்கை நிலையில் நல்லது கெடுதல் சேர்ந்து உள்ளன. நாம் அரிசி உண்கிறோம். மற்றவற்றையும் உண்கிறோம். இயற்கையில் எவ்வாறு காண்கிறோமோ, அவ்வாறே நாம் உட்கொள்வதில்லை. அரிசி சமைத்து உண்கிறோம். அரி சியை இயற்கைத்தன்மையில் உள்ளவாறே உண்பதில்லை. அதன் உமியை நீக்குகிறோம். பிறகுதான் அரிசியை உண்ணமுடியும். அரசியைத் தண்ணீரில் கொதிக்கவிட

வேண்டும். அது போல வெள்ளி, தங்கம், வைரம் இவற்றை இயற்கை உள்ளவாறு ஏற்றுப் பயன்படுத்த இயலாது. அவற்றை அழுக்கை நீக்கி சுத்திகரித்தபின் அவற்றைப்பயன் படுத்த இயலும். பின் அவற்றிலிருந்து நகைகள் செய்யலாம். ஆகவே ஒவ்வொரு பொருளும் சுத்திகரிக்கப்படுதல் வேண் டும்.

**கல்வி**

இந்தக்கைக்குட்டை முதலில் பருத்தியாக இருந்தது. அதிலுள்ள கொட்டைகளை நீக்கி, அழுக்கை நீக்கி, அதிலிருந்து நூல் திரித்து, நூலை ஊடும் பாவுமாக நெய்தபிறகு அது துணியாகியது. துணியிலிருந்து கைக் குட்டை தயாரிக்கப்பட்டது. பருத்தி பல சம்ஸ்காரங்களை மேற்கொண்டு கைக்குட்டையாக மாறியது.

இதற்கு நீங்கள் படிப்பது அனைத்தும் புத்தக அறிவு. இத்தகைய சம்ஸ்காரம் (உயர்வாக மாற்றுதல்) தேவைப்படு கிறது. அதிகம் படிக்கலாம். ஆனால் உயர்வாக்கம் (Culture) இல்லாவிடில் அது கல்வியாகாது.

ஒருவன் உயர்ந்த கல்வி பெறலாம். ஆனால் குறுகிய மனத்தினன், அவன் தன்மையைக் கைவிட மாட்டான். இந்தக்கல்வி மனிதன் தர்க்கம் செய்ய உதவுகிறதே தவிர, முழு ஞானத்தைப்பெற உதவுவதில்லை. நாம் படித்திருப்ப தால், விவாதம் செய்யும் தன்மை வளர்ந்திருக்கிறது. இது சரியான குணம் அல்ல.

இக்கல்வி காணக் குளுமை தருவதற்காக அல்ல. கல்வி முழுமையான ஞானத்தையும் அறிவையும் தர வேண்டும். கல்வியைத் தவறான முறையில் செலுத்தி அது பொருள் சம்பாதிக்க மட்டுமே, ஜீவன உபாயத்துக்காகவே என்று நினைக்கிறோம். வாழ்க்கையில் இரண்டு அம்சங்கள் உள்

என. முதலாவது ஜீவன உபாயத்துக்காக. இரண்டாவது வாழ்க்கையின் இலட்சியத்தைப்பெற. அன்றாட வாழ்க்கையை நடத்தும்போதே, வாழ்க்கையின் இலட்சியத்தையும் அடைய வேண்டும். நாம் வாழ்ந்து, முடிவில் இறக்கிறோம். இது வாழ்க்கையின் இலட்சியம் அல்ல. ஒவ்வொருவரும் ஒரு இலட்சியத்தை வளர்த்துக்கொள்ள வேண்டும். ஒவ்வொரு மனிதனும் இலட்சிய மனிதனாகத் தன்னை திருத்தியமைத்துக்கொள்ள வேண்டும். ஒரு மனிதன் இறக்கலாம். அவனது இலட்சியம் இறவாது இருக்க வேண்டும். ஆகவே மாணவர்கள் உயரிய தன்மையுடன் இலட்சிய மாணவர்களாக இருத்தல் வேண்டும்.

### அமரத்துவம்

இலட்சியங்கள் மாறிக்கொண்டே இருப்பதில்லை. அவை அமரத்துவம் வாய்ந்தவை. இலட்சியங்கள் பல முந்தைய பிறவிகளில் அனுசரிக்கப்பட்டு வந்தன. ஆகவே நாம் இலட்சிய வாழ்க்கை நடத்த வேண்டும். பலருக்கு இலட்சிய வாழ்க்கை என்றால் என்ன என்று தெரியவில்லை.

ஒருவன் உயர்ந்த பட்டங்களைப் பெறுகிறான். பெருமிதம் கொள்கிறான். அவனிடம் அகங்காரம் வளர்கிறது. கூடவே டாம்பீகம், அசூயை இவையும் குடிகொள்கின்றன. அவனிடம் அகங்காரம், டாம்பிகம், அசூயை நிறைந்திருக்கும்வரை, அவன் உபயோகமற்றவானாகிறான். அத்தகைய மனிதரை சமூகமும் கௌரவிக்காது. அறிவிலி வீட்டில் கௌரவிக்கப்படுகிறான். கிராமாதிபதி கிராமத்தில் கௌரவிக்கப்படுகிறான். ஒரு அரசன் நாட்டில் கௌரவிக்கப்படுகிறான். பண்பு (Culture) மிகுந்தவனை உலகமே கௌரவிக்கிறது.

ஆகவே நாம் நம் நாட்டின் கலாசாரத்தை பண்பாட்டைக் (Culture) காப்பாற்ற வேண்டும். எந்த நாட்டினர் ஆயினும் அந்தந்த நாட்டின் பண்பாட்டைக் காப்பாற்ற வேண்டும். இதுவே கல்வியின் உட்சிறப்பு.

## உறவுகள்

இக்காலத்தில் நாம் கொள்ளும் தொடர்புகள் உறவுமுறைகள் நேராக, சரியானதாக இருக்க வேண்டும். அதற்குச் சரியான மனிதனைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அறிவற்ற மூர்க்கனை நண்பனாகக் கொள்வதற்கு பதிலாக, நண்பனே இல்லாமல் இருக்கலாம். அதற்கு சரியான நேரான மனிதனைத் தேர்ந்தெடு.

யார் சரியான நேரான மனிதன்? எண்ணம், சொல், செயல் மூன்றும் யாரிடமும் ஒன்றிசைந்து இருக்கின்றனவோ அவனே சரியான மனிதன். எண்ணுவது ஒன்றும் பேசுவது வேறொன்றுமாக இருப்பவனை யாரும் நெருங்கலாகாது. வேதாந்தத்தின்படி, மனதில் ஒன்று, சொல்வது வேறொன்று, நடப்பது மற்றொன்று என்று இருந்தால், அம்மனிதன் கெட்டவன் ஆகிறான். எண்ணம், சொல், செயல் இவை மூன்றும் ஒத்திசைந்து இருப்பவனே சரியான மனிதன்.

Proper study of mankind is Man. அத்தகைய மனிதனே உண்மையான மனிதன். நாம் சிறிதும் சிந்திப்பதில்லை. மனதின் ஆற்றலைப்பற்றிக்கூட புரிந்து கொள்வதில்லை.

## நோக்கம்

ஒரு சிறிய உதாரணம். நாய்கள்கூட மனிதனின் எண்ணங்களைத் தெரிந்து கொள்கின்றன. மனிதன் தனது ஆற்றலை இன்னும் அறியாதிருக்கிறான். ஒரு உதாரணம்:

ஒரு நாய் படுத்துக்கொண்டிருக்கிறது. நீ யோசனையில்லாமல் அதன் அருகில் வந்து தாண்டிச்செல்கிறாய். அது பேசாமல் இருக்கிறது. ஆனால் அதை அடிக்கும் நோக்கம் இருந்தாலே போதும், நீ நெருங்க ஆரம்பித்ததும், அது எழுந்து ஓடி விடுகிறது. உனது எண்ணத்தை அது புரிந்து கொள்கிறது. மனிதனின் எண்ணங்களை நாய்கள் கண்டு கொள்கின்றன. மனிதர்கள் கண்டு கொள்வதில்லை. நாம் நாயைவிடக் கேவலமாக இருக்கிறோம்.

நீ நாயாக (Dog) இருத்தல் ஆகாது. D-O-G — G-O-D இவ்வாறிருக்க வேண்டும். எழுத்துக்கள் ஒன்றே, நுழைவாயில் வேறு. D என்ற நுழைவாயில் வழியாகச் செய்யாதீர்கள். G என்ற நுழைவாயில் வழியாகச் செல்லுங்கள். அதுவே உனது முதல் இயல்பு. அதுவே ஆன்மீக சாதனைக்கு முதற்படி.

ஆன்மீக சாதனை என்பது என்ன? அது தவமோ, தப தியானமோ அல்ல. முதலில் சத்யத்தை புரிந்து கொள்.

> ந தபாம்ஸி ந தீர்த்தானாம் ந சாஸ்திரான தபஜபாம் நஹி:
> ஸம்ஸார ஸாகரோத்தாரே ஸ்வஸ்தேபே நியமம்வினா

அன்னையை, தந்தையை, குருவை கௌரவி. அவர்களுக்கு சேவை செய். முடிந்தால் அதிகம் சேவை செய். பெரியோரைக் கீழ்ப்படியாது, பெற்றோரைக் கீழ்ப்படியாது நீ என்ன ஆன்மீக சாதனை செய்தும் பயனில்லை. இறைவன் அத்தகைய சாதனையை ஏற்க மாட்டார். நீ என்ன பூஜை செய்தாலும், உயிருள்ள ஜீவராசிகளை சிறிதளவு தொந்திரவு செய்தாலும், இறைவன் உனது பூஜையை அங்கீகரிக்க மாட்டார்.

### நேசம்

முதலில் உயிருள்ள ஜீவராசிகளை நேசி. அதன் பின் இறைவனை நேசிக்கலாம். ஈஸ்வரஸ் ஸர்வ பூதானம். இறைவன் எல்லா சீவராசிகளிலும் இருக்கின்றார். ஆகவே சரியான முறையில் சரியான உணர்ச்சியுடன் மனிதரைக் கௌரவிக்க வேண்டும். நாம் எல்லோருடன் பழகினாலும், நமது க்ஷேமநலனுக்காக சில நியமங்களை அனுஷ்டிக்க வேண்டும். சில எல்லைகளை வகுத்துக்கொள்ள வேண்டும். கெட்ட பண்புள்ள ஒருவனுடன் பழகலாகாது. மனதில் அவர்களுக்கு வணக்கம் செலுத்து. தவறில்லை. யாரை நீ வணங்கினாலும், இறைவைன வணங்குகிறாய். யாரை நீ புறக்கணித்தாலும் இறைவனை புறக்கணிக்கிறாய்.

### வீணடிக்காதே

நீ மாணவனாக இருக்கும்வரையில், வேறு எவருடனும் தொடர்பு கொள்ளாதே. இங்கு மாணவர்கள் இருக்கின்றார் கள். மாணவிகளும் இருக்கின்றார்கள். மாணவர்கள் தனித்து இருக்க வேண்டும். மாணவிகளுடன் எத்தகைய தொடர்பு கொண்டாலும் அது கேவலமான குணம். நாயினும் தாழ்ந்த குணம். மாணவனாக இருக்கும்போது, இந்தத் தவறான வழியில் சென்றால் அது மிகவும் கேவலமானது. உனது பெற்றோரும் இதை ஏற்க மாட்டார்கள். பெற்றோருக்கு மகனாகப்பிறந்த பயனே வீணாகி விடும். யாராவது வாழ்க்கையை வீணடிப்பார்களா?

இறைவனை இரு கைகளாலும் நீ தொழாவிடில்,<br>
இறைவனது புகழை நீ பாடாவிடில்<br>
கருணையும் சத்யமும் உன்னிடம் இல்லாவிடில்,<br>
மானிடப்பிறவி கொண்டு என்னபயன்?

எதற்காகப் பிறவி எடுக்க வேண்டும்? சத்வ குணத்தைப் பெறுவதற்காகப் பிறவி எடுக்க வேண்டும்.

நமது கல்வியின் உட்சிறப்பு இதுவே
புத்தகத்தில் அறிவு நிரம்பியுள்ளது
தலையில் மண் நிரம்பியுள்ளது

இதுவா கல்வி? இல்லவே இல்லை. தலையிலுள்ள மண்ணை வெளியேற்ற வேண்டும். எல்லா எண்ணங்களையும் நீக்க வேண்டும். காலியான தலையை எவ்விதத்திலும் நிரப்பலாம். தலை முழுவதும் நிரம்பி இருந்தால், காற்று கூட உள் நுழையாதே? தலைமுழுவதும் காலியானால், ஆன்மீக அறிவை உட்புகுத்தலாம்.

இந்த டம்ளரில் நீர் நிறைந்திருக்கிறது. இதன் மேல் எவ்விதம் பாலை ஊற்ற முடியும்? முதலில் நீரைக் காலி செய். பிறகு பாலை டம்ளரில் ஊற்றலாம். நீரின்மேல் பாலூற்றினால் இரண்டுமே கெட்டுவிடும்.

### மகிழ்ச்சி

பெற்றோரை மகிழ்ச்சியடையச் செய்கின்ற, நிறைவடையச் செய்கின்ற, ஆனந்தமடையச் செய்கின்ற முறையில், நமது இதயத்தை அன்பால் நிரப்ப வேண்டும். பெற்றோரை ஏமாற்றினால், நீ தாழ்ந்தவரினும் தாழ்ந்தவன். அத்தகைய கல்வியால் பயனே இல்லை. இவ்வாறு படிப்பதற்கு, வீட்டிற்கு வீடு பிச்சையெடுக்கலாம்.

ஆகவே சீலத்தை, பண்பாட்டை வளர்க்க வேண்டும். நற்குணமில்லாத மகன், வித்தையில்லாத குரு, பண்பாடில்லாத நாடு, அமைதியில்லாத வாழ்க்கை, நிலவில்லாத இரவு இவற்றால் என்ன பயன்?

ஆகவே நம்மை பண்பாடு உள்ளவர்களாக வளர்த்துக் கொள்ள வேண்டும். நீங்களே நாட்டின் எதிர்காலத்தலைவர் களாக விளங்கப்போகிறீர்கள். நீங்களே நாட்டை உருவாக் கப்போகிறீர்கள். இளைஞர்கள் சரியான வழியில் செல்லாவி டில் நாடு சீர்குலைந்து விடும். செடி வளைந்தால் மரமே வளைந்து விடும். மாணவர்கள் நாட்டின் அடித்தளம்.

**மாளிகை**

வாழ்க்கை என்ற மாளிகைக்கு மாணவனே அடித்தளம். அதாவது பிரம்மசரியமே அடித்தளம். அதன்மேல் கிரஹஸ் தம், அதன் மேல் வானப்பிரஸ்தம், அதன்மேல் சந்நியாசம் என்ற அடுக்கு மாளிகை கட்டப்படுகின்றது. அடித்தளத்தில் இருப்பது பிரம்மசரியம். அது வலுவானதாக அமைய வேண்டும். அது வலுவாக இல்லாவிடில் கட்டிடமே இடிந்து விழும். முழுமையாக உடைந்துவிடும்.

இத்தகைய பருவம், பொன்மயமான பருவம். இதைத் தூசால் மூடி துருப்பிடிக்கச் செய்யலாகாது. சீலத்தை நன்கு வளர்க்க வேண்டும். பார்வையில், எண்ணத்தில், பேச்சில், செயலில் பவித்ரம், புனிதம் இருக்க வேண்டும்.

இறையன்பால் இதயத்தை நிரப்புங்கள். இதயம் ஒரு பெரிய தொட்டி. இத்தொட்டி அன்பால் நிரப்பப்பட வேண்டும். அனைத்துப் புலன்களும் திருகு குழாய்கள். (Taps). குழாய்களில் நல்ல நீரே வெளிவரும். எண்ணம் எவ்வாறோ அவ்வாறே செயலும்.

ஆகவே நம் இதயத்தை அன்பால் நிரப்ப வேண்டும். இதயம் அன்பால் நிறைந்தால் செயல் நல்லதாக அமையும். ஒரு கல்லை கிணற்றுநீரில் எறிந்தால், அலைகள் உருவாகின் றன. அவை கிணற்றின் முழு விளிம்பு வரை பரவுகின்றன. அது போல, எண்ணம் என்ற கல்லை, மனம் என்ற ஏரியில்

எறிந்தால், எண்ண அலைகள் ஏரி முழுவதும் பரவுகின்றன. கெட்ட எண்ணங்கள் மனதில் இருந்தால், கண்கள் கெட்ட தைக் காணும், காதுகள் கெட்டதைக் கேட்கும். கைகள் கெட்ட செயலைச் செய்யும். கால்கள் கெட்ட இடத்துக்குச் செல்லும். உச்சியிலிருந்து உள்ளங்கால்வரை கெட்டதே நிரம்பியிருக்கும்.

**இதயம்**

ஆகவே இதயம் முக்கியமானது. ஆனால் மாணவர்கள் ART-ஐ (கலையை) கவனிக்கிறார்கள். HEART-ஐ (இதயத்தை) கவனிப்பதில்லை. ART IS OUTSIDE HEART IS INSIDE கலை வெளியில் உள்ளது. இதயம் உள்ளிருப்பது. ART வெளியுலகத்தது. இதயம் ஆன்மீகமானது. அது ப்ரவிருத்தி இது (இதயம்) நிவ்ருத்தி. நிவ்ருத்தி மார்க்கந்தான் (அகவழி, ஆன்மீக வழிதான்) பரிபூரணமானது. பரிசுத்தமானது. இதுவே வேதாந்தத்தில் நிர்க்குணம், நிரஞ்சனம், சநாதனம், நிகேதனம், நித்ய, சுத்த, புத்த முக்த, நிர்மல ஸ்வரூபம் என்று வருணிக்கப்படுகிறது. இதயத்தைத் தூய்மையாக வைத்திருக்க வேண்டும்.

**"சித்தஸ்ய சுத்தயே கர்மஹ"** செய்யும் செயல்கள் இதயத்தை தூய்மைப்படுத்த வேண்டும்.

திருத்தொண்டாழ்வார் என்று தமிழ்நாட்டில் பக்தர் இருந்தார். சித்த சுத்தியோடு உன்னைப் பூஜை செய்கிறேன். சித்திரமே எந்தன் இராம ராமா என்றார். எவ்வளவோ சிரமப்பட்டு எனக்கு இப்பிறவி கிடைத்தது. பல பிறவிக ளின் நற்பேறாக இப்பிறவி கிடைத்தது. இது வீணாகக் கீழே விழுதல் கூடாது. இதையே மீராவும் கூறினாள்.

கடலில் குளித்தொரு முத்தெடுத்தேனே
கைநழுவ விடுவாயோ கருணையே புரிவாயோ
கருணையே புரிவாயே கதியில்லை. கிரிதாரி.

கடலினடியில் மூழ்கி நான் இந்த முத்தை எடுத்து வந்தேன். இவ்வாழ்க்கைதான் அம்முத்து. ''நான் உன்னைத் தவறவிடு என்று கூறவில்லையே'' என்கிறார் இறைவன். ''தவறவிட்டாலோ எனக்கு வேறு கதியில்லையே கிரிதாரி'' என்று கதறுகிறாள் மீரா.

பிறவி

எவ்வளவோ துன்பங்கள் அனுபவித்தபிறகு இப்பிறவி உங்களுக்குக் கிடைத்தது. பல பிறவிகள் செய்த புண்ணிய பலனாக மனிதப்பிறவி கிடைத்தது. இது தவறான வழியில் செல்லாதவாறு நீங்கள் பார்த்துக்கொள்ள வேண்டும். மனிதர்கள் மனிதர்களாக சாக வேண்டும். விலங்குகளாகச் சாகலாகாது. மனிதர்கள் தெய்வத்தன்மையுடன் திகழ வேண்டாம். மனிதத்தன்மையுடனாவது வாழ்க்கை நடத்த வேண்டும்.

இது மாணவர்கள் கற்றுக்கொள்ள வேண்டிய முதற் பாடம்.

வெளியுலகில் பலவிதமான உந்துதல்களையும் மனோ பாவங்களையும் காண்கிறீர்கள். அவர்களைப்பற்றி நினைக்க வேண்டாம். நமது நற்குணங்களை நாம் பின்பற்றுவோம். நீங்கள் சிறிய தவறு செய்தாலும், அது பெரிய தவறு என்று நினைத்துக்கொள்ள வேண்டும். ஆனால் மற்றவர்களின் குறையைப் பெரிதுபடுத்திக் கூறலாகாது.

உங்கள் குறைகள் முழுவதும் விலக்கிக் கொள்ளுங்கள். உங்கள் சீலத்தை பண்பாட்டை வளர்த்துக் கொள்ளுங்கள். அப்போதுதான் மனிதத்தன்மை முகிழ்த்து, மொட்டவிழ்ந்து, மலராகி, மலர்ச்சியுற்று நறுமணம் வீசும்.

*—பாபா*

(மதுர மதுர முரளீகன ஸ்யாமா என்ற பாடலுடன் பகவான் அருளுரையை நிறைவு செய்தார்).

*(8.7.96)*

# 12. பிரபஞ்சமே திருப்தியடைகிறது

சுகதுக்கங்களை ஒரே விதமாக பாவிக்க வேண்டும். செல்வத்தையும், வறுமையையும், பிரித்து எண்ணலாகாது. புகழ்ச்சியையும், இகழ்ச்சியையும் சமமாகக் கருத வேண்டும். இவையனைத்துமே பக்தி எனக் கூறத்தகுந்தவை.

அன்பின் வடிவங்களே! மாணவர்களே!

## இரட்டைப் பறவைகள்

இவ்வுலகில் நல்லதும், கெட்டதும், செல்வமும், வறுமையும், கீர்த்தியும், அபகீர்த்தியும் இரட்டைப்பறவைகள் போலவே கூடியிருக்கின்றன. இன்பமில்லாது, துன்பமில்லை; துன்பமில்லாது, இன்பத்துக்கு மதிப்பில்லை. இன்பத்திலிருந்து இன்பம் கிட்டுவதில்லை. துன்பத்திலிருந்தே இன்பம் கிட்டுகிறது. அதேவிதமாக, செல்வந்தன் எப்போதாவது வறியவனாகி விடுவான். வறியவன் எப்போதாவது செல்வந்தன் ஆகிவிடுவான். இன்று நீ கீர்த்தி (புகழ்) பெற்றிருக்கலாம். நாளையே அபகீர்த்தி (இகழ்) உன்னை வந்தடையலாம். கீர்த்தி, அபகீர்த்தி, இன்பதுன்பம், செல்வம், வறுமை இவற்றை சமமாக பாவித்தலே மனிதனுக்குப் பெருமை தருவது.

> "சுக துக்கே ஸமே க்ருத்வா லாபோலாபௌ ஜயாஜயௌ"

இத்தகைய பாவனையை அறிந்தவன் வாழ்க்கையை உண்மையாக அனுபவிக்க இயலும். வலி இல்லாவிடில் சுகத்தின் பெருமை புரியாது. மகிழ்ச்சியின் மதிப்பை உணர வேண்டுமெனில், ஒருவன் இடைஞ்சல்களை, துன்பத்தை முதலில் அனுபவிக்க வேண்டும். இன்பமும் துன்பமும் ஒன்று கலந்திருக்கின்றன. இவற்றைப் பிரிப்பது யாராலும்

இயலாத காரியம். சுகத்தைத் தனியாக யாரும் அறிய இயலாது. துன்பந்தான் கனிந்து பின்பு இன்பத்தில் முடி கிறது. சாதாரண மக்களுக்கு இது புரிவது கடினம். ஒரு சிறிய உதாரணம் கூறலாம். பகலில்லாவிடில் இரவு இல்லை. இரவு இல்லாவிடில், பகலுக்கு மதிப்பில்லை. இந்த உண்மையை அறியாத மனிதன், எப்போதும் மகிழ்ச்சியுடன் இருக்க வேண்டும் என்று நம்புகிறான். மகிழ்ச்சியுடன் இருக்க வேண்டும் என்ற உணர்ச்சியினால், எதிர்பார்ப்பினால், அவன் ஏமாற்றப்படுகிறான். உண்மை யான மகிழ்ச்சி என்ன என்பதைப் புரிந்து கொண்டால்தான் மறுபக்கம் என்ன என்பதைப் புரிந்து கொள்வான். உனக்கு இடைஞ்சல்கள் இருக்கும்போது, மகிழ்ச்சிக்கு மதிப்பு இருக்கும். வெயிலில் திரிந்து, களைத்து சோர்ந்த பிறகே மர நிழலின் அருமை உனக்குப் புரியும். ஏன் வலி இருக்க வேண்டும். ஏன் இடைஞ்சல்கள் இருக்க வேண்டும் என்று கேட்பவர்களுக்கு சாதாரண இயற்கையறிவு (Common Sence) இல்லை என்று கொள்ள வேண்டும்.

## இயற்கை

தற்காலக் கல்வியில் சாதாரண இயற்கையறிவு இல்லை என்று மாணவன் கூறினான். சாதாரண இயற்கையறிவு இல்லை என்பது மட்டும் இல்லை. பொது அறிவும் (General Knowledge) இல்லை. இவை இரண்டும் சூன்யமே. பசி இல்லாமல் எவ்வாறு உண்பாய். அளவுக்கு மிஞ்சிய வெப்பம் இல்லாதபோது, Air conditioner (ஏர் கண்டிஷனர்) யார் வாங்குவார்கள்? . இவை இரண்டுக்கும் இடையே வேறுபாடுஎன்ன என்று அறிந்தவன், அவற்றின் பின்னணி யையும் அறிந்துகொள்வான். எந்தத்துறையிலும் உலகியல், நீதிநெறி, உலகநெறி, ஆன்மீகம் இவற்றில் இடைஞ்சல்க ளைச் சந்தித்து வெல்பவனே புகழ்பெறுகிறான். சத்தியத்தை

விடாது பற்றிக்கொள்ள ஹரிச்சந்திரன் இடைஞ்சல்கள் பலவற்றைச் சந்திக்க வேண்டியுள்ளது. ''என்ன நேரிட்டா லும் நான் சத்தியத்தைக் கைவிடலாகாது'' என்று உறுதி பூண்டான். அவன் மனைவியை இழந்தான், மகனை இழந்தான். அரசை இழந்தான். அனைத்தையும் இழந்தான். தனியாக நின்றான். ஆயினும் சத்தியத்தை இழக்கவில்லை. அதனாலேயே அவன் சத்யஹரிச்சந்திரன் என்று புகழ் பெற்றான். இவ்வாறு துன்பப்படாவிடில் வெறும் ஹரிச்சந்தி ரனாகவே அவன் சரிதத்தில் இடம் பெற்றிருப்பான். சத்யத்தைக் கைவிடாதிருக்க, அனைத்தையும் இழந்தான். இதுவே determination மனவுறுதியாகும். இது மாணவர்களி டம் இருக்க வேண்டும். எவ்வளவு இடைஞ்சல்கள் நேரிட்டாலும், தனது இலட்சியத்தை அடைவதற்கான வழிமுறைகளை மனந்தவறாது கடைபிடித்தல் வேண்டும். இதுவே சத்யத்தை நாடுவதற்கான மனவுறுதி.

### சுகம்

துன்பங்கள் அடையும்போதுதான் சுகம் என்னவென்று புரியும். பிரகலாதன் 5 வயதுச்சிறுவன். இறைவனிடம் கொண்ட ஆழ்ந்த அன்பு காரணமாக, கடவுளையே சதா சிந்தனை செய்து கொண்டிருந்தான். அவனுக்கு துன்பத்தை அவன் தந்தை விளைவித்தார். தன் மகனைக் கொல்லவும் துணிந்தார். தந்தை கொடுமை வாய்ந்தவனாக இருந்தாலும், மகனின் ஆழ்ந்த பக்தி மனதைத் தொட்டது. அவன் பல இடைஞ்சல்களைச் சந்தித்ததன் காரணமாக, அழியாப்புகழ் பெற்றான். அவன் இடைஞ்சல்களுக்கு அடிபணியவில்லை. அவற்றை வென்று வாகை சூடினான். இடைஞ்சல்கள் மூலமாகத்தான் உங்களுக்கு பேர், புகழ், ஆனந்தம் அனைத் தும் கிடைக்கும். மனிதன் இடைஞ்சல்களையோ, துன்பங்க ளையோ சந்திக்க விரும்புவதில்லை. அவ்வாறிருப்பது

தவறு. வாழ்க்கையின் இரகசியம் இன்ப துன்பங்கள் நிறைந்தது என்று புரிந்து கொண்டவர், இவை இரண்டையும் சமமாக ஏற்றுக்கொண்டேயாக வேண்டும். இரண்டையும் வெவ்வேறாக நினைத்து அனுபவிப்பவர் நிரந்தர அமைதியை அறிந்துணர இயலாது. நிரந்தர அமைதியை அனுபவிக்க வேண்டுமென்றால், இந்த இடைஞ்சல்களையெல்லாம் கடந்தேயாக வேண்டும்.

## நல்ல பெயர்

இரு வலிகளுக்கு, துன்பங்களுக்கு இடையே உள்ள இடைவெளிதான் சுகம், இன்பம். இதைப் புரிந்து கொண்டவன் இன்பத்தின்போது துள்ளாமலும், துன்பத்தின்போது துவளாமலும் இருப்பான். தற்கால மனிதன் கேவலமான தாழ்ந்த, அற்பமான தற்காலிக இன்பங்களில் நாட்டங் கொண்டு, அவற்றை அனுபவிப்பதால் நிரந்தரமான நல்ல பெயரை இழக்கிறான். இத்தகைய நாட்டத்தால் அவனது நல்ல பெயர் கெடுகிறது. காரணம் என்ன? தாழ்ந்த எண்ணங்களின் தூண்டுதலால் தவறான திசைகளில் செல்கிறான். கலியுகத்தின் பயனோ, அல்லது தற்காலக்கல்வியின் விளைவோ, மனிதன் அற்பமான, கேவலமான அனுபவங்களுக்காக, துன்பங்களை அனுபவித்துப் பெரு முயற்சி செய்கிறான். அதே சமயம் நிரந்தர மகிழ்ச்சியைப் பெற ஒரு முயற்சியும் செய்வதில்லை.

## ஆசை

பேருந்துகளின் போக்குவரத்துடன் சாலையில் நடமாட்டம் இருக்கிறது. பேருந்துகள் ஓரிடத்திலிருந்து மற்றோரிடம் செல்கின்றன. பேருந்தில் 50 இருக்கைகள் உள்ளன. ரூ. 2 கூடக்கிடைக்கும். ஆசையால், 50 இருக்கைகளுக்குப்

பதிலாக 70 பேர் உட்கார அனுமதிக்கப்படுகிறது. Over load அனுமதிக்கப்படுகிறது. ரூ. 2 கிடைக்கும் அற்பபுத்தி யால் பேருந்தை நடத்துபவர், ரூ. 2,000 பெறுமான 'டயர்' இழக்கப்போவதை அறிவதில்லை. அது போல அற்ப விஷயங்களுக்கு ஆசைப்பட்டு மனிதன் நிரந்தரமானதை, புகழை இழக்கிறான். இளைஞன் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும்? அவன் எவ்வாறு நற்புகழை சம்பாதிக்க வேண்டும்? அவனது பார்வை எவ்வாறு அமைய வேண் டும்? அவன் எவ்வாறு, எதை செவிமடுத்துக்கேட்டல் வேண்டும்? எத்தகைய சொற்களைப் பேச வேண்டும்? இவைமூன்றையும் தன் ஆதிக்கத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். கண் இருப்பதால், எல்லாரையும் காணலாகாது. எல்லோரையும் எல்லாவற்றையும் காண்பதன் மூலம், நீங்கள் கண்ணின் புனிதத்தைக் கெடுக்கிறீர்கள். இது பாவமிகுந்த செயல். அற்ப சந்தோஷத்துக்காக ஒரு பெண் ணைக் கண்டாலோ, வேறு தகாதவற்றைக் கண்டாலோ எத்துணை அபகீர்த்தி உங்களை வந்தடைகிறது? இதனால் காண்பதற்குள்ள அதிகாரத்தையும் நீங்கள் இழக்கின்றீர்கள். எதைக்காண வேண்டுமோ அவற்றைக்காண வேண்டும். காணக்கூடாதவற்றைக் காணலாகாது.

### சமூகம்

இவ்வுலகத்தில் நடப்பவற்றைக் கூற வேண்டுவது ஸ்வாமியின் கடமையாகிறது. 25 வயதுள்ள சகோதரனும், 20 வயதுள்ள சகோதரியும் ஓரிடத்துக்கு பிரயாணம் செய்கிறார்கள். வயது காரணமாக சமூகம் அவர்கள் கணவன், மனைவியெனக் கருதலாம். கூடச் செல்வதால் எத்தனை அபகீர்த்தி? புராதனைக் கலாசாரத்தின்படி சகோதர சகோதரிகள் சேர்ந்து பிரயாணம் செய்வதில்லை. சினிமா, பீச், கடைக்குச்செல்லுதல், சகோதர சகோதரியர் மட்டும்

சேர்ந்து செல்லலாகாது. முதியவரான பெற்றோர் கூடச் செல்லலாம். அக்காலத்தில் அத்தகைய நிபந்தனை இருந்தது.

தற்காலத்தில் 60 வயதுள்ள ஒருவரும், 16 வயதுள்ள பெண்ணும் பிரயாணம் செய்யும்போது, தாத்தாவும் பேத்தியும் என்று அவர்களைக் கூறினர். ஆனால் உள்ளே கெட்ட எண்ணங்கள், கெட்ட சிந்தனைகள். வெளியுலகம் அவர்களை தாத்தா, பேத்தி என்று கருதியது. அண்ணன் தங்கையின் மனோபாவம் மிகவும் புனிதமானது. ஆனால் வயதுக்கிரமத்தின் காரணமாக அவர்களுக்கு அபகீர்த்தி வந்தடைகிறது. அத்தகைய கெட்ட பெயருக்கும் நாம் இடங்கொடுக்கலாகாது. ''சகோதரி, தனியாகச் செல், அல்லது தாயுடன் செல்'' என்று கூறல் வேண்டும்.

தாயோ, சகோதரியோ, தனியாகவோ, அல்லது அவர்கள் மட்டுமோ தனியாகச் செல்லலாகாது என்றும் கூறுகிறது புராதனைக் கலாசாரம். ஏன்? குலகௌரவத்தைக் காப்பாற்ற அவ்வாறு விதிக்கப்பட்டது. தற்கால இளைஞர் உலகத்தில் பார்வை தீயதாக உள்ளது. அவர்களது பார்வை காக்கையின் பார்வை. அது ஒரே விதமாகக் காணாது. அங்குமிங்கும் மாறி மாறிக்காணும் ஏன்? அத்தகைய பார்வை காக்கைக்கு இயல்பானது. காக்கையின் அலகு நீளமானதால், ஒரு கண் காண்பது, மற்றதற்குப் புலனாகாது. உனக்கு ஏன் அந்தப் பார்வை. உனக்கு காக்கையின் மூக்கு இல்லையே? ஏன் காக்கையின் பார்வை உனக்கு இருக்க வேண்டும். நேரான பார்வையை வளர்த்துக்கொள். இதுவே சத்திருஷ்டி, சுதிருஷ்டி, சுநேத்ரம், சுதர்ஸனம். இதுவே உனக்கு நற்பெயரை அளிக்கவல்லது.

மாணவர்கள் எப்போது சிரிக்க வேண்டும், எப்போது சிரிக்கலாகாது என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். அவர்கள் கண்டதும், புன்னகை செய்கிறார்கள். இந்த

புன்னகை அவர்களைப் பல சங்கடங்களில் ஆழ்த்துகிறது. திரௌபதி சிரித்ததால் அவளுக்குப் பல துன்பங்கள் ஏற்பட்டன.

தருமர் மய சபையொன்று நிர்மாணித்தார். அது மயனால் கட்டப்பட்டது. அது மிக்க அபூர்வமானது. கதவு இருப்பது போலத்தோன்றும். அங்கு கதவு இராது. தண்ணீர் இருப்பது போலத்தோன்றும். ஆனால் தண்ணீர் இராது. துரியோதனன் இந்த மாளிகையில் பிரவேசித்தான். அவன் கதவைக்கண்டு நேராக அங்கே சென்றான். அங்கு கதவு இல்லை. கதவு இல்லை என்று நினைத்துச் சென்ற இடத்தில் மோதிக்கொண்டான். சிறிது தூரம் சென்றபோது அங்கு தண்ணீர் இருந்தது. பார்வைக்கு சுத்தமாக இருந்த அங்கு நேரே சென்றான். நீரில் வீழ்ந்தான். அங்குள்ள பணியாட்கள் சிரித்தார்கள். யாருமே சிரிக்கத்தான் செய்வார்கள். அவர்கள் சிரிப்பதைக் கேட்டு திரௌபதி அங்கு வந்தாள். துரதிருஷ்ட வசமாக துரியோதனன் அப்போது திரும்பிப்பார்த்தான். துரியோதனன் மனதில் அசூயை நிறைந்தது. திரௌபதியைக் கண்டதும், அவள்தான் சிரித்தாள் என்று நினைத்தான். இப்போது நீ சிரித்தாயல்லவா, எல்லோரும் உன்னைக் கண்டு சிரிக்கச் செய்கிறேன் என்று நினைத்தான். எங்கு, எப்போது எவ்வாறு சிரிப்பது என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். சிரிப்பில் பலவகை உண்டு. 'ஹஸன்' என்பது புன்னகை, ''ப்ரஹஸன்'' - அஹஹ்ஹஹ் என்ற பலத்த சிரிப்பு. இது மிகவும் கெட்டது. பெண்கள் செல்லும்போது சிரித்தால் அது விபரீதத்தில் முடியும். நீ எதற்காக சிரிக்கிறாய் என்பது வேறு விசயம். ஒருவரைக் கண்டு சிரித்தால், அவர்கள் உங்கள் மனிதர்களைக் கண்டு சிரிப்பார் கள். நகரத்தில் மனிதர்கள் காரணமில்லாமல் சிரிக்கிறார்கள். கடையில் வாங்க வருவோரைக் கண்டு சிரித்துக்கொண்டே இருக்கிறார்கள். அவர்கள் உறவினரும் கடைக்குப் போக

லாம். மற்றவர்கள் அவர்களைக் கண்டு சிரிக்கலாம். Reaction, Reflection, Resound (எதிர்ச்சொல், பிரதிபலிப்பு, எதிரொலி) இவற்றிலிருந்து தப்பவே இயலாது. நீ செய்த செயலுக்கு விளைவை அனுபவித்தேயாக வேண்டும். ஆகவே நீ கடவுளிடமிருந்து விலகியிருப்பாய். கெட்ட பெயருள்ள ஒருவன் இறைவனுக்கருகில் இருக்க இயலாது. நம் பார்வை நமது ஆதிக்கத்தில் இருக்க வேண்டும். நம் சொற்கள் நமது ஆதிக்கத்தில் இருக்க வேண்டும்.

## புனித சொற்கள்

எப்போது, எவ்வாறு நாம் பேச வேண்டும்? பெண்கள் செல்லும்போது, சிலர் கேவலமான கீழ்த்தரமான சொற்களைப் பயன்படுத்துகிறார்கள். புனிதமான சொற்கள் இருக்க, அவற்றை விடுத்து கண்ட கண்டசொற்களைப் பயன்படுத்துதல் அறிவற்ற செயல். வீணாகக் கெட்ட பெயர்தான் மிஞ்சும். எல்லாரும் நகைத்து கேலி செய்யும் அளவுக்கு தாழ்ந்து விடுகிறீர்கள். பேச்சையும், பார்வையினையும் நமது ஆதிக்கத்துக்குள் வைத்திருக்க வேண்டும்.

கௌரவிக்கப்பட வேண்டுமெனில், நமது செயல்களும் மரியாதையுடன் பண்புடன் அமைய வேண்டும். நல்லவனாக இருந்தால், பிறரிடம் மதிப்புப் பெறுவாய்.

நாம் கௌரவம், அகௌரவம் இவற்றை சமமாக ஏற்றுக்கொள்ள வேண்டும். நல்லவை, கெட்டவை இவற்றை சமமாக ஏற்றுக்கொள்ள வேண்டும். புகழ், இகழ் இவற்றை சமமாக ஏற்றுக்கொள்ள வேண்டும். இதுவே சமத்துவ பாவனை எனப்படுவது. அப்போது மனிதன் மாதவனாக மாற வாய்ப்புள்ளது.

ஆனால் மனிதன் என்று கூறிக்கொள்ளும் ஒருவன், விலங்குத்தன்மையுடன் நடந்துகொண்டால், அவன் அரக்க

னாக மாறிவிடுகிறான். விலங்குத்தன்மையிலிருந்து முன் னேறி மனிதனாக மாறினான். மறுபடி விலங்குத்தன்மையு டன் இருக்கிறான். ஒருவன் முன்னேற வேண்டுமே தவிர கீழிறங்கல் ஆகாது. பல அதிகாரிகளும் கீழிறக்கம் அடைகி றார்கள். பதவி ஏற்றத்துக்குப் பதிலாக, பதவி இறக்கம் அடைகிறார்கள். காரணம் என்ன? தவறுகள் செய்வதால் பதவி இறக்கம் ஆகிறது.

### முன்னேறி வா

ஒரு சிறிய அலுவலகம் (Office). உலகியல் பணியில் பதவி ஏற்றம். அங்கேயே பதவிஇறக்கம் என்றால், இறைவனை நோக்கிச் செல்லும் பாதையில் எவ்வளவு எச்சரிக்கை வேண்டும்? புனித வழியில் நடந்து சென்றால் முன்னேற்றம் நிச்சயம். ஆன்மீக சாதனை கூடத்தேவை யில்லை. இறைவன் உமது சீலத்தைக் கண்டு மகிழ்ச்சியடை வார். இறைவனே உன்னை அழைத்து முன்னால் வா என்று கூறுவார். நீ பிரார்த்தனை செய்ய வேண்டிய அவசியம் இல்லை. அவரே உன்னை வரவேற்பார். ஏன்? நீ அவர் கூறிய வழியைப் பின்பற்றினாய். தெய்வீக உணர்வுடன் இருக்க வேண்டும். அது மிக்க அவசியம்.

இதற்கு மாறாக, கடவுள் கூறியதற்கு விரோதமாக நடந்து கொண்டால், தாழ்வடைதல் உறுதி. சாஸ்திரங்கள் தெளிவாக நீ என்ன செய்யக்கூடாது என்பதைக் கூறுகின்றன.

"பார்வையில் தீயது இருக்கலாகாது. கெட்ட சொற்க ளைப் பயன்படுத்தாதே.

*See no evil, see what is good*
*Hear no evil, hear what is good*
*Talk no evil, Talk what is good*

*Think no evil, Think what is good*
*Do no evil, do what is good*
*This is the way to God.*

தீயதைக் காணாதே, நல்லதைப்பார்; தீயதைக் கேளாதே, நல்லதைக் கேள்; தீயதைப் பேசாதே, நல்லதைப்பேசு, தீயதை நினையாதே, நல்லதை நினை, தீயதைச் செய்யாதே, நல்லதைச் செய், இதுவே கடவுளை யடையும் வழி.

## கடவுளின் ஆணை

கடவுளின் இந்த ஆணைப்படி நடந்தால், கடவுள் உன்னை வரவேற்பார். கடவுளின் ஆணைக்கு எதிராக நடந்தால் அவர் உன்னிடமிருந்து தொலைவில் இருப்பார். அதுமட்டுமல்ல உன் முகத்தைக் கூடக் காணமாட்டார். காரணம் என்ன? நீ அவருக்கு கீழ்ப்படிய மறுத்தாய். உலகில் உன் கௌரவத்தை இழந்தாய். உன் பெயரை இழந்தாய். உனது சொத்தை இழந்தாய். எவ்வாறு இறைவன் அருகில் இருப்பாய் என்று எதிர்பார்த்தாய்?

சீலத்தை, பண்பாட்டை வளர்த்துக்கொள்ள வேண்டும். சமத்துவ பாவனையை வளர்த்துக்கொள்ள வேண்டும்.

''ஸமத்வம் யோக முச்யதே'' ''யோக: கர்மஸு கௌஸலம்''.

ஸமபாவத்துடன் இருப்பதே யோகம், செயலைச் செம்மையாகச் செய்வதே யோகம்''.

உனது தூய்மையைப் பலர் குறை கூறுகிறார்கள். நீ அதற்காக மனம் தளரலாகாது. உன்னைப் பலர் புகழ்கிறார் கள். உன்மனம் அதனால் துள்ளவும் கூடாது. உன்னிடம்

குறையில்லாதபோது நீ ஏன் கவலைப்பட வேண்டும்? நான் தவறு செய்யவில்லை. நான் ஏன் தளர்ச்சியடைய வேண்டும்? நான் தளர்ச்சியடையாமல் இருப்பேன். அது என்னுடையதல்ல. இது எனது குற்றமல்ல. இத்தகைய தைரியம் உன்னிடம் இருக்க வேண்டும். தைரியத்தை இழக்காமல் இருக்க, நாம் நேர்வழியில் செல்ல வேண்டும்.

## சிரிப்பு

மாணவர்களும் சில சமயங்களில் பலமாகச் சிரிக்கிறார் கள். நகைச்சுவையான பேச்சைக் கேட்கிறார்கள். நாடகத் தைப் பார்க்கிறார்கள். அப்போது சிரிக்கிறார்கள். கூட்டத்தில் இருக்கும்போது, ஓரளவு கட்டுப்பாட்டுடன் இருக்க வேண் டும்.

பீஷ்மர் அம்புப்படுக்கையில் 52 நாட்கள் கிடந்தார். கிருஷ்ணன், பாண்டவர்கள் அவரிடம் சென்று அவரிடம் உரையாடி அறிவுரை கேட்க வேண்டுமென்று விரும்பினார். பீஷ்மரின் பெருமையைக் கேள்வியுற்ற முனிவரும், ரிஷிக ளும் வந்தனர்,. உறவினர் ஒரு பக்கம் நின்றனர். கௌரவர் கள் யாருமில்லை. அவர்களனைவரும் இறந்து விட்டனர். பாண்டவர்கள் மட்டுமே இருந்தனர். சகுனியும் இல்லை. கர்ணனும் இல்லை. பஞ்ச பாண்டவர் மட்டுமே இருந்தனர். விதுரனும் அங்கு வந்தார். திரௌபதி எப்போதும் பாண்ட வர்கள் கூடவே இருந்தாள். அவ்வாறே பாண்டவர்களும் அவள் கூடவே இருந்தனர். திரௌபதியும் அங்கு வந்து உட்கார்ந்தாள். பிதாமகரை நமஸ்கரித்து விட்டு உட்கார்ந் தாள். திரௌபதி அவரிடம் மிகுந்த மரியாதையுடன் இருந்தாள். அவள் அக்னி (நெருப்பு)யிலிருந்து பிறந்தவள். கிருஷ்ணனும் அவள் பண்பாட்டை மெச்சினார். கிருஷ்ணன் அவளைப் பதிவிரதை என்று மெச்சினார். ஐந்து கணவன்

மார்களைக் கொண்ட பதிவிரதை என்று அவளை மெச்சி னார். அனைவரும் சிரித்தனர். நான் கூறுவதன் காரணத்தைக் கேளுங்கள் என்று கூறினார் கிருஷ்ணன்.

கணவன்மார் கூறியதை அவள் எதிர்த்ததில்லை
சேவை செய்ய நேரமில்லை என்று கூறியதில்லை
அத்தகைய சேவையில் மிகுந்த மனநிறைவடைந்தாள்

ஆகவே அவள் சிறந்த பதிவிரதை என்று கூறினார்.

**பாண்டவர்**

பஞ்ச பாண்டவர் யார்? பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் எனப்படும் பஞ்சப்பிராணன் களே பஞ்ச பாண்டவர். இவையே கணவன்மார்கள். ஒவ்வொன்றும் எசமானர், வாயுபுத்திரன் பீமன். இந்திரனின் மகன் அர்ஜுனன். உலகியல் வழக்கிலுள்ள ஐந்து கணவர்க ளல்லர்.

அச்சமயம் பீஷ்மர் தர்மத்தைப்பற்றி உபதேசித்தார். 'தரும புத்திரா, நீ வெற்றி பெற்றவன். கிருஷ்ணனின் அருளால் நீ இந்த நிலைக்கு வந்தாய். கிருஷ்ணனை யாரென்று நினைத்தாய். உன் மைத்துனன் என்று நினைத் தாயா? அல்ல. ஸ்ரீமந்நாராயணன்தான், கிருஷ்ணன். உடல் சம்பந்தமான உறவு முறையை நம்பாதே. நீ அவருடன் ஆடிப்பாடிக் களித்து ஆனந்தமடைந்தாய். நீ எத்தகைய அதிர்ஷ்டசாலி! என்று கூறி சாந்திபர்வத்தை உபதேசித்தார். பாண்டவர்கள் கவனமுடன் கேட்டார்கள்.

திரௌபதியால் மனதை அடக்க இயலவில்லை. அவள் சிரித்தாள், கேலியாக அல்ல. அவமானத்தாலும் அல்ல. அவர் கூறியதைப் புகழ்ந்து 'ஹா ஹா' என்று சிரித்தாள். திரௌபதி பலமாகச் சிரித்ததால், பீமனுக்குச் சினம்

மூண்டு, கையை மடக்கினான். தருமத்தின் வடிவான தருமபுத்திரர் அவளை விழித்து நோக்கினார். அர்ஜுனன் வெறுப்பு கொப்பளிக்க, உறுத்துப்பார்த்தான். உனக்கு இயல்பான நடைமுறை அறிவும் (Common sense) பொது அறிவும் (General knowledge) இல்லை? என்ற கருத்தை அவன் கண்கள் தெரிவித்தன.

**பீஷ்மர்**

அனைத்தும் அறிந்த பீஷ்மர் கூறினார், ''தருமபுத்திரா, பீமா, அர்ஜுனா, நகுல சகாதேவா, திரௌபதியைத் தவறாக எண்ணாதீர்கள். அவள் மிகப்புனிதமானவள். அவளிடம் ஒரு குறையும் நீங்கள் காண இயலாது. அவள் காரணமில்லாமல் சிரிக்கப்போவதில்லை. என்ன காரணம் என்று கேட்கலாம்'' என்று கூறி, ''அம்மா திரௌபதி, இங்கு வா, நீ சிரித்ததன் காரணத்தைக் கூறு. இங்குள்ள அனைவரும் காரணத்தை அறியட்டும்'' என்றார். திரௌபதி அதற்கு, ''பிதாமகரே, நீங்கள் கூறுவதில் எனக்கு மிகுந்த மரியாதையுண்டு. நீங்கள் சத்யத்துக்காக வாழ்க்கையை அர்ப்பணித்தீர்கள். தருமத்துக்காக வாழ்ந்து வாழ்க்கையை அர்ப்பணித்தீர்கள். நான் அவற்றிற்காக சிரிக்கவில்லை. ஆனால் நீங்கள் கௌரவர்களையே ஆதரித்தீர்கள். கௌரவ சேனாபதியாக இருந்தீர்கள். அவர்களுக்கு ஏன் இந்த தரும நீதியை போதிக்கவில்லை? சத்யமும், தர்மமும் நிறைந்த என் கணவன்மார்களுக்கு தங்கள் உபதேசம் தேவையில்லை. எனது கணவன்மார்கள் சத்யமும், தர்மமும் அறிவார்கள். சத்யத்தையும் தருமத்தையும் அறியாத கௌரவர்களுக்கு தாங்கள் ஏன் கூறவில்லை? யாருக்குத் தங்கள் உபதேசம் தேவையில்லையோ அவர்களுக்குக் கூறுகிறீர்களே இது ஏன்?'' என்று வெளிப்படையாகக் கூறினாள். 'இவ்வாறு செய்தது தங்களுக்குச் சரியல்ல'.

கௌரவர்கள்

பீஷ்மர் அவள் கூறியதை நன்கு புரிந்து கொண்டார். அவர் கூறினார். ''நான் கௌரவர்களுடனேயே எப்போதும் இருந்தேன். அவர்களுடனே வாழ்ந்தேன். அவர்கள் இட்ட உணவையே உண்டேன். எனது தரும எண்ணங்களெல்லாம் இதயத்தின் அடித்தளத்திலேயே இருந்தன. மேற்புறத்தில் பாவ எண்ணங்களே மிகுந்திருந்தன. போரில் அர்ஜுனன் விட்ட அம்புகளின் விளைவாக, பாவ இரத்தம் முழுவதும் வெளியே வந்து விட்டது. புதிய இரத்தம் ஊறியது. அது புனித இரத்தம். அது தரும எண்ணங்களை மேற்கொண்டு வந்தது. அவற்றை உன் கணவன்மார்களுக்கு போதிக் கிறேன்.

முன்பு நான் உண்ட உணவின் விளைவாக பாவ எண்ணங்களே மலிந்திருந்தன. நானும் பல தவறுகள் இழைத்தேன். அவர்களுக்குத் தர்ம போதனை செய்யும் நிலையில் நான் இல்லை. இப்போது அவ்வாறல்ல''.

மிகச்சிறந்த மனிதர் பீஷ்மர். இருந்தாலும் உண்ட உணவின் விளைவாக, பாவ எண்ணங்கள் அவரிடம் இருந்தன. Food (உணவு) எவ்வாறோஅவ்வாறே HEAD (எண்ணங்கள்) இவ்வாறு கூறி, தன் குற்றத்தை ஒப்புக் கொண்டார் பீஷ்மர். ''திரௌபதி சிரித்ததில் ஒரு தவறும் இல்லை. எனது தவறுதான் அவளைச் சிரிக்கச் செய்தது''. அங்கு கூடியிருந்த அனைவரும் அரசர்கள், முனிவர்கள் சாதுக்கள் உட்பட - உணவுக்கு இத்துணை ஆற்றலா என்று அதிசயித்தனர்.

சிரிப்பதற்கும் காரணம் தேவை. திரௌபதி சிரித்ததற்கு ஒரு காரணம் இருந்தது. அதற்கு ஒரு உரிமையும் இருந்தது. அவள் தன் வாழ்க்கையை தருமத்துக்காக அர்ப்பணித்தவள்.

முனிவர்

ஒரு சமயம் துர்வாசர், தனது சீடர்களுடன் காட்டுக்கு வந்தார். பாண்டவர்களை அவமானப்படுத்தும் நோக்கத்துடன் வந்தார். அவர் பெரும் முனிவர். ஆயினும் அவரால் யாருக்கும் துன்பம் விளைவிக்க இயலவில்லை. தருமபுத்திரர் திரௌபதியிடம், ''திரௌபதி, துர்வாசர் ஆயிரக்கணக்கான சீடர்களுடன் இங்கு வந்திருக்கிறார். அவருக்கு எவ்வாறு உணவளிப்பது? என்று கேட்டார். ''இக்கரங்கள் லட்சக்கணக்கானவர்களுக்கு உணவளித்திருக்கின்றன. இப்போதோ உனக்கு நான் உதவி செய்ய இயலவில்லையே'' என வருந்தினார். திரௌபதி கூறினாள்: ''கவலைப்படாதீர்கள், ஆபத்பாந்தவர் இருக்கின்றார். அனாத ரட்சகர் இருக்கின்றார். நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள்'' என்று கூறி கிருஷ்ணனைப் பிரார்த்தனை செய்தாள். ''கிருஷ்ணா! இந்தக்கணத்தில்உன்னைத்தவிர வேறு யாரும் எங்களுக்கில்லை. துர்வாசர் சினம் மிகுந்தவர். அவரால் என் கணவன்மாருக்கு எந்த துன்பமும் விளையலாகாது. எனக்கு என்ன நேர்ந்தாலும் பரவாயில்லை. அவர்களுக்கு துன்பம் நேராமல் நீதான் காப்பாற்ற வேண்டும்''.

அக்கணமே கிருஷ்ணன் அங்கு தோன்றினார். சாதாரண மனிதன் போல கிருஷ்ணன் பேசினார். ''வெகு காலமாக உங்களைக் காண வேண்டுமென்று நினைத்தேன். இப்போது அதனால்தான் இங்கு வந்தேன். உங்கள் எல்லாரையும் காண எனக்கு மிகவும் மகிழ்ச்சி. திரௌபதி! எனக்கு மிகவும் பசியாக இருக்கிறது''. 'துர்வாசருக்கே கொடுப்பதற்கு எங்களிடம் உணவே இல்லையே, உனக்கு என்ன கொடுப்பது. நீயோ உணவு கேட்கிறாய் என்ன செய்வது? நாங்களே இப்போது கந்தமூலாதி பழங்களைத் தேடுகிறோம். என்

உயிரைக் கொடுக்கவும் நான் தயார். என்ன செய்வதென்றே புரியவில்லை. நீயே சொல் கிருஷ்ணா''.

''திரௌபதி! உள்ளே இருக்கும் பாத்திரத்தைக் கொண்டு வா''. திரௌபதி என்ன செயல் செய்தாலும், அது சுத்தமாக இருக்கும். அவள் எல்லா பாத்திரங்களையும் சுத்தமாக ஒழுங்காக வரிசையாக வைத்திருப்பாள். ''கிருஷ்ணா, எல்லா பாத்திரங்களையும் சுத்தமாகத் துலக்கி விட்டேன். அவற்றில் ஒன்றுமில்லை'' என்றாள். எந்தச்செய லையும் முழுமையாகச் செய்வது திரௌபதியின் சுபாவம் (இயல்பு). அன்று அவள் கீரை சமைத்திருந்தாள். கிருஷ் ணன் பாத்திரத்தின் விளிம்பில் ஒரு சிறு இலைத்துண்டைக் கண்டார். ''இதை எனக்குக் கொடு'' என்று கேட்டார். ''இதை உனக்கு அர்ப்பணிக்கிறேன் கிருஷ்ணா!'' என்றாள். கிருஷ்ணன் ''அக்ஷயம்'' (அளவில்லாது பெருகட்டும்)'' என்றார்.

## பிரபஞ்சமே திருப்தி

கிருஷ்ணனின் பசி முழுவதும் அடங்கிற்று. இறைவன் திருப்தியடைந்தால்,

பிரபஞ்சமே திருப்தியடைகிறது.
''இறைவன் மறுத்தால், யாரும் உன்னை ஏற்றுக் கொள்ளார்.
இறைவன் சம்மதம் என்றால் அனைவரும் சரி என்பர்.

துர்வாசருக்கும் அவரது சீடர்களுக்கும் வயிறு நிரம்பிவிட் டது. ஆகவே அவர்கள் இவர்களைக் காண வராது, திரும்பிச்சென்று விட்டார்கள். திரௌபதியின் பக்தி பிரபா வம் அத்தகையது. இறைவனது அருளை, அவளது பக்தி

நேரே வரவழைத்துக் கொண்டது. அவளது உயரிய தன்மையை கிருஷ்ணனே மெச்சும்படி இருந்தாள்.

இவரிடமிருந்தும், அவரிடமிருந்தும் நற்பெயர் வாங்குவதைக் குறிக்கோளாகக் கொண்டு வேலை செய்யலாகாது. உலகியல் செல்வங்களுக்காக நாம் வேலை செய்யலாகாது. இறைவனது அருளைப்பெற, பணிபுரிய வேண்டும். இறைவன் திருப்தியடைந்தால், உலகமே திருப்தியடையும். இறைவன் உன்னை நேசித்தால், உலகமே உன்னை நேசிக்கும். தியாகராஜர் பாடுகிறார். "ஓ ராமா, உனதருளின் பலம் எனக்குக் கிடைத்தால், நவக்கிரகங்களையும் என்னால் ஆதிக்கம் கொள்ள இயலும்".

இறைவன் அருளைப்பெற வேண்டுமானால், சுக-துக்கம், இலாப-நஷ்டம், புகழ்-இகழ் இவையனைத்தையும் சமமாகப் பாவிக்க வேண்டும். இறைவனது நாமத்தை எப்போதும் உச்சரிக்க வேண்டும். இறைவனது அருளுக்குப் பாத்திரமாக வேண்டும். இறைவனது அருளைப் பெற்றால், உலகில் அனைத்தையும் பெற்றதாகும். இறைவனது அருள் பெற சமத்துவ பாவனையை வளர்க்க வேண்டும்.

—பாபா

*(கோவிந்தா கோபால பிரபு கிரிதாரி என்ற பாடலுடன் அருளுரையை நிறைவு செய்தார்).*

*(9.7.96)*